ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# இராமபாணம்

## (இரண்டாம் தொகுதி)

நூலாசிரியர்
"ஆழ்வார் திருவடிப்பொடி"
சே. பத்மநாபன், B.A., (Eng.)

பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம் :
ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L.,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்.
5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ ரா. ஸ்ரீ கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.



விலை ரு. 30] [தபால் கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை

## ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
## [ஸுதர்சனர்]

கடந்த ஐந்து வருடங்களாக நம்முடைய நண்பர் ஸ்ரீ சே பத்ம நாபன் (இரும்பாநாடு போஸ்ட், ஏம்பல் வழி, புதுக்கோட்டை மாவட்டம்-622 204) அவர்கள் பொதுஜனப் பத்திரிகைகளில் வெளிவரும் விஷ்ணு, வைஷ்ணவ த்வேஷப் பிரச்சாரங்களைக் கண்டித்து ராமபாணம் என்ற தலைப்பில் ஸுதர்சனத்தில் எழுதி வருவது வைணவ உலகம் அறிந்ததே. வைணவ உலகில் இவ ரது ராமபாணக் கட்டுரைகளுக்கு ஒரு தனி ரசிகர் மன்றமே உண்டு என்று சொல்லலாம். விஷ்ணு வைஷ்ணவ த்வேஷிகளைக் கண்டிக்கும் விஷயத்தில் இவரது அணுகுமுறை சற்றுக் கடுமை யாக இருப்பதால் இவருடைய கட்டுரைகள் சிலரை எரிச்சலடை யச் செய்துள்ளனர் என்பதும் உண்மையே. அதனால் அவ்வப் போது இவருடைய கட்டுரைகளுக்கு சில கண்டனங்களும் வரு வது உண்டு. ராமபாணம் ராம பக்தர்களுக்கு அரணாகவும் ராம த்வேஷிகளுக்கு யமனாகவும் இருப்பதுபோல் ராமபாணக் கட்டுரை கள் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷிகளுக்கு ம்ருத்யுவாகவும் வைஷ்ணவர்களுக்கு நல்ல வழிகாட்டியாகவும் இருக்கிறது என் பதில் வியப்பில்லை.

உண்மையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ள இயலாதவர் களும், தைரியமில்லாதவர்களுமே ராமபாணத்தின்மீது கண்டனக் கணைகளை வீசுகின்றனர். அவையெல்லாம் ராமபாணத்தின் எதி ரில் நிற்குமோ! இந்த ராமபாணக் கட்டுரைகளின் முதல் தொகுதி 2002-ல் வெளியிடப்பட்டது. அதன் இரண்டாம் தொகுதி தற் போது நூலாக வெளியிடப்படுகிறது. வைணவ அன்பர்கள் இதைப் பெற்றுப்படித்து, மற்ற வைணவர்களுக்கும் பிரசாரம் செய்து, அவர்கள் வழிதவறிப் போகாமல் தடுப்பதுடன் வைண வத்தின் மேன்மையை உலகறியச்செய்யவேண்டும். இது ஒவ் வொரு வைணவரின் கடமையாகும்.

இங்ஙனம்,
ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்.
[ஸுதர்சனர்]

ஹிரண்ய கசிபுவைக் கொன்ற பின்பு நரஸிம்ஹத்தின் கோபம் அடங்கவில்லை. இதைக்கண்ட தேவர்கள் பயந்து ப்ரஹ்மாவை சரணடைந்தனர். பிரஹ்மா சிவனிடம் சென்று "நரஸிம்ஹத்தின் கோபத்தை நீரே அடக்கவேண்டும்" என்றார். அதற்கு சிவன், "உம்மிடமிருந்து தோன்றியவன் நான். உம்மைப் பெற்றவர் நரஸிம்ஹர். ஆகவே என்னால் இயலாது. இருப்பினும் ஒரு உபாயம் உள்ளது. சில பிராணிகளுக்கிடையில் இயற்கையிலேயே விரோதம் உண்டு. எலிக்குப் பூனை, கீரிக்குப் பாம்பு, பசுவுக்கு புலி, யானைக்கு சிங்கம் என்ற வகையில் சிங்கத்துக்கு சரபம் விரோதி. ஆகவே சரபத்தை சிருஷ்டித்து அதை நாம் அதிஷ்டானம் செய்து நரஸிம்மத்திடம் அனுப்பினால் ஒரு வேளை அதன் கோபம் குறையலாம் என்றார். அதன்படி சரபம் என்ற ஒரு பயங்கரப் பறவையை சிருஷ்டித்து அதன் மூக்கில் சிவன் இருந்துகொண்டு மற்ற தேவர்களை அதன் உடலில் பல பாகங்களில் வைத்து அனுப்பினார். அகிலமே நடுநடுங்க அந்த சரபப்பக்ஷி நரஸிம்ஹத்தை எதிர்த்து வந்தது. நரஸிம்ஹத்திற்கும் சரபத்திற்கும் கடும் போர் நடந்தது. முடிவில் அந்த சரபத்தை நரஸிம்ஹர் தன் கூரிய நகங்களால் கிழித்துக் கொன்றுவிட்டார். இதைக்கண்ட தேவர்கள் மகிழ்ந்து நரஸிம்ஹத்தைத் துதித்தனர். இவ்விஷயம் ப்ரஹ்மாண்ட புராணம் அஹோபில மாஹாத்மியம் எட்டாம் அத்யாயத்தில் வருகிறது. இதனை விளக்கும் பிரஹ்மாண்ட புராண சுலோகங்கள் பின் வருமாறு :—

**ததః க்ருத்₃தே₄ா மஹாகாயோ ந்ருஸிம்ஹோ பீ₄ம நிஃஸ்வநஃ |**
**ஸஹஸ்ரகரஜைஸ்தீக்ஷ்ணைஸ்தஸ்ய கா₃த்ராணி பீட₃யந் ||**
**ததஃ ஸ்புரச்ச₂டாசோடோ ருத்₃ரம் ஶரப₄ரூபிணம் |**
**வ்யதா₃ரயந்நகை₂ஸ்தீக்ஷ்ணை: ஹிரண்ய கசிபும் யதா₂ ||**
**நிஹதே ஶரபே₄தஸ்மிந் ரௌத்₃ரே மது₄நிஷூ₃தநா |**
**துஷ்டுவுஃ புண்ட₃ரீகாக்ஷம் தே₃வாஃ தேவர்ஷயஸ்ததா₂ ||**

அதன்பின் நரஸிம்ஹர் பிரஹ்மாவை நோக்கி "சதுர்முகரே! உண்மையில் நமக்குக் கோபம் இல்லை. அந்தந்தக் காரியம் செய்கிறபோது அதற்குத் தக்கபடி கோபம் கொள்கிறோம். தற்போது சரபம் கொல்லப்பட்டுவிட்டது. ஆகவே என் கோபம் செயற்கையானது" என்றார். பிரஹ்மாண்ட புராணத்தில் வருகிற இவ்விஷயப்படி பார்த்தால் சிவன் நரஸிம்ஹத்தை அடக்க சரப

உருக்கொண்டது உண்மைதான். ஆனால் இதன் மேல்தான் சைவர்கள் கதையை மாற்றி, தங்களுக்கு சாதகமாகச் சொல்லிக் கொள்கின்றனர். உண்மையில் நரஸிம்ஹம்தான் சரபத்தைக் கொன்றதே தவிர சரபம் நரஸிம்ஹத்தைக் கொல்லவில்லை.

அது மட்டுமின்றி ஸ்ரீ வராஹபுராணத்திலும் இக்கதையைச் சொல்லும் பிரஸித்தமான ச்லோகம் ஒன்று உள்ளது. அதாவது—

ஹந்துமப்$_1$யாக$_3$தம் ரௌத்$_3$ரம் ஶரப$_4$ம் நரகேஸரீ।
நகை$_2$ர் விதா$_3$ரயாமாஸ ஹிரண்ய கசிபும் யதா$_1$ ||

என்பது அது. "ஸ்ரீநரஸிம்ஹன் தன்னைக் கொல்ல வந்த சரபத்தை, ஹிரண்யகசிபுவைக் கொன்றதுபோல் நகங்களால் கிழித்துக் கொன்றான்" என்பது இதன் பொருள். ஸாத்விக புராணங்களில் காணப்படும் இந்த வரலாற்றையே ராமாநுஜரின் சீடரான கூரத்தாழ்வான் பஞ்சஸ்தவத்தில் "ஶரப$_4$: ஶலபா$_4$ப$_1$ ப$_3$பூ$_4$வ" [சரபம் சலபம் (விட்டில் பூச்சி) போல் நரஸிம்மச் சோதியில் பொசுங்கிற்று] என்று பாடியிருக்கிறார்.

வேதோபப்$_3$ரும்ஹணங்களான ஸாத்விக புராணங்களில் உண்மை இவ்வாறு இருக்கும்போது கதையின் போக்கையே மாற்றி சரபம் நரஸிம்ஹத்தைக் கொன்றதாகக் கதைவிடுகிறார்கள் சைவர்கள். இப்போது பார்வதியும் பெண் சரபமாக மாறி நரஸிம்ஹத்தை அடக்கியதாகக் கதைவிடத் தொடங்கிவிட்டார்கள். இது வெறும் விஷ்ணு த்வேஷ உணர்வின் வெளிப்பாடன்றி வேறில்லை. ஸ்ரீமத் பாகவதம், விஷ்ணு புராணம், மஹாபாரதம், கம்பராமாயணம், வால்மீகி ராமாயணம், காளிதாசன் முதலிய சிவபக்த வடமொழிக் கவிஞர்களின் படைப்புகள், பகவானின் பல்வேறு அவதாரங்களைக் கூறும் நமது தமிழ்ச்சங்க நூல்கள். இவை எதிலுமே சரபம் நரஸிம்ஹத்தைக் கொன்றதாகக் கூறப்படவில்லை. அப்படியிருக்கும்போது கட்டுரை ஆசிரியர் ஆதாரமின்றி அபத்தமாக எழுதியுள்ளார். மேலும் இந்தக்கட்டுரைக்காரர் "நரஸிம்ஹத்தை அடக்கிய ப்ரத்யங்கரா தேவியை வழிபட்டால் பேராபத்துக்களும் விலகும்" என்று எழுதுகிறார்.

இன்று சிவாத்வைதிகளும் சாக்தர்களும் தங்களின் முன்னோடி ஆசார்யராகக் கற்பனை செய்துகொள்ளும் ஆதிசங்கரர் ஒரு பரம வைணவர். அவரைப் பற்றி இவர்கள் சொல்லும் வரலாறு பின்வருமாறு:— அவரது வாழ்நாளில் ஒரு சமயம் ஒரு பேராபத்து வந்த பொழுது அவர் ஸ்ரீந்ருஸிம்ஹரை மானஸிகமாக த்யானித்து ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம் என்று ஒரு ஸ்தோத்ரம் செய்துள்ளார். அதிலிருந்து ஒரு ச்லோகம் பின்வருமாறு:—

**ப்₃ரஹ்மேந்த்₃ர ருத்₃ர மருதர்க்க கிரீடகோடி**
**ஸங்க₄ட்டிதாங்க்₄ரீகமலாமல காந்திகாந்த |**
**லக்ஷ்மீலஸத்குசஸரோருஹ ராஜஹம்ஸ**
**லக்ஷ்மீந்ருஸிம்ஹ! மம தே₃ஹி கராவலம்பம் ||**

இதன் பொருள்: ப்ரஹ்மா, ருத்ரன், மருத், ஸூர்யன் இவர்களெல்லாம் தங்கள் தலைகளில் ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் திருவடி படும்படி விழுந்து வணங்குகிறார்கள். அதனால் பரிசுத்தமான தாமரைப் புஷ்பம் போல விளங்குகின்றன அவன் பாத கமலங்கள். அப்பொழுது அவனும் அழகாக விளங்குகிறான். தாமரை மலரில் விளங்கும் ராஜஹம்ஸம்போல் மஹாலக்ஷ்மியின் திருமார்பில் அவன் விளங்குகிறான். அப்படிப்பட்ட லக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் ஆபத்தில் எனக்குக் கைகொடுக்கவேண்டும்.

இவர்கள் வரலாற்றின்படி ருத்ரனே ந்ருஸிம்ஹத்தின் திருவடியில் விழுந்து வணங்குவதாக ஆதிசங்கரர் கூறுகிறார். அப்படியிருக்கும்போது அந்த ருத்ரன் சரபமாக மாறி ந்ருஸிம்ஹத்தை எப்படி வதம் செய்திருக்க முடியும்? சைவர்கள் கூறும் சரபக் கதையை அறிவுள்ளவர்கள் ஏற்றுக்கொள்வார்களா? இவர்கள் கூறும் சரபக்கதை உண்மையாக இருந்திருந்தால் ஆதிசங்கரர் தனக்கு ஆபத்து வந்தபோது ந்ருஸிம்ஹத்தை வணங்காமல் சரபத்தைத் தொழுது சரபத்தின்மீது அல்லவா ஸ்தோத்ரம் செய்திருப்பார்! அல்லது ப்ரத்யங்கரா தேவி மீது அல்லவா ஸ்தோத்ரம் செய்திருப்பார்! இதிலிருந்தே சரபம், பிரத்யங்கராதேவி ந்ருஸிம்ஹத்தைக் கொன்றதாகக் கூறும் கதை சைவர்களால் கற்பிக்கப்பட்ட கட்டுக்கதை என்பதை உணரமுடிகிறதல்லவா?

இந்தக் கட்டுரை ஆசிரியர் இன்னொரு கதை ஒன்றையும் அளக்கிறார். அதாவது—இந்திரஜித் நிகும்பலை யாகம் செய்யும் போது பிரத்யங்கராதேவியைத்தான் வழிபட்டானாம். அந்த யாகம் ஆஞ்சனேயரால் தடைபட்டு விட்டதாம். பிரத்யங்கராதேவியை வழிபட்டால் எதிலும் வெற்றி கிடைக்கும் என்றால் இந்திரஜித்தின் யாகம் ஏன் வெற்றியடையவில்லை? சரபமாக வந்த சிவனை வழி பட்ட ராவணனும், பிரத்யங்கராதேவியை வழிபட்ட இந்திரஜித்தும் நரஸிம்ஹரான ஸ்ரீராமபிரானிடம் தோல்வி கண்டனர். ஸ்ரீராம பிரானைச் சரணடைந்த விபீஷணன் இன்றும் வாழ்வதாக ராமா யணம் கூறுகிறது.

ஆகவே கட்டுரையாசிரியர் கூறிய கருத்துக்கள் முற்றிலும் அபத்தக் களஞ்சியமாகும். கட்டுரையாசிரியரின் கருத்துக்கள் வெறும் விஷ்ணுத்வேஷ உணர்வால் எழுந்தவையேயன்றி உண்மையல்ல, அதனால் இவ்வாறு எழுதுவது வன்மையாகக் கண்டிக்கத்தக்கது.

"ஞானமணி" ஜூன் 2002 இதழில் 'ஐந்து யக்ஞம்' என்ற தலைப்பில் சிருங்கேரி சங்கராசார்யார் கூறியதாகச் சில கருத்துக் கள் வெளியிடப்பட்டுள்ளன, அதில் "சிவன்—விஷ்ணு இவர் களில் பேத புத்தி வைத்தவன் வயிற்று நோயால் வருந்துவான் என்று சாஸ்திரம் கூறுகிறது. ஆகவே சிவனையும் விஷ்ணுவை யும் பேதத்துடன் பார்க்கக் கூடாது" என்று கூறப்பட்டுள்ளது. ஆதிசங்கரரைத் தங்கள் ஆசார்யராகக் கூறிக்கொள்ளும் சிருங் கேரி பீடாதிபதி இவ்வாறு பேசுவது வெட்கக்கேடு. சிவன்— விஷ்ணு இவர்களில் பேதபுத்தி வைத்தவன் வயிற்றுநோயால் வருந்துவான் என்று எந்த சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது? ஆதாரமில்லாமல் பேசுகிறார் பீடாதிபதி.

"வேதாத் ஶாஸ்த்ரம் பரம் நாஸ்தி நதைவம் கேஶவாத் பரம்" [வேதத்தைவிடப் பெரிய சாஸ்திரம் எதுவும் இல்லை. கேசவனை விடப் பெரிய தெய்வமில்லை] என்கிறார் ஸ்ரீவியாஸர். அந்த வேதத்தின் விளக்கமான மஹாபாரதத்தில் அவரே

ப்₃ரஹ்மாணம் ஶிதிகண்ட₂ஞ்ச யாஶ்சாந்யா தே₃வதா: ஸ்ம்ருதா: |
ப்ரதிபு₃த்₃த₄ா: ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப₂லம் ||

என்று கூறுகிறார். இதன் பொருள் :— 'ப்ரஹ்மா, ருத்ரன், இந்திரன் முதலிய மற்ற தேவதைகளை விவேகம் உள்ளவர்கள் வணங்கமாட்டார்கள். அவர்களால் தரப்படும் பலன்கள் அல்ப மானது. விவேகிகள் விரும்புவது மோக்ஷம்; அதைத் தர வல்லவன் ஸ்ரீமந்நாராயணனே'' என்பது.

ஹரியும் சிவனும் ஒன்று என்று கூறுபவர் எப்படிப்பட்டவர்கள் என்பதை பிரஸித்தமான ஸ்லோகம் ஒன்று கூறுகிறது.

**யேது ஸாமாந்ய ப₄ாவேந மந்யந்தே புருஷோத்தமம் |**
**தேவை பாஷண்டி₃நோ ஜ்ஞேயா: ஸர்வகர்ம ப₃ஹிஷ்க்ருதா: ||**

''புருஷோத்தமனான எம்பெருமானை மற்ற தேவதைகளோடு ஒன்றாகவோ சமமாகவோ எண்ணுபவர்கள் பாஷண்டிகள் என்று அறியத்தக்கவர்கள். இவர்கள் வைதிகமான காரியங்கள் எதையும் செய்யத் தகுதியற்றவர்கள்''—இதுவே இந்த ஸ்லோகத்தின் பொருள்.

* இந்தப் பீடாதிபதியின் பரமாசார்யரான ஆதிசங்கரர் தமது ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களில் ''விஷ்ணுவே ஸகுண ப்ரஹ்மம்'' என்றும், ''மற்ற தேவதைகள் எல்லாம் விஷ்ணுவைவிடத் தாழ்ந்தவர்களே; விஷ்ணுவை உபாஸித்தால் தான் மோக்ஷம் பெறமுடியும்' என்றும் மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறார். அவர் வழி வந்தவர்களாகத் தங்களைக் கூறிக்கொள்ளும் இந்தப் பீடாதிபதி 'சிவனுக்கும் — விஷ்ணுவுக்கும் பேதம் கல்பிக்கக் கூடாது' என்று கூறுவது தன் ஆசார்யரின் கொள்கைக்கு முரணாகப் பேசுவது ஆகும். ஆதிசங்கரர் தம் பாஷ்யங்களில் நாராயணனே பரமாத்மாவான ஸகுண ப்₃ரஹ்மம்' என்று நிலை நாட்டியிருப்பதை இவர் அறியாதவர் அல்லரே!

---

* இவ்விஷயத்தை எதிரிட்டவர்களும் வாய்திறக்க முடியாதபடி ''சங்கரரும் வைணவமும்'' எனும் நூலில் ஸுதர்சனர் நிலை நாட்டியுள்ளார். இந்நூல் இப்போதும் ஸுதர்சனம் காரியாலயத்தில் கிடைக்கும்.

ஆகஸ்டு-2002—"அருள் பூமி" இதழில் கலைமாமணி கே. சி. லட்சுமி நாராயணன் என்பவர் 'அறநெறி பரப்பிய அடியார்கள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். கட்டுரை 63 சைவ நாயன்மார்களில் ஒருவரான ருத்திர பசுபதி நாயனாரைப் பற்றியது அதில் மேற்படி நாயனார் தன் வாழ்நாளில் வேதத்தில் வரும் ஸ்ரீருத்ரத்தை இடைவிடாது ஜெபம் செய்து பேரின்பப் பெருவீடு அடைந்தார் என்றும், ஸ்ரீருத்ரம் வேத மந்திரமாகையால் சைவம் வேதத்தை அடிப்படையாகக் கொண்ட சமயமே என்றும் எழுதியுள்ளார்.

நாயன்மார்களில் ஒருவர் ஸ்ரீருத்ரத்தைத் தன் வாழ்நாளில் ஜபித்து வந்ததால் சைவம் வைதிக சமயமாகிவிடாது. "வேதத்தில் சொல்லப்படுகின்ற ருத்ரன் வேறு; நாங்கள் சொல்லும் சிவன் வேறு" என்று கூறிக்கொள்ளும் சைவர்கள் இப்படிப் பேசுவது வியப்பாக உள்ளது. ஸ்ரீருத்ரம் வேதமந்திரம் என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால், ஸ்ரீமந்நாராயணனே வேத முதல்வன் என்றும், வேத நாயகன் என்றும், வேதங்களால் அறியப்படும் பரம்பொருள் என்றும். வேதங்களும் அவற்றைத் தழுவிய பரம ஸாத்விக சாஸ்திரங்களும் இதிஹாஸங்களும் ஸாத்விக புராணங்களும் சங்கத்தமிழ் இலக்கியங்களும் ஒரு முகமாக முழங்காநிற்கும்போது, அந்த ஸ்ரீருத்ரமும், ருத்ரனுக்கு அந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனையே குறிக்கிறது என்று நாம் சொன்னால் அதை மறுக்கவும் வழி உண்டோ?

ஆதிசங்கரர், ஸ்ரீமத்ராமாநுஜர் போன்ற பேரறிஞர்கள் தங்களது நூல்களில் சைவம் முதலிய சமயங்களை வேதத்திற்குப் புறம்பான சமயங்கள் என்று தள்ளிவிட்டு ஸ்ரீவைஷ்ணவ சமயமே வேதசமயம் என்று உறுதி செய்துள்ளனர். இவற்றையெல்லாம் அறியாமல் "சைவம் வேதத்தை அடிப்படையாகக் கொண்ட சமயமே" என்று கட்டுரை ஆசிரியர் எழுதுவது மிகவும் மடத்தனமாகும்.

"அம்மன் தரிசனம்" ஆகஸ்டு 2002 இதழில் தகவல் களஞ்சியம் பகுதியில் "ராமலிங்கப் பிரதிஷ்டை" பற்றி எழுதியுள்ளனர். இந்த ராமலிங்கப் பிரதிஷ்டை குறித்து மிக விபரமாக ஸ்ரீஸுதர்சனம் வெளியீடான ராமலிங்க ப்ரதிஷ்டையில் கண்டிக்கப்பட்டு உள்ளது. அடியேனும் ராமபாணம் முதல் பாகத்தில் அடியேனுடைய பாணியில் மிகவும் வன்மையாகக் கண்டித்துள்ளேன். ஆனால் மறுபடி மறுபடி இந்தப் பத்திரிகைகள் விஷ்ணுத்வேஷ உணர்வுகளையே தூண்டும் இத்தகைய கட்டுரைகளை வெளியிட்டு வருகின்றன. இது மிகவும் வன்மையாகக் கண்டிக்கத் தக்கது.

''ஞானபூமி'' ஆகஸ்டு-2000 இதழில் ''உய்வுதரும் ஐந்து'' என்ற தலைப்பில் ஒரு சிறு குறிப்பு கீழ்க்கண்டவாறு வெளியிடப் பட்டுள்ளது—''கிருஷ்ணபகவானின் அவதார காரியம் முடிந்து, இவ்வுலகை விட்டு நீங்க முடிவு செய்தபோது, முனிவர்கள் சித்தர்கள் முதலியவர்கள் வந்து''பகவானே! நீங்கள் எங்களைவிட்டுப் போகின்றீர்களே, வருவது கலியுகம், வெம்மையான அந்த யுகத்தில் எமக்கு உய்வு யாது?'' என்று கேட்டனர். கண்ணபிரான் ''நீங்கள் வருந்த வேண்டாம்; உங்களுக்கு ஐந்து பொருள் உய்வைத் தரும் (1) சந்திரனைச் சடையில் தரித்த சிவபெருமானுடைய திருவடிக் கமலங்கள். (2) அத்திருவடியைப் பூஜிக்கும் நீங்கள். (3) அதை அர்ச்சிக்கும் மலர். (4) நீங்கள் சிந்திக்கும் திரு ஐந்தெழுத்து. (5) பூசிக்கொள்ளும் திருநீறு. இந்த ஐந்து சாதனங்களும் உங்களுக்கு உறுதுணை செய்யும் என்றார்.

இந்தக் கருத்திற்கு எவ்விதமான ஆதாரத்தையும் காட்டாமல் எழுதியுள்ளனர். கண்ணனே இவ்வாறு கூறியிருக்கிறார் என்று சொல்லிவிட்டால் சிவபரத்வம் நிலைத்துவிடும் அல்லது சிவ விஷ்ணு பேதம் மறையும் என்ற கனவில் இக்கருத்தை எழுதியுள்ளனர். கண்ணனின் வரலாற்றை விரிவாகக் கூறும் ஸ்ரீமத்பாகவதம், ஸ்ரீமஹாபாரதம் இந்த இரண்டு நூல்களிலும் இக்கருத்துக்கு ஆதாரமே இல்லை. நேர் மாறாக, கீதையில் என்னைத்தவிர மற்ற தேவதைகளை வழிபடுபவன் உய்வு பெற முடியாது என்று கூறிய கண்ணன் இவ்வாறு கூறுவாரா? மேற்கண்ட குறிப்பை எழுதிய அநாமதேயப் பேர்வழி கீதை படிக்காதவராக இருக்க வேண்டும். கலியுக ஆரம்பத்தில் தோன்றிய சங்கரர், ராமானுஜர், மத்வர் போன்றோர் கீதைக்கு உரையெழுதி எக்காலத்திலும் கண்ணனைத் தவிர வழிபாட்டுக்குரிய பரம்பொருள் வேறு எதுவும் இல்லை என்றல்லவா கூறியுள்ளனர்? அவர்களுக்கெல்லாம் தெரியாத கருத்து இந்தக் குறிப்பை எழுதிய அநாமிகருக்குத் தெரிந்திருப்பது வியப்பாக உள்ளது. எதை எழுதினாலும் சொன்னாலும் தக்க ஆதாரம் காட்டவேண்டும். ஆதாரம் இல்லாமல் எழுதுவது அடி முட்டாள்தனம். இதை இந்தக் குறிப்பை எழுதிய அந்த அநாமதேயர் உணர்வாராக. கலியுகத்தில் எப்படிப்பட்ட வழிபாடு நடக்கும் என்பது ஸ்ரீமத் பாகவதத்தில் கீழ்க்கண்டவாறு கூறப்பட்டுள்ளது.

க்ருஷ்ணவர்ணம் த்விஷா க்ருஷ்ணம்
ஸாங்கோபாங்காஸ்த்ர பார்ஷதம் ।
யஜ்ஞை: ஸங்கீர்த்தநப்ராயை:
யஜந்திஹி ஸுமேதஸ: [பாக. 11-5 32]

இதன் பொருள் :— ''இக் கலியுகத்தில் தமது சகாக்களுடன் தொடரப்பட்டவராய்த் தோன்றும் பகவானை ஸங்கீர்த்தன யஜ்

ஞத்தால் நற்புத்தியுடையோர் வழிபடுவர்'' இந்த ஸ்லோகத்தில் ''நற்புத்தியுடையோர்'' (ஸுமேதஸ:) என்ற சொல் மிக முக்ய மானது. இதன்படி பார்த்தால் மேற்கண்ட குறிப்பை எழுதியவர் ''நற்புத்தி இல்லாதவர்'' என்று ஆகிறது.

துக்ளக் இதழில் தற்போது வாசகர்களின் இந்து சமயம் பற்றிய சந்தேகங்களுக்கு ஸ்வாமி தயாநந்த சரஸ்வதி பதிலளித்து வருகிறார். 18—9—02 துக்ளக் இதழில் ''யானை, நல்ல பாம்பு போன்றவை தெய்வீகப் பிராணிகள் என்று எப்படி வரையறுக்கப் பட்டன?'' என்று ஒரு கேள்வியை ஒரு வாசகர் கேட்டுள்ளார். அதற்கு தயாநந்த சரஸ்வதி அளித்துள்ள விரிவான பதிலின் சாரத்தைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

......பாம்புக்குக் கால் கிடையாது. காலில்லாத பிராணியாக இருந்தாலும் அதற்கு மிகுந்த சக்தியும் வேகமும் இருப்பதால், அதை சக்தியைக் குறிக்கக் கூடிய ஒரு பிராணியாக ஆண்டவனுடைய சக்தியின் அவதாரமாகப் பார்க்கிறோம். அநந்த சக்தியில் சயனித்து இருக்கும் விஷ்ணு சக்திக்கு உட்பட்டவரென்று கூறுகிறோம். அதே மாதிரி சிவன் சக்திக்கு உட்பட்டு இல்லாமல் சக்தியைத் தன் கையில் வைத்திருக்கிறார் என்று குறிக்கவே சக்தி ரூபமாக இருக்கக்கூடிய பாம்பை ஆபரணமாக அணிந்திருக்கிறார் என்றும் கூறுகிறோம்'' என்பது தயாநந்த சரஸ்வதியின் பதில்.

தயாநந்த சரஸ்வதி ஆன்மீக உலகிற்கு அறிமுகமானவர்தான். இவரது ஆன்மீகக் கருத்துக்கள் சாதாரண மக்களுக்கு எளிமையாகப் புரியும்படியாக இருந்தாலும், இவரது கருத்து மக்களுக்கு சரியான ஆன்மீக வழியைக் காட்டாது. இதுதான் சரியான பாதை என்று இவரால் இனம் காட்டமுடியாது. எல்லாமே சரியான பாதைதான் என்று கூறுவார். இப்படிச் சொல்லும் இவரது கருத்தை, தெளிவை அடைய விரும்பும் ஒருவன் எப்படி ஏற்றுக்கொள்ளமுடியும்? மேலோட்டமாகப் பார்த்தால் இவரது கருத்துக்கள் யாரையும் பாதிக்காமல் தோன்றினாலும் ஆழமாக இவரது கருத்துக்களைச் சிந்தித்துப் பார்த்தால் இவரிடம் சிவாபிமானமும் விஷ்ணுத்வேஷமும் இருப்பதை உணர முடியும். மேற்கண்ட வாசகரின் கேள்விக்கு இவர் அளித்துள்ள பதிலிலேயே இது புரியும். விஷ்ணு அநந்த சக்திக்கு உட்பட்டவராம், சிவன் உட்படாதவராம். எவ்வளவு சாமர்த்தியமாக அநந்த சக்தியுடைய அநந்தனைப் படுக்கையாகக் கொண்ட விஷ்ணுவை த்வேஷிக்கிறார் இவர் பாருங்கள்! இனி இது குறித்து நமது கருத்து கீழே.

ஒருவன் மெத்தையில் படுத்திருந்தால் மெத்தை அவனைவிட வலிமை வாய்ந்தது என்று ஆகிவிடுமா? விஷ்ணு பாம்பை மெத்தையாகப் போட்டுப் படுத்திருக்கிறார். 'அமிதௌஜா: பர்யங்க:'' என்று கௌஷீதகீ உபநிஷத் அநந்த சக்தியுடைய

ஆதிசேஷன் பரம்பொருளுக்குப் படுக்கை என்கிறது. பாம்பை ஆபரணமாகக் கொண்ட சிவன் அந்த விஷ்ணுவிடமே ஒடுங்கி விடுகிறான் என்று மஹோபனிஷத் முழங்குகிறது. அதனால்தான் விஷ்ணு 'ஊழி முதல்வன்' என்று அழைக்கப்படுகிறான். படைப்பின் ஆரம்பத்தில் அவனைத் தவிர பிரமன் சிவன் முதலான வேறு யாரும் இல்லை என்று அதே உபநிஷத் முழங்குகிறது. "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா ந ஈசான:" [உலகத் தொடக்கத்தில் நாராயணன் ஒருவனே இருந்தான். பிரமனும் இல்லை, சிவனும் இல்லை] என்கிற மஹோபநிஷத் வாக்யம் காண்க. எல்லா சக்திகளையும் தன்னுள் ஒடுக்கிக் கொள்ளும் விஷ்ணுவை சக்திக்கு உட்பட்டவன் என்று கூறுவது வேதத்ரோஹமல்லவா?

அநந்தன் நித்ய ஸூரிகளில் ஒருவன். பகவானுக்கு நித்ய கைங்கர்யம் செய்து வருகிறான். அநந்தன் பகவானுக்குப் படுக்கை குடை முதலான பல வகைகளில் பகவத் கைங்கர்யம் செய்கிறான். அதனால் பூமியில் திரியும் எல்லா விஷப்பாம்புகளும் தெய்வீகப் பிராணி ஆகிவிடாது. பாம்புகளை தெய்வமாக வழிபடும் பழக்கம் இன்றும் நம் நாட்டில் நிலவி வருகிறது. இது மிகவும் மடத்தனமான மூடத்தனமான வழிபாட்டு முறை. நல்ல பாம்பை அடிக்கக் கூடாது என்றும், அதற்கு வெள்ளிக்கிழமை தோறும் புற்றில் பால் வார்க்க வேண்டும் என்றும், நல்ல பாம்பு சக்தியின் அம்சம் என்றும் கூறி மக்களை மதி மயங்க வைத்து விட்டனர் திரைப்படக்காரர்கள். விஷத் தன்மை வாய்ந்த எந்த ஒரு ஜீவனும் மனிதனுக்கு இடையூறு செய்து மனிதனின் உயிருக்கே ஆபத்து விளைவிக்குமானால் அந்த ஜீவனைக் கொல்வதில் எந்தத் தவறும் இல்லை. இதுவே பெரியோர் கருத்து. மாறாகப் பாம்புக்குப் பால் வார்ப்பது, பாம்பைப் பூஜிப்பது இவை எல்லாம் ஆபத்தில்தான் முடியும். இதற்குப் பிரமாணமாக ஸ்ரீமஹாபாரதத்திலிருந்து ஒரு ஸ்லோகம்.

உபதே₃சோஹி மூர்க்க₂ாணும் ப்ரகோபாய ந சாந்தயே |
பய:பாநம் பு₄ஜங்க₃ாநாம் கேவலம் விஷ வர்த்த₄னம் ||

இதன் பொருள் :— மூர்க்கர்களுக்கு எவ்வளவு நல்லுபதேசம் செய்தாலும் எவ்விதப் பலனையும் தராது. பாம்புக்குப் பாலை வார்த்தால் அது விஷத்தைத் தான் வளர்க்கும்.

ஆகவே அநந்தன் வழிபாட்டுக்குரியவன். ஆனால் பூமியில் திரியும் மற்ற பாம்புகள் வழிபாட்டுக்குரியன அல்ல. எனவே தயாநந்த சரஸ்வதியின் பதிலில் விஷ்ணுத்வேஷ விஷம் படிந்திருப்பதோடு, வாசகரின் கேள்விக்கு சரியான விளக்கம் கிடைக்கவும் இல்லை என்பது புலப்படுகிறது.

ஞானபூமி அக்டோபர் 2002 இதழில் வழக்கம்போல் விஷ்ணு வைஷ்ணவத்வேஷக் கருத்துக்கள் ஏராளமாக இடம் பெற்றுள் ளன. அவற்றைக் கீழே தந்து கண்டிக்கிறேன்.

"சிவலிங்கம் யாவும் கடந்த கடவுள் வடிவம்" என்ற தலைப் பில் டாக்டர் சிவப்ரியா என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரையில் உள்ள சில செய்திகள் பின்வருமாறு :—

"சிவலிங்கம் எங்கும் நிறைந்த ஒளிமயமான இறைவடிவம். பிரம்மனும், விஷ்ணுவும் பக்தியுடன் வழிபட்டு பரமனது திருக் காட்சி கண்ட வடிவம். பரமசிவன் அதளபாதாளங்களையும் வான கத்து அனைத்துக் கோளங்களையும் கடந்து சென்று எல்லா உல கங்களுக்கும் ஒளிபரப்பி அடியும் முடியும் இல்லாத நெருப்புத் தூணாக நின்றான். எங்கும் பரந்து விளங்கிய தழற்தூணின் அடி முடி காண்பதில் பிரம்மனும் விஷ்ணுவும் தோல்வி கண்டனர். இருவரும் பக்தியோடு உள்ளன்போடு ஜோதிர்லிங்கத்தைத் தொழுது துதி செய்தபோது, ஈஸ்வரன் வெளிப்பட்டுக் காட்சி தந்தருளினான். அடியும் முடியும் இல்லாத லிங்கம் தோற்றமும் முடிவும் இல்லாத பரம்பொருளை மெய்க்கடவுளைக் குறிக்கும் வடிவ மாகும். தோற்றம் உள்ளவர்கள் ஆணாகவோ பெண்ணாகவோ அவரவர்கள் தோன்றிய வடிவத்துடன் தொழப்படுகின்றனர். பரமசிவனே தோற்றம் இல்லாமல் ஆண் பெண் வேறுபாடுகளை எல்லாம் கடந்து உள்ள உண்மைக் கடவுள். நல்ல பண்பிற்கு அடையாளமே ஈசனை நினைத்து சிவ! சிவ! என்று சொல்வதுதான்"

இங்கு சொல்லப்பட்டுள்ள அடிமுடி தேடிய கதை வெகுகால மாகவே சைவர்களால் சொல்லப்பட்டுவரும் கற்பனைக் கதைகளுள் ஒன்று. இதற்கு வேதங்களிலோ, ஸ்ம்ருதிகளிலோ, இதிஹாஸ ஸாத்விக புராணங்களிலோ, சங்கத்தமிழ் இலக்கியங்களிலோ எந்தவித ஆதாரமும் இல்லை. இந்தக் கட்டுக்கதைகள் ஸ்ரீஸுதர் சனர் அவர்களால் பலமுறை கண்டிக்கப்பட்டுள்ளன. வேதங்களை ஆதாரமாக்கி சிவனுக்கு உயர்வையும் விஷ்ணுவுக்குத் தாழ்வை யும் நிலைநிறுத்த இயலாமையால் இவ்விதமான கட்டுக்கதைகளைப் பற்றிக்கொண்டு அலைகின்றனர் சைவர்கள். ஆதாரமில்லாமலும், பிரமாண விருத்தமாகவும் பேசியே மக்களை ஏமாற்றி வருவது இவர்களது வழக்கமாகிவிட்டது. இந்த டாக்டர் சிவப்ரியா என்ற சைவர் நமது ராமபாணம் முதல் பாகத்தில் நம்மால் வெகுவாக வாங்கிக் கட்டிக் கொண்டவர். நெஞ்சில் கொஞ்சமாவது நேர்மை

உணர்வு இருந்திருந்தால் நமது விமர்சனத்திற்கு முறையாகப் பதில் சொல்லி இருக்கவேண்டும். அப்படியல்லாமல் திரும்பத் திரும்ப ஆதாரமற்ற விஷயங்களையே பற்றிக்கொண்டு விஷ்ணு த்வேஷத்தையே தன் குறிக்கோளாகக் கொண்டு எழுதிவரும் இவரை நேர்மையற்ற, பண்பற்ற, புல்லறிவாளர் என்று அழைப்பதுதான் சரி. சிவலிங்கத் தோற்றம் குறித்து இவர் சொல்லும் விளக்கம் இவரது சொந்தக் கருத்தே தவிர, இதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. பிருகு முனிவரின் சாபத்தால்தான் சிவனுக்கு லிங்கரூபமான வழிபாடு ஏற்பட்டது என்பது உலகப்ரசித்தம். இந்த ப்ரசித்தமான செய்தியை மறைக்கப் பார்க்கிறார் சிவப்ரியா. அதற்கு அவரது மதாபிமானமே காரணம். திவ்யகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இயற்றிய பரப்ரம்ம விவேகத்திலிருந்து ஒரு வெண்பாவை டாக்டர் சிவப்ரியாவின் கவனத்துக்காக இங்கே தருகிறேன். இந்தச் செய்யுள் மூலமாக சிவலிங்கம் பற்றி டாக்டர் சிவப்ரியா உணர்வாராக.

கையிருக்கக் காலிருக்கக் கண்ணிருக்க நக்கனுக்கு
மெய்யிருக்க அன்பர் விரும்பாதே—வைதுவிழும்
ஆண்குறியைப் பூசித் தழிவதெல்லாம் மாயவனை
வீண்குறியாற் பேசும் வினை.

மேலும் இதே ஞானபூமியில் பலமுறை நம்மால் கண்டிக்கப்பட்டுள்ள ஷண்மதஸ்தாபன விஷயமாகவும் கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன. முன்பு ஸ்ரீஸுதர்சனர் அவர்களாலும் நம்மாலும் பலமுறை கண்டிக்கப்பட்டும் இந்த ஞானபூமிப் பத்திரிகை தன் போக்கை மாற்றிக்கொள்வதாகத் தெரியவில்லை. மீண்டும் மீண்டும் தாங்கள் செய்ததையே செய்து வரும் இப்பத்திரிகை ஆசிரியர்களை அறிவு சொரணையற்ற கயவர்கள் என்றே கருதவேண்டும்.

6—11—2002 துக்ளக் இதழில் தயாநந்த சரஸ்வதியிடம் ஒருவர் கீழ்க்கண்ட கேள்வியைக் கேட்டுள்ளார்.

"ஒரு புராணம் விஷ்ணுவை உயர்த்தி சிவனைத் தாழ்த்துகிறது. மற்றொரு புராணம் சிவனை உயர்த்தி விஷ்ணுவைத் தாழ்த்துகிறது. வேறு ஒரு கதை இருவரையும் சமம் என்கிறது. இதில் எதை உண்மை என்று எடுத்துக்கொள்வது. எல்லாமே கற்பனைதானா?"

இந்தக் கேள்விக்கு தயாநந்த சரஸ்வதி அளித்துள்ள பதிலின் ஒரு பகுதியைக் கீழே தருகிறேன்.

"ஒவ்வொரு புராணமும்— சிவபுராணம் சிவனை உயர்த்தி சிவனை ஈஸ்வரனாக வைத்து மற்றவர்களை தேவதைகளாக வைத்தும், அம்மாதிரியே விஷ்ணுபுராணம் விஷ்ணுவை உயர்த்தி விஷ்ணுவை

ஈஸ்வரனாக வைத்து சிவன் போன்ற தேவர்கள் இதர தேவதை களாக வைத்தும் சொல்கிறது. இதிலிருந்து என்ன தெரிகிற தென்றால், ஒருவருடைய இஷ்ட தேவதைக்கு முக்யத்வம் அளிக் கப்படுகிறது. அதனால்தான் விஷயம் தெரிந்தவர்கள் எதை வழி பட்டாலும் சரி என்று சொல்கிறார்கள்''.

கேள்வி கேட்டவரின் சந்தேகத்தை முழுமையாக நிவர்த்தி செய்யும் வகையில் இவரது பதில் அமையவில்லை. கேள்வி கேட்ட வரது சந்தேகம் இஷ்ட தெய்வத்தைப் பற்றியது அல்ல. மாறாக, பரம்பொருளைப் பற்றியது. ''நம் மதத்தில் இத்தனை தெய்வங்கள் இருக்கின்றனவே, இவற்றில் எது உயர்ந்த தெய்வம்? இது பெரிது, அது பெரிது என்று சொல்லிக் கொண்டிருக்கிறவர்களில் யார் சொல்வது உண்மை? அந்த உண்மையை எதை அடிப்படையாக வைத்துப் புரிந்து கொள்வது? புராணங்கள் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றனவே அதற்கு என்ன காரணம்?— இவையே அக் கேள்வியின் விஷயம். அதைப் புரிந்து கொள்ளாமல் ''அதனால் தான் விபரம் தெரிந்தவர்கள் எதை வழிபட்டாலும் சரிதான் என்று சொல்கிறார்கள்'' என்று மடத்தனமாகப் பதிலளிக்கிறார் தயாநந்த சரஸ்வதி. பிரம்மா, சிவன் முதலிய இதர தேவதைகளை வணங்கு பவர்கள் அறிவீனர்கள் என்று மஹாபாரதத்தில் சொல்லிய வியாஸ ரும், ''என்னையே சரணடை'' (மாம் ஏகம் சரணம் வ்ரஜ) என் றும், ''மற்ற தெய்வங்களைத் தொழுவோர் அறிவு குறைந்தவர் கள்'' என்றும் கீதையில் கூறிய கண்ணனும், அந்த கீதைக்கு அப்படியே உரை செய்த ஆதிசங்கரரும் தயாநந்த சரஸ்வதியின் பார்வையில் விபரம் தெரியாதவர்களாய்ப் படுகிறார்கள். இப்படிப் பேச இவருக்கு எத்தனை துணிச்சல்! இவர் அத்வைதியாய் இருந் தும் இவரது ஆசார்யரான ஆதிசங்கரரின் கீதா பாஷ்யத்தைப் பார்க்கவில்லை போலும்! அல்லது பார்த்தும் காமகோடிகளைப் போல் பித்தலாட்டம் பேசுகிறார் போலும்! எதை வழிபட்டாலும் சரிதான் என்று சொல்கிறவர்களை ''விபரம் தெரிந்தவர்கள்'' என்று இவர் கருதுகிறார். எதை வழிபட்டாலும் சரிதான் என்றால் நம் மதத்தில் பல பரம்பொருள்கள் இருப்பதாக ஆகிவிடும். பரம் பொருள் என்பது ஒன்றுதான் இருக்க முடியும். பல பரம்பொருள் கள் இருப்பதாக தயாநந்த சரஸ்வதி கூறினால் உலகில் உள்ள மதங்களில் முட்டாள்தனம் நிறைந்த மதம் இந்து மதம் தான் என்று அந்நிய மதத்தினர் நினைக்கக் கூடும். ''உலகிற்கு ஒரு தலைவன்தான் இருக்கமுடியும். அந்தத் தலைவனை உம் மத நூல் களின் அடிப்படையில் அடையாளம் காட்ட முடியாமல் யாரை

வேண்டுமானாலும் தலைவனாக வழிபடலாம் என்று சொன்னால் உம் மதம் ஒரு மதமே அல்ல" என்று எண்ணி நகையாடுவர் அந்நிய மதத்தினர். அவர்களுக்கு என்ன பதில் சொல்வார் தயாநந்த சரஸ்வதி? சரி! அப்படியானால் அந்தக் கேள்வி கேட்டவருக்கு என்னதான் பதில்? சரியான பதிலைக் கீழே தருகிறேன்.

ஒவ்வொரு மதத்திற்கும் அடிப்படையான ப்ரமாண நூல் ஒன்று உண்டு. அந்த வகையில் 'வைதிக மதம், சநாதந தர்மம்' என்று சொல்லப்படுகின்ற நம் மதத்திற்கு நான்கு வேதங்களே ப்ரமாணங்கள். வேதத்தில் பல தெய்வங்களைப் பற்றிய விபரங்கள் இருந்தாலும் மற்ற எல்லா தெய்வங்களையும் இப்பிரபஞ்சத்தையும் படைத்துக் காத்து அழிக்கும் வல்லமை பொருந்திய ஒரு பரம்பொருளை வேதம் அடையாளம் காட்டுகிறது. ஒன்றேயான அந்தப் பரம்பொருளை நாராயணன், விஷ்ணு, வாஸுதேவன் என்ற பெயர்களால் அழைக்கிறது வேதம். வேதத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள எல்லோராலும் இயலாது. அதனால்தான் அதைச் சரியாகப் புரிந்துகொண்ட புண்யவான்களான மனு, வியாஸர், வால்மீகி, பராசரர் போன்ற ரிஷிகள் தங்கள் படைப்புகளில் வேதக் கருத்துக்களை எளிமையாகச் சொல்லியிருக்கின்றனர். மனு தனது ஸ்ம்ருதியிலும், வியாஸர் தனது மஹாபாரதத்திலும், வால்மீகி தம் இராமாயணத்திலும், பராசரர் தம் விஷ்ணுபுராணத்திலும் வேதத்தின் உட்பொருளை எளிமையாக விளக்கியுள்ளனர். அவர்கள் வேதம் காட்டும் பரம்பொருள் நாராயணனே என்று ஐயம் திரிபு அறக் கூறியிருக்கின்றனர். வேதத்தின் கருத்தைத் தழுவியே நமது சங்கத்தமிழ் இலக்கியங்களும் பேசுகின்றன. புராணங்கள் 18 என்று ஒரு நிர்ணயம் உண்டு. இப்புராணங்களை பராசரர், வியாஸர் முதலான பல ரிஷிகள் செய்துள்ளனர். வேதங்கள் அநாதியாகையாலே அவை யாராலும் செய்யப்படாதவை; என்றும் நித்யமானவை. நமது மதத்திற்குப் பரமப்ரமாணம் வேதமே ஆகும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் ஏற்றத் தாழ்வுகளே லோக சிருஷ்டி ஆகும். இப்பிரபஞ்சத்தில் புல் முதல் பிரம்மா வரை பரம்பொருளால் படைக்கப்பட்ட அத்தனை பொருட்களும் இந்த மூன்று குணங்களை இயல்பாகக் கொண்டவை. அந்த வகையில் முக்குணங்களில் ஒவ்வொன்றை மிகுதியாகக் கொண்டவர்களுக்காகவே, ஒவ்வொரு குணத்தை மிகுதியாகக் கொண்ட ஒவ்வொரு தெய்வம் மேற்சொன்ன 18 புராணங்களிலும் பரம்பொருளாகச் சொல்லப்பட்டது. சுத்தஸத்வரூபமான பரம்பொருளை அறிவதற்கும் உணர்

வதற்கும், அடைவதற்கும் ஸத்வகுண மேம்பாடே வழிவகுக்கும். என்று வேதங்கள் சொல்வதால் அந்த 18 புராணங்களில் ஸாத்வீக புராணங்களைக் கொண்டே நாம் வேதம் சொல்கின்ற உண்மையான பரம்பொருளை, தன்னிகரில்லாத் தலைவனைக் கண்டு கொள்ளமுடியும். மேற்சொன்ன 18 புராணங்களில் 6 புராணங்கள் ஸாத்விகம் என்றும், 6 புராணங்கள் ராஜஸம் என்றும், 6 புராணங்கள் தாமஸம் என்றும் சொல்லப்படும். அவை என்னென்ன புராணங்கள் என்பது நமது ராமபாணம் முதல் பாகத்தில் கூறப்பட்டுள்ளது. முதல் 6 ஸாத்விக புராணங்களும் வேதங்களால் சொல்லப்பட்ட கருத்துக்களைக் கொண்டுள்ளதால் பரம்பொருளை நிர்ணயிக்கும் விஷயத்தில் அவை மட்டுமே ப்ரமாணங்கள் ஆகின்றன. இந்நிலையில் வேதக் கருத்துக்குப் புறம்பாகப் பேசுகின்ற மற்ற ராஜஸ தாமஸ புராணங்களான 12 புராணங்கள் ஏன் செய்யப்பட்டன? அவற்றைச் செய்தவர்களும் ரிஷிகள் தானே? என்ற கேள்விகள் எழுகின்றன. இங்கு ஒரு உதாரணத்தின் மூலம் இக்கேள்விகளுக்கும் பதிலிறுப்போம். அதாவது, எல்லா வகையிலும் சிறந்தவனாகவும் எக்குறையும் இல்லாதவனாகவும் நிறைந்த புகழுடையவனாகவும் நிகரற்ற ஆற்றல் படைத்தவனாகவும் எல்லா நற்பண்புகளுக்கும் கொள்கலனாய் இருப்பவனாகவும் ஒருவன் இருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். இந்தச் சிறப்புகள் எல்லாம் இவனிடம் அமைந்துள்ள அளவிற்கு அமைந்திராத ஒருவனுக்கோ, அல்லது இந்தச் சிறப்புக்களில் எதுவுமே அடையப் பெற்றிராத ஒருவனுக்கோ இவனிடம் பொறாமை ஏற்படுவது இயல்பு. "இவ்வளவு புகழையும் சிறப்புகளையும் நற்பெயரையும் நாம் பெற்றிருக்கவில்லையே" என்ற அசூயையால் அந்தப் பொறாமைக்காரன் இவனைப்பற்றி இல்லாத பொல்லாத அவதூறுகளை எல்லாம் பேசி இவன் புகழுக்கு மக்கள் மத்தியில் களங்கம் விளைவித்துக் கொண்டிருப்பான். "இவன் அதைச்செய்தான்; இதைச் செய்தான்; இவனை நல்லவன் உயர்ந்தவன் என்று அழைக்க இவன் தகுதியற்றவன். அன்று நடந்த சம்பவத்தில் நான் உதவி செய்யாமல் இருந்திருந்தால் இவன் கதி அதோ கதி" என்று இவனைப்பற்றி அந்தப் பொறாமை பிடித்தவன் வாய்க்கு வந்தபடி பிறரிடம் சொல்லிக்கொண்டிருப்பான். உண்மையில் சம்பவ இடத்தில் அவன் இருந்திருக்கவே மாட்டான். இந்த மாதிரி இயல்பை உடையவன் தாமஸ ஸ்வபாவக்காரன். இவன் சொல்வதிலும் உண்மை இருக்குமோ என்று நினைத்து சிலர் இவனது பேச்சிலும் மயங்குவர்.

அவனளவுக்குப் புகழும் பெருமையும் தனக்கு இல்லை என்று தெரிந்துகொண்ட பின்பும், ஒருவனுக்கு அவனது புகழையும் பெருமையையும் அங்கீகரித்து ஏற்றுக் கொள்ளும் மனம் இருக்காது. இப்படிப்பட்டவன் ராஜஸ ஸ்வபாவக்காரன். இவன் என்ன செய்வானென்ருல் உண்மையிலேயே பெருமையும், புகழும், சிறப்பும் உள்ளவனைப் புகழவும் மாட்டான் இகழவும் மாட்டான். இப்படிப்பட்டவனையும் சில மக்கள் பின்பற்றுவர். இந்த இரண்டு (தாமஸ, ராஜஸ) வகை நபர்களின் குணத்தைப் பற்றியோ, இவர்களின் போலிப் பெருமைகளைப் பற்றியோ, உண்மையிலேயே நற்குணமும் சிறப்புப் புகழும் உடைய அந்த ஸாத்விக ஸ்வபாவக்காரன் எள்ளளவும் கவலைப்படமாட்டான். தன்னிடம் இல்லாத புகழை இருப்பதாக நினைத்துக்கொண்டு, உண்மையில் புகழும் பெருமையும் மிக்க ஒருவனை இகழ்வது தாமஸ ஸ்வபாவக்காரனின் பலவீனமே தவிர பலமல்ல என்பதை உணர்ந்து ஸாத்விக ஸ்வபாவக்காரன் தன்மேல் கூறப்பட்ட வீண் அவதூறுகளை லட்சியம் செய்யாமல் இருந்து விடுவான். ஏனெனில் யார் எதைச் சொன்னுலும் சத்யம் என்பது ஒன்று தனியாக உள்ளதல்லவா? அதை அறிந்தவர்கள் உணர்வார்கள் என்று சாந்தமாக இருந்து விடுகிருன் அந்த ஸாத்விகன். நற்குண சீலர்கள் (அதாவது ஸாத்விக ஸ்வபாவர்கள்) நிறைந்த பெருமைகள் தமக்கு இருந்தும் தம்மைத் தாழ்த்திக்கொண்டு, எந்தப் பெருமைக்கும் தகுதியில்லாதவர்களை, அவர்களை சந்தோஷப்படுத்தவேண்டும் என்பதற்காகவே, அவர்களுக்கு அந்தப் பெருமைகள் எல்லாம் உள்ளதாகக் கூறிப் புகழ்வார்கள். ஆனுல் பிறரின் உண்மையான சிறப்பைக் கண்டு பொருமைப்படுவோர் (அதாவது தாமஸ ஸ்வபாவக்காரர்கள்) உண்மையிலேயே எந்தவிதப் பெருமையும் தமக்கு இல்லாதிருந்தும் தம்மை உயர்த்திப் புகழ்ந்து கொண்டு, எல்லாப் பெருமைகளுக்கும் புகழுக்கும் உண்மையிலேயே தகுதியுடையவர்களை இகழ்ந்து அவர்களை மக்கள் மத்தியில் சிறுமைப்படுத்திப் பேசுவர். உண்மையில் பெருமைக்கும் புகழுக்கும் உடையவன் யார் என்பதை மக்கள் எப்படி உணரமுடியுமெனில் சாட்சியங்கள், ஆதாரங்கள் ஆய்ந்தறியும் மதி நுட்பம் இவற்ருல்தான் முடியும். அந்த அளவு மதிநுட்பம் உடைய சிறந்த சான்ருேர்களே உண்மையில் பெருமைக்கும் புகழுக்கும் தகுதியுடையவன் யார் என்பதை உணர்ந்து அவன் வழி செல்வர். ராஜஸ, தாமஸ ஸ்வபாவக்காரர்களைப் பின்பற்றுபவர்கள் அவர்களின் வழி செல்வதோடு உண்மையை எப்போதும் தூஷிப்பவர்களாகவே இருப்பர்.

இதுவரை சொன்ன உதாரண அளவுகோலை வைத்து இனிப் புராணங்களை ஆராய்வோம். சிவன் தாமஸ குண தேவதை என்பது வேத சாஸ்திர ப்ரஸித்தம். தாமஸ குணமுடையவர்கள் பொறாமை மிகுந்தவர்களாகவும், தம்மிடம் இல்லாத பெருமைகளை இருப்பதாகக் கூறிக்கொண்டு பிறரிடம் உள்ள பெருமைகளை இல்லையாக்கி அவர்களை தூஷிப்பவர்களாகவும் இருப்பார்கள் என்று முன்பே கூறினோம். அந்த வகையில் தாமஸ புராணங்களான லிங்கம், சைவம் முதலிய 6 புராணங்களில் சிவனுக்கு உண்மையிலேயே இல்லாத ஜகத் காரணத்வம் முதலியன கூறப்பட்டன. எதிலும் உண்மையை அறிந்துகொள்ள சாட்சியும் ஆதாரமும் வேண்டும் என்று முன்பே கண்டோம். அந்த வகையில் சிவனுக்கு ஜகத் காரணத்வம் முதலிய பெருமைகள் இல்லை என்பதற்கு அநாதியான வேதமே ஆதாரம். வேதத்தில் சுத்த ஸத்வ ரூபமான பரமாத்மா நாராயணனே என்றும் அவனுக்கே ஜகத் காரணத்வம் முதலிய பெருமைகள் உள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது. அந்த வேதக் கருத்தையே மனு முதலான ஸ்ம்ருதிகளும், இதிஹாஸங்களும் வைஷ்ணவாதி ஸாத்விக புராணங்களும் கூறுகின்றன. ஆகவே ஸாத்விக புராணங்களில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் வேதத்தின் கருத்தாகவே இருப்பதால் அப்புராணங்களே 'உயர்ந்த கடவுள் யார்' என்பதைத் தீர்மானிக்கும் விஷயத்தில் ப்ரமாணங்களாகின்றன. மஹாபாரதம், ஹரி வம்ஶம் போன்ற ஸாத்விக சாஸ்திரங்களில் கூட விஷ்ணுவின் அவதாரமான கிருஷ்ணன் சிவனிடம் வேண்டி வரம் பெற்றதாக உள்ளதே என்று சிலர் கேள்வி எழுப்புகின்றனர். அதற்குப் பதில் :— முன்பே நான் கூறியதுபோல், ஸத்வ குணத்தோர் உண்மையிலேயே நிறைந்த பெருமைகளும் சிறப்பும், செல்வமும் தம்மிடம் இருந்தும் தம்மைத் தாழ்த்திக்கொண்டு எந்த பெருமைக்கும் தகுதியில்லாதவர்களை, அவர்களை சந்தோஷப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே அவர்களுக்கு அந்தப் பெருமைகள் எல்லாம் இருப்பதாகக் கூறிப் புகழ்வார்கள். இந்த அடிப்படையில்தான் சிவனை கிருஷ்ணன் பிரார்த்தனை செய்தது. இப்படிப்பட்ட குணம் ஸத்வ குணம் உடையோருக்கு மேலும் பெருமையைத் தருமே தவிர தாழ்வு இல்லை. இப்படித் தகுதியில்லாதவர்களைத் தொடர்ந்து புகழ்ந்தாலே, அந்தத் தகுதியிலலாதவர் மனத்திலும் கொஞ்சம் கொஞ்சமாக நாணம் தோன்றி தன் தகுதியின்மையை நாளடைவில் உணர்ந்து விடுவர். அந்த அடிப்படையில்தான் ஹரி வம்சத்தில் கிருஷ்ணன் முனிவர்கள் முன்னிலையில் சிவனைப் புகழ்ந்தபோது சிவன் முனிவர்களிடம்

இப்புகழுரைகளுக்குத் தகுதியுள்ளவன் கிருஷ்ணனேயன்றி நான் இல்லை. கிருஷ்ணனே உங்களால் வழிபடத் தக்கவன் என்று கூறினார். மேலும் சிவபக்தர்கள் சிவனிடம் ஈடுபடுவதற்காகத் தான் அவதாரங்களில் சிவனை வழிபடுவதாக பகவான் சிவனுக்கு வரம் கொடுத்திருப்பதாகவும் புராணங்கள் கூறுகின்றன.

இதுவரை சொல்லப்பட்ட விஷயங்களின் அடிப்படையில் தான் புராணங்கள் பரம்பொருளை நிர்ணயிக்கும் விஷயத்தில் ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. ஒரு சம்பவத்தை இருவர் இருவிதமாக வர்ணிக்கும்போது அவ்விருவர் கூற்றில் எது உண்மை என்று அறிய சரியான சாட்சியம் தேவைப்படுகிறது. சரியான சாட்சி கிடைத்து விட்டால் அந்த சாட்சியின் அடிப் படையில் அவ்விருவர் கூற்றில் உண்மையானதை ஏற்றுக் கொண்டு பொய்யானதைத் தள்ளி விடுகிறோம். அந்த அடிப் படையில் புராண முரண்பாடுகளில் எது உண்மை என்பதை நிர்ணயிக்க அநாதியான வேதமே சாட்சி ஆகிறது. அந்த வேதத்தின் அடிப்படையில் வேதக் கருத்துக்களையே முழுமை யாகக் கூறுகின்ற ஸாத்விக புராணங்கள் 6-ம் தான் உண்மை யானவை. மற்ற 12 புராணங்களும் தனக்குப் புகழ் வேண்டும் என்ற வெறியால் உண்மையான புகழ் உடையவனுக்கு இகழ்வு கூறி, தனக்கு இல்லாத புகழைப் பேசிக்கொண்டு திரியும் தாமஸ ஸ்வபாவிகளால் செய்யப்பட்டவையே. ஆகவே பரம்பொருளை நிர் ணயிக்கும் விஷயத்தில் இந்த 12 புராணங்களும் (ராஜஸ, தாமஸ புராணங்கள்) தள்ளத் தக்கவையே. ஆயினும், இந்தப் புராணங்களிலும் தம் இயல்பை மீறி பகவத் பரத்வமாகிற உண்மை பலவிடங்களில் வெளிப்படுவதையும் காண்கிறோம் அதனாலேயே மற்ற புராணங்களையும் ஒரேயடியாகத் தள்ளுவதில்லை. ஆகவே இது வரை சொல்லப்பட்ட விஷயங்களின் அடிப்படையில் வேதம் ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்று நமக்குக் காட்டித் தருவதால் வேதத்தின் கருத்தை ஏற்றுக்கொண்ட புராணங்களே உண்மை யானவை. அந்த வகையில் வேதம், ஸாத்விக புராணங்கள், இதிஹாஸங்கள், மனுஸ்ம்ருதி போன்ற பிரஸித்தமான ஸ்ம்ருதி கள், சங்கத்தமிழ் இலக்கியங்கள் இவை எல்லாவற்றிலுமே நாரா யணனே பரம்பொருள், பரமாத்மா, உயர்ந்த கடவுள் என்றும் மற்ற (சிவன் உள்ளிட்ட) எல்லா தேவதைகளும் நாராயணனால் படைத்து அளித்து, அழிக்கப்படுபவர்களே என்றும் கூறப்பட் டுள்ளது. ஆகவே நம் சநாதன மதத்திலும் ஒரே தலைவன் தான் ஒரே கடவுள் தான், ஒரே பரம்பொருள் தான். அந்த ஒரே தலைவனும், கடவுளும் பரம்பொருளும் ஸ்ரீமந் நாராயணனே ஆவான்.

26-1-2008 தினமலர் ஆன்மீக மலரில் கேள்வி பதில் பகுதியில் "விநாயகரின் ஒடிந்த தந்தத்திற்கு விளக்கம் என்ன?" என்ற கேள்விக்கு மஹாபாரதத்தை எழுதுவதற்கு வியாஸர் விநாயகரை வேண்டியபோது வியாஸரின் வேண்டுதலுக்கு இணங்கி விநாயகர் தன் தந்தத்தை ஒடித்து எழுத்தாணியாக்கிக் கொண்டு மஹாபாரதத்தை சுவடியில் எழுதினார். அதனால்தான் விநாயகருக்கு ஒரு தந்தம் ஒடிந்துள்ளது" என்ற விளக்கம் தரப் பட்டுள்ளது.

வியாஸர் சொல்ல விநாயகர் மஹாபாரதத்தை எழுதினார் என்ற செய்தி சைவர்களால் பரப்பி விடப்பட்ட செய்தியே தவிர உண்மை இல்லை. மிகப் பழமையான மஹாபாரதப் பதிப்புகளில் இச்செய்திக்கு ஆதாரம் இல்லை. பிற்காலத்தில் வெளிவந்த பதிப்புகளில்தான் இச்செய்தி இடைச் செருகலாகச் சேர்க்கப் பட்டுள்ளது. விநாயகர் என்ற தெய்வமே பிற்காலக் கற்பனை யானது என்பது ஆராய்ச்சியாளர்களின் ஒருமித்த முடிவு. ஆகவே விநாயகர் மஹாபாரதத்தை எழுதினார் என்ற செய்தி அபத்தமான கற்பனையே தவிர வேறில்லை. ஸுதர்சனர் பதில்களில் இது ஆதா ரங்களைக் காட்டி நிலைநாட்டப்பட்டுள்ளது.

ந. க. மங்கள முருகேசன், M.A., M.Lit., M.Ed., Ph.D., என்பவர் "வைணவத் திருத்தலங்களின் வரலாற்றுக் கதைகள்" என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ளார். இவர் சென்னைப் பல்கலைக்கழகம் அஞ்சல் வழிக் கல்வி நிறுவனத்தின் வரலாற்றுப் பேராசிரியர் ஆவார். இந்நூலில் இடம் பெற்றுள்ள செய்திகளைப் பற்றி நமது உறவினர் ஒருவர் நம் கவனத்திற்குக் கொண்டு வந் தார். இந்நூலில் இடம் பெற்றுள்ள செய்திகள் பரம அபத்தங் களாயும் உண்மைக்குப் புறம்பானவையாயும் அமைந்திருக்கின் றன. இந்நூல் முற்றிலும் வைணவத்தையும், வைணவத் திருத் தலங்களையும் கொச்சைப் படுத்தவேண்டும் என்ற எண்ணத்தோடு எழுதப்பட்டது என்பது தெரியவருகிறது. இந்நூலில் இடம்பெற் றுள்ள சில அபத்தங்களை இங்கு குறிப்பிட்டு விமர்சிக்கிறேன்.

"திருமாலின் நரசிம்ம அவதாரத்திற்கு கருத்துரை கூறியவர் விநாயகப் பெருமான். இரணியனை சாய்க்கும் வழி காணத் திரு மால் வள்ளி மரத்தடியில் விநாயகரை வழிபட்டு வந்தார். நர சிம்ம அவதாரம் விநாயகர் கூறிய வழிதான். அதனால் அவ் விநாயகர் விட்ணு விநாயகர் எனப்பட்டார்" என்றும்,

''திருமாலின் வாமன அவதாரத்திற்கு காரணமானவரும் விநாயகர் என்பதால் விநாயகர் வாமன கணேசன் என அழைக்கப் படுகிருர்'' என்றும் இப்படி எத்தனையோ அபத்தங்கள் இந்நூலில்.

இந்நூலை சென்னை தேன்றல் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இந் நூலின் ஆசிரியர் ஒரு வரலாற்றுப் பேராசிரியர். வரலாற்றுப் பேரா சிரியருக்கு எதையும் ஆய்ந்தறியும் நுண்ணறிவு வேண்டும். ஆனுல் இவர் கூறியுள்ள கருத்துக்களுக்கு எவ்வித ஆதாரமும் இல்லை. ஆதாரத்தை இவர் காட்டவும் இல்லை. திருமாலின் தசாவதாரங் களை விளக்கிக் கூறும் விஷ்ணுபுராணம், பாகவதபுராணம் மற்றும் மஹாபாரதம் இவற்றிலெல்லாம் இவர் கூறிய கருத்துக்களுக்கு அணுவளவும் ஆதாரம் இல்லை. திருமாலின் அவதாரங்களை விளக்கிக் கூறும் நமது சங்க நூல்களில் விநாயகரே காணப்பட வில்லை. வெறும் விஷ்ணு த்வேஷ உணர்வை மட்டும் மனத்தில் வைத்துக்கொண்டு இந்நூலை எழுதியுள்ளார் இவ்வாசிரியர். விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் இழிவுபடுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் செயல்படும் இவரது செயல் வன்மையாகக் கண்டிக்கத்தக்கது. வரலாற்றுப் பேராசிரியருக்கு மண்டை வறண்டு விட்டது என்றே தோன்றுகிறது. இவரது கருத்துக் களுக்கு இவர் முறையான ஆதாரம் காட்டவேண்டும். அல்லது இவர் தன் தவறை ஒத்துக்கொள்ளவேண்டும். இதைச் செய்யா விடில் இவர் ஸ்ரீவைஷ்ணவர்களின் கடுங்கோபத்துக்கு ஆளாவார்.

பொதுஜனப் பத்திரிகைகளில் சைவர்களும் காமகோடிகளும் விஷ்ணு வைஷ்ணவத்வேஷப் பிரசாரத்தை செய்து வருவது ஒரு புறமிருக்க, மற்ருெருபுறம் பொது மேடைகளில் சைவர்கள் பட்டி மன்றம், வழக்காடு மன்றம், இலக்கியப் பேருரை என்று சொல் லிக்கொண்டு விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் த்வேஷித்துப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டனர். இலக்கிய ஆராய்ச்சி, வரலாற்று ஆராய்ச்சி என்ற பெயரில் உண்மையை மறைத்து, கற்பனைக் கொள்கைகளுக்கு வலுவூட்டி ஸ்ரீவைஷ்ணவத்தைக் குழி தோண்டிப் புதைக்கப் புறப்பட்டு விட்டனர் இந்தப் பிரசாரச் சைவர்கள். இவர்களில் முக்கியமான ஒருவர் நெல்லைக் கண்ணன் என்பவர். இவர் திருநெல்வேலிச் சைவர். இவரது பேச்சை பல முறை அடியேன் கேட்டதுண்டு. இவர் சமயச் சமரசம் என்ற போர்வையில் விஷ்ணுவையும், வைஷ்ணவத்தையும், வைஷ்ணவர் களையும் மிகவும் சாமர்த்தியமாக இகழ்ந்து பேசுவார். ராமா யணத்தையும், மஹாபாரதத்தையும் பொய் என்றும், கற்பனை என்றும் பேசுவார். அதற்குத் துணையாக பாரதியாரைச் சேர்த்துக்

கொள்வார். ஏனெனில் பாரதி புராண இதிஹாஸங்களை வெறும் கற்பனை என்று கூறிவிட்டாலும், ஆனால் கந்தபுராணத்தையும், சிவபுராணத்தையும் உண்மை என்று சொல்வார். விஷ்ணுவையும் வைஷ்ணவரையும் த்வேஷிக்க, காளமேகத்தைத் தன் துணைக்கு இழுத்துக்கொள்வார். பெரியாரின் நாத்திகத்தையும் ஏற்றுக் கொள்வார். பிள்ளையாருக்கு நாமத்தைப்போட்டு விஷ்வக்ஸேனராக்கி விட்டார்களாம் அய்யங்கார்கள்; இவர் சொல்கிறார். காளமேகத்தையும், பாரதியாரையும் மேற்கோள் காட்டி ஸ்ரீவைஷ்ணவத்தையும் விஷ்ணுவையும் இகழ்ந்து பேசிவரும் இவர் விஷ்ணு வைஷ்ணவ த்வேஷ உணர்வை மனத்தில் வைத்துக்கொண்டு சமயச் சமரசம் பேசி வருகிறார். சமீபத்தில் இவரது சொற்பொழிவு ஒன்றைக் கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதிலும் வழக்கம்போல் இவரது வைஷ்ணவத்வேஷப் பிரசாரத்திற்குக் காளமேகத்தை அடிக்கடி மேற்கோள் காட்டினார். "சிதம்பரத்தில் ஈசனுக்கு நேரே கால் நீட்டிப் பெருமாள் படுத்திருப்பது மரியாதைக் குறைவல்லவா?" என்று ஒருவன் காளமேகத்திடம் கேட்டானாம். அதற்குக் காளமேகம், "திருமால் திரிபுர ஸம்ஹார காலத்தில் சிவனுக்கு காளையுருவில் வாகனமானான். அதனால் திருமால் ஐந்தறிவுள்ள மாடுதான். மாட்டுக்கு அறிவு இருக்குமா? அறிவில்லாத காரணத்தால்தான் காலை நீட்டிக்கொண்டு படுத்திருக்கிறான்" என்னும் பொருள்பட ஒரு பாடலைப் பாடினானும் காளமேகம். இந்தச் செய்தியைக்கூறி திருமாலை மாடு என்று காளமேகமே கூறிவிட்டான். நான் கூறவில்லை என்று பேசினார் இந்த ஆள். காளமேகம் கூறிவிட்டால் அது வேதவாக்கு என்பது நெல்லைக் கண்ணனின் கருத்து. மேலும் பொய்கை ஆழ்வாரின் 'அரன் நாரணன்' என்று தொடங்கும் பாசுரத்தை மேற்கோள் காட்டி, "ஆழ்வாரே அரியும் சிவனும் ஒன்று என்று கூறியுள்ள போது அய்யங்கார்களுக்கு ஏன் அது புரியவில்லை" என்று அப்பாசுரத்திற்கு அபத்தப் பொருளுரைத்து அய்யங்கார்களைக் கிண்டலடித்தார் இந்த நெல்லைச்சைவர். இப்பாட்டின் உண்மைப் பொருளை ஸுதர்சனர் பலமுறை விளக்கியுள்ளார். இவரைப்போல் இன்னும்பல சைவர்கள் இலக்கியப் பேருரை என்ற முறையில் விஷ்ணுவையும், வைஷ்ணவத்தையும் த்வேஷித்து மேடைகளில் பிரசாரம் செய்து வருகின்றனர். நெல்லைக் கண்ணன் உள்ளிட்ட இந்த பிரசாரச் சைவர்கள் அனைவரின் கவனத்திற்காகவும் சில விஷயங்களை அடியேன் கீழே கவிதையில் சொல்கிறேன். இக்கவிதைகளில் நான் கேட்டுள்ள கேள்விகளுக்கு, திறமை இருந்தால் இந்தப் பிரசாரச் சைவர்கள் பதில் சொல்லட்டும்.

### சைவர்களுக்கு எச்சரிக்கை

புலைஅறமாம் சைவத்தைப் பேணிஇந்தப்
புவியோரை மயக்கிவரும் மூடர்தம்மில்
தலையாய பெருமூடர் சிலபேருண்டு
தலைக்கிறுக் கேறிடவே பேசலுற்ருர்
மலையனைய புகழ்கொண்ட வைணவத்தின்
மாண்புதனை இகழ்ந்துமால் துரோகியாஞர்
விலைகொடுத்துப் புகழ்வாங்கும் இந்தமூடர்
வீண்பேச்சை நல்லோர்கள் செவிகொள்வாரோ? (1)

நான்மறையின் உட்பொருளை விளக்கிச்சொல்லும்
இதிஹாஸ புராணத்தை இகழ்ந்துபேசி
நான்மறையே பொய்என்று சொல்லும்இந்த
நயமில்லார் பேச்சதனைக் கேட்பாருளரோ?
தேன்தனிலே விஷம்கலந்த தன்மைபோல
உண்மைதனில் கலப்படங்கள் செய்யும்இந்தத்
தான்தோன்றி கள்பேச்சைக் கேட்பதற்கும்
சிலமூடர் இருக்கின்ருர் ஐயோ பாவம்! (2)

சீர்மையுடை வைணவரை இகழ்ந்துபேசச்
சிறியோராம் இவருக்குத் தகுதியுண்டோ?
நேர்மையுடை வாதத்தால் தம்கருத்தை
நிலைநாட்ட வழியில்லா இந்தமூடர்
வாய்மையிலா வார்த்தைகளைப் பேசியேதம்
வக்கில்லாத் தன்மையதைச் சாற்றிக்கொண்டார்
கார்வண்ணன் வழிசெல்வோர் கொதித்தெழுந்தால்
இவர்மீண்டும் பேசுவதைத் தொடருவாரோ? (3)

கல்வியிலே கடலென்று இவரைஎந்தக்
கயவர்கள் அழைத்தாரோ தெரியவில்லை
கல்விக்குக் கரையில்லை என்பர் நல்லோர்
கரைகண்டோர் போலிவரும் பேசுகின்ருர்
தொல்மறையின் உண்மைதனை உணர்ந்திடாமல்
தோசிகவி காளமேகத்தைப் போல
வல்வினையால் சிவப்பட்டுச் சிறியோராகி
வாய்தனிலே வந்தபடி பிதற்றுகின்ருர். (4)

சதைநல்கும் இன்பத்தில் நாட்டம்கொண்டு
சைவத்தின்பால் சென்றான் காளமேகம்
இதையறியா தேதேதோ பேசிஅந்த
ஈனனையே புகழ்ந்திவரும் ஈனரானார்
கதைகள்பல கற்பனையில் பேசுகின்ற
இச்சைவர் பேச்சுதனைக் கேட்கும்சான்றோர்
எதையுமே அறியாத மூடஜென்மம்
இவரென்று எளிதாக உணர்வாரன்றே. (5)

கலவியெனும் செயலுக்குக் கடவுட்தன்மை
கற்பிக்கும் சைவத்தைப் பேணுகின்ற
நலமதனை அறியாத சைவத்தோரே!
யாமுமக் கொன்றுரைப்பேன் கேட்பீர்இன்னும்
பலநூல்கள் உண்டுநீர் கற்பதற்கு
பண்பற்ற உம்பேச்சால் பயனோஇல்லை
சிலநூலைக் கற்றவுடன் எல்லாம் கற்றோம்
என்பதுவே புல்லறிவு என்பர்ஆன்றோர். (6)

கருத்தொன்றைச் சொல்வதற்கு முன்னால்அந்தக்
கருத்திற்கு ஆதாரம் காட்டவேண்டும்
கருத்திற்குச் சொல்கின்ற ஆதாரங்கள்
தன்மைதனில் சிறந்தனவாய் அமைதல்வேண்டும்
பொருத்தமிலா விதமாக ஏதோசொல்லி
ஆதாரம் இதுதானென் றுரைப்போர்புல்லர்
விருத்தமிலாக் கருத்ததனைச் சொல்வதற்கு
விருப்புவெறுப் பற்றவராய் இருத்தல்வேண்டும். (7)

இவ்வகையில் நோக்குங்கால் சைவத்தோரே!
நீர்சொல்லும் கருத்தெல்லாம் குப்பையாகும்
அவ்விஷயமே நெஞ்சத்திற் கொண்டிடாலே
இகழ்கின்ற பூரியரே உங்கள்பேச்சு
அவ்வளவும் ஆதாரம் ஏதுவும்இல்லா
அவத்தங்கள் என்பதனை உணர்வார்மேலோர்
எவ்வகையி லேனும்உம் கருத்துக்கெல்லாம்
ஆதாரம் காட்டவுமக் காற்றலுண்டோ? (8)

மறைவகுத்த வியாஸர்தன் சூத்திரத்தில்
மாதவனே பரம்பொருளென் றுறுதியாக
மறைமொழியை ஆதார மாக்கிக்கொண்டு
மாநிலத்தோர் உய்திடவே சொல்லிவைத்தார்
மறைநிறையச் சூத்திரத்திற் குரைசெய்வித்த
சங்கரரும் மத்துவரும் பெருமானாரும்
அறைகின்றார் வியாஸமுனி கருத்துணர்ந்து
ஆதிபரம் பொருள்நாரா யணன்தானென்றே! (9)

ஆலமரும் கடவுள்தான் ஆதியென்று
 பண்டைநாள் தமிழ்மக்கள் அறிந்திருந்தார்
காலமதைக் கடந்துறையும் கடவுள்மேக
 வண்ணன்தான் என்பதவர் உணர்ந்திருந்தார்
சீலமுடன் வேதநெறி ஒழுகிநல்ல
 வைணவராயி இன்பமுடன் வாழ்ந்துவந்தார்
ஞாலமது புகழ்கின்ற சங்கநூல்கள்
 சொல்கின்ற அருஞ்செய்தி இதுவாமன்றே. (10)

ஓங்கியே உலகளந்த மாதவன்தன்
 ஒப்பில்லாப் புகழதனை ஓதுகின்ற
ஓங்குபரி பாடலிலே வைணவத்தின்
 உயர்வுள்ள தென்பதனை அறியீர்போலும்
ஓங்குபுகழ் தமிழ்நாட்டின் ஆதிநாளில்
 உயர்ந்ததிரு வைணவமே இருந்ததென்று
பாங்குடனே தமிழ்ச்சங்க நூல்கள்எல்லாம்
 பகருவதைச் சைவர்களே அறியீரோ நீர்? (11)

இப்படியே பிரமாணம் இருக்கும்போது
 சிலர்செய்த பொய்நூலைப் பற்றிக்கொண்டு
தப்பிதமாய்த் திருமாலை இகழ்ந்துபேசும்
 மூடர்களே! உம்மால் அச்சம்புவிற்கு
ஒப்பில்லா நான்மறையைச் சாட்சியாக்கிப்
 பரத்துவமே சாதிக்க வழியுமுண்டோ?
எப்போதும் நாரணனை இகழ்ந்துபேசும்
 உமக்கென்றும் உய்வில்லை தெரிந்துகொள்வீர் (12)

நறைமிக்க துளவத்தை அணிந்தமாலே
 நலம்மிக்க வீட்டின்பம் தருவோன்என்றும்
கறைகண்டன் முதலான தேவர்க்கெல்லாம்
 காரணனும் கார்வண்ண னேயாமென்றும்
கறையில்லா மனமுடைய தமிழர்அன்று
 உலகறியத் தெளிவாகச் சொல்லிவிட்டார்
நிறையில்லா உம்மைப்போல் சிலர்தான்இன்று
 நெஞ்சறியப் பொய்கூறித் திரிகின்றீரே. (13)

தமிழுக்கும் தமிழனுக்கும் பெருமைகூறும்
 சிவப்பட்ட சிறியோரே! பதிலுரைப்பீர்!
தமிழ்ச்சங்க காலத்தில் மாலைத்தூற்றும்
 மதிகெட்டோர் இருந்தனரா பதிலைச்சொல்வீர்
தமிழ் "நெறி" யாய் இன்றுள்ள நாத்திகத்தை
 அன்றேற்ற தமிழர்களுண்டோ சொல்வீர்
தமிழுக்கும் தமிழனுக்கும் உங்கள்பேச்சு
 உண்மையிலே தாழ்வாகும் அறிந்துகொள்வீர். (14)

இன்றொன்று கேட்கின்றேன் சைவத்தோரே!
ஆராய்ந்து தெளிவாகப் பதிலுரைப்பீர்
முன்னிருந்த தமிழ்ச்சங்க காலத்தோரில்
சங்கரனைப் பரம்பொருளாய்ச் சொன்னாருண்டா?
மன்னுபுகழ் தமிழ்நாட்டுச் சங்கமக்கள்
சைவத்தை உலகமுதல் மதமென்றாரா?
என்ன நீர் பேசிடினும் வாய்இளித்துக்
கேட்பதற்கும் சிலமூடர் இருக்கின்றாரே! (15)

அக்காலத் தமிழ்நாட்டில் மக்கள்எல்லாம்
நான்மறையின் நெறிபோற்றி வாழ்ந்துவந்தார்
முக்கோலைக் கைப்பிடித்த பகவர்நாளும்
மால்நெறியை மக்களிடம் பரப்பிவந்தார்
எக்கோலும் இல்லாத சைவத்தாரும்
ஒற்றைக்கோல் பிடித்தோரும் அன்று இல்லை
இக்காலத் தமிழ்நாட்டுக் கயவரெல்லாம்
இவ்வுண்மை மறைத்திடவே முயற்சிக்கின்றார். (16)

பழந்தமிழர் பண்பாட்டை மறைத்துப்பேசும்
பண்பற்ற மூடர்களின் பேச்சைக்கேட்டு
இழந்தார்கள் இக்காலத் தமிழர்தங்கள்
முன்னோரின ஆன்மீக நெறியையெல்லாம்
பழங்காலத் தமிழரிலும் சிலபேர்மற்ற
தேவரையும் வழிபட்டார் என்றபோதும்
ஒழுங்குடனே உலகுபடைத் தளித்தழிக்கும்
ஒப்பற்ற பரம்பொருளாய் மாலைக்கண்டார். (17)

பரம்பொருளின் தத்துவத்தை வேதம்கூறும்
பாங்கினிலே பழந்தமிழர் கண்டிருந்தார்
பரந்தாமன் தான்அந்த வேதமெல்லாம்
உரைக்கின்ற பரம்பொருளென் றுணர்ந்திருந்தார்
புரமெரித்த சிவனும்ஓர் சீவனென்னும்
உண்மைதனை உள்ளபடி அறிந்திருந்தார்
தரங்கெட்டுப் பேசும் இக்காலச்சைவர்
பேச்சினிலே ஏதேனும் உண்மைஉண்டோ? (18)

அன்பொன்றே சைவமதப் பண்பாமென்று
அறைவோர்க்கு நான்ஒன்று சொல்லுகின்றேன்
வன்முறையால் மற்றமதத் தோரைஆலை
தனிலிட்டுக் கழுவேற்றிக் கண்பிடுங்கித்
துன்புறுத்திக் கொல்வதுதான் அன்பாமென்று
சைவமதம் போதிக்கும் உண்மைபோலும்!
அன்பெனும்நல் உணர்வினையே அறிந்திடாத
அறிவிலிகள் சைவரெனல் உண்மையன்றோ. (19)

பிள்ளையார் என்றவொரு தெய்வம்சைவக்
　　குறும்பர்கள் செய்தகற் பனைதானென்றும்
கள்ளமொரு பொய்யான சிலபுராணம்
　　பிள்ளையார் மீதவர்கள் புனைந்தாரென்றும்
உள்ளபடி உலகறிய எடுத்துரைத்தார்
　　நேர்மையுடன் ஆராய்ச்சிசெய்யும் நல்லோர்
எள்ளளவும் ஆதாரம் இல்லாஉங்கள்
　　பேச்சுக்குச் சான்றோர்முன் மதிப்புமுண்டோ? (20)

மால்கோயில் களிலெல்லாம் விஷ்வக்சேனர்
　　தளபதியும் கரிமுகராய் இருப்பதாலே
ஆலமரத்தடியெல்லாம் சைவர் வைத்தார்
　　ஆனைமுகத் தெய்வத்தைப் போட்டிக்காக
வேலவனே சிவமைந்தன் என்றேஎல்லாப்
　　பிரமாண நூல்களுமே சொல்லாநிற்க
சீலமது இல்லாமல் நீர்உரைக்கும்
　　கருத்திற்கு ஆதாரம் ஏதுமுண்டோ? (21)

வேதத்தின் உண்மைதனை எடுத்துரைக்கும்
　　இதிஹாஸ புராணங்கள் தனிலும்அந்த
வேதத்தின் சாரத்தைக் கொண்டிருக்கும்
　　தமிழ்ச்சங்க நூல்களிலும் நீங்கள்சொல்லும்
மோதகமுண் பொய்த்தேவுக் கிடமேஇல்லை
　　என்பதனைச் சைவர்களே அறியீரோநீர்?
ஆதர்களே உம்பேச்சை ஆதரிப்பர்
　　அறிவுள்ளோர் என்றுமதை நிந்திப்பாரே! (22)

புல்லறிவால் வைணவத்தை இகழ்ந்துபேசிப்
　　பூரியராய் நீர்உம்மைக் காட்டிக்கொண்டீர்
நல்லறிவு இல்லாத காரணத்தால்
　　நாரணனை இகழ்கின்ற பாவியானீர்
பொல்லாத வார்த்தைகளைப் பேசும்உங்கள்
　　போக்கதனை விரைவினிலே மாற்றிக்கொள்வீர்
இல்லையெனில் வைணவரின் கோபத்திற்கு
　　ஆளாக வேண்டிவரும் எச்சரிக்கை! (23)

ஞானபூமி ஜூலை 2003 இதழில் "கருடாழ்வார் பூஜித்த சிவ லிங்கம்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளியாகியுள்ளது. கட்டுரை ஆசிரியர் பெயர் கே. குருமூர்த்தி (மாயூரன்). கும்ப கோணத்திற்கு அருகாமையில் உள்ள குடவாசல் என்ற ஊரில் உள்ள சிவனைக் கருடன் பூஜித்ததாகத் தலபுராணம் உள்ளது என்று கூறுகிறார்.

கருடன் தேவலோகத்திலிருந்து அமிர்த கலசத்தை எடுத்து வந்தபொழுது வரும் வழியில் (குடவாசலில்) ஒரு புற்றின் மீது அமிர்த கலசத்தை வைத்துவிட்டு, ஒரு அசுரனுடன் போரிட்டா ராம். போர் முடிந்து வந்து பார்த்தபொழுது அமிர்தகலசம் புற்றினுள் புதைந்திருந்ததாம். அதனைத் தன் அலகால் குத்திப் பிளந்தபொழுது அந்தப் புற்றினுள் சிவலிங்கம் இருக்கக்கண்டு அதனை வழிபட்டாராம். மேலும் அங்கு சிவனுக்கு ஒரு கோயி லும் எழுப்பினராம் கருடன். கதை எப்படி விட்டிருக்கிறார்கள் பாருங்கள்!

ஸ்ரீமஹாபாரதம்—ஆதி பர்வத்தில் கருடனின் வரலாறு விரி வாகச் சொல்லப்படுகிறது. அதில் மேலே கட்டுரை ஆசிரியர் குறிப்பிட்டபடி கருடன் சிவபூஜை செய்ததாக எந்தச் செய்தியும் இல்லை. பகவான் மஹாவிஷ்ணுவுக்கு வாஹனமாகி பகவத் கைங் கர்யம் செய்துகொண்டு நித்யஸூரிகளுள் ஒருவராய் வைகுண்டத் தில் இருப்பவர் கருடன். 'ஸுபர்ணோஸி கருத்மாந்' என்று வேதத்தில் புகழப்படும் கருடன் வேதங்கள் கூறும் பரம்பொருளைச் சுமந்து வருவதால் வேத வடிவாகவே புகழப்படுகிறார். இப்படிப் பட்ட மஹிமை பொருந்திய கருடன், பகவானால் படைக்கப்பட்டு அழிக்கப்படும் ஜீவர்களுள் ஒருவனான சிவனை வழிபட்டார் என்று கூறுவது விஷ்ணுவையும் வைஷ்ணவத்தையும் தூஷிப்பதற்காகச் செய்யப்பட்ட கற்பனைக் கதையேயன்றி வேறில்லை. வேதத்தின் மூலமும் இதிஹாஸ ஸாத்விக புராணங்கள் மூலமும் சிவபாரம் யத்தை நிலைநாட்ட இயலாமல், தலபுராணம் என்று சொல்லிக் கொண்டு தகாத புளுகுகளை அள்ளிவிட்டு அதற்கேற்றாற்போல் சிவன் கோயில்களில் சிலைகளையும் அடித்து வைத்து, தங்கள் கொள்கையை நிலைநாட்டப் பார்க்கின்றனர் இந்த சைவர்கள். மக்கள் விழிப்புணர்வுடன் இருப்பது நல்லது. வைணவர்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டியது அவசியம். விஷ்ணுவே

சிவனைப் பூஜித்தார் என்று புளுகிக்கொண்டு தங்கள் சிறுமையைப் பறை சாற்றிக்கொள்ளும் இந்தச் சைவ விஷமிகள் விஷ்ணு வாஹ நனை விட்டுவைப்பார்களா!

"சிவ பரம்பொருளின் பலமுக வடிவங்கள்" என்ற தலைப்பில் மேற்படி ஞானபூமியிலேயே டாக்டர் சிவப்ரியா என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இந்த டாக்டர் சிவப்ரியா என்பவர் நமது ராமபாணம் முதல் பாகத்திலேயே கடுமையாக நம்மால் விமர்சிக்கப்பட்டவர். மறுபடியும் தன் அசட்டுத்தனத்தை இந்தக் கட்டுரையின் மூலம் வெளிக்காட்டிக்கொண்டிருக்கிறார். இவரது கட்டுரையில் இடம்பெற்றுள்ள சில அபத்தங்களைக் கீழே (நாலு பாராக்களில்) தந்து விமர்சிக்கிறேன்.

"கடவுள், சிவம் என்ற தமிழ்ச்சொற்களுக்கு இணையான சொற்கள் வேறு எந்த மொழியிலும் கிடையாது. ஸம்ஸ்க்ருதத்தில் கூட தெய்வங்களையும், தேவர்களையும், பகவான்களையும் குறிக்கும் சொற்கள் உண்டே தவிர கடவுளைக்காட்டும் சொற்கள் கிடையாது. எல்லாவற்றையும் கடந்து எல்லாவற்றின் உள்ளும் புறமும் இருக்கும் பரமசிவமானது பிரம்மன், விஷ்ணு, ருத்திரர் ஆகிய மூன்று மூர்த்திகள் முதலாக புல், புதர் ஆகிய தாவரங்கள் வரையுள்ள உயிரினங்களுக்கு அருள்புரிவதற்காகப் பலப்பல வடிவங்களில் வெளிப்பட்டுக் காட்சி தருகிறது.

"இந்த ஊழிக்காலத்தின் மூன்ருவது யுகமான துவாபரயுகத்தில் கண்ணனாகப் பிறந்து வந்த மஹாவிஷ்ணு கடைசி காலத்தில் உபமன்யு முனிவரிடம் சிவதீட்சை பெற்று நியமத்துடன் சிவபூஜை செய்து கடவுளை வழிபட்டு வந்தார். கண்ணன் காலத்திற்குப் பிறகு பரசுராமர், கோதண்டராமர், கண்ணன் போன்ற சிவபக்தர்களையே கடவுள் என்று கூறும் வைணவம் சுமார் 5100 ஆண்டுகளுக்கு முன்பு உண்டானது.

"சிவ ஆகமங்கள் கர்மகாண்டம், உபாசன காண்டம், ஞான காண்டம் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டவை. ஞானகாண்டமே சைவ சித்தாந்தம் எனப்படும். இவை இலங்கைக்கு அப்பால் கன்னியாறு, குமரிஆறு முதலிய ஒன்பது நதிகளையும் குமரி மலை முதலிய ஏழு மலைகளையும் கொண்டிருந்த மஹேந்திரமலை என்ற தலத்தில் அருளிச்செய்யப்பட்டன. தமிழ் ஆகமங்களோடு தமிழ் வேதங்களும் இத்தலத்தில் தோற்றுவிக்கப்பட்டன. சிவம் ஐந்து முகங்களால் ஆகமங்களை ஓதியருளியதால் முகஞ்சோதார

என்ற திருப்பெயர் ஏற்பட்டது. ஐந்து முகங்களால் ஆகமங்களை ஓதிய முகஞ்சோதரர் கோயில் இருந்த முகஞ்சதாரோ என்ற வட நாட்டுத் தலமும் அழிந்துவிட்ட நகரமாகியுள்ளது. அழிந்துவிட்ட வட நாட்டு மொகஞ்சதாரோவில்தான் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் சிவாலயம் இருந்ததற்கான சான்றுகளைத் தாங்கள் அங்கு கண்டெடுத்த பொருள்கள் மூலம் உறுதி செய்கின்றனர்.

''உருவமில்லாத பரமசிவம் முருகனைத் தோற்றுவிப்பதற்காக ஆறுமுகங்களுடன் வெளிப்பட்டுள்ளார். சிவபரம்பொருள் ஆனை முகனைத் தோன்றியபோது ஆனைமுகன் தோன்றினன்.

இவையே டாக்டர் சிவப்ரியாவின் கட்டுரையில் உள்ள அபத்தங்கள்.

டாக்டர் 'சிவம்' என்ற சொல்லை தமிழ்ச்சொல் என்கிறார். இதிலிருந்து இவரது மொழியியல் ''புலமை'' நன்கு வெளிப்படுகிறது. 'சிவம்' என்ற சப்தம் வடமொழி உபநிஷத்துக்களிலும் இதிஹாஸபுராணங்களிலும் பல்லாயிரக்கணக்கான இடங்களில் வருகிறது. அது டாக்டருக்குத் தெரிய வாய்ப்பில்லை. சமீபத்தில் திருக்குறளுக்கு ஒருவர் எழுதிய ஆங்கில உரையை அடியேன் படிக்கநேர்ந்தது. அதில் ''பகவன்'' என்ற தமிழ்ச்சொல்லை முதன்முதலில் கண்டுபிடித்தவரே திருவள்ளுவர்தான் என்று அந்த உரையாசிரியர் குறிப்பிட்டிருந்தார். இது எந்த அளவிற்கு வேடிக்கையான கூற்றோ அந்த அளவு வேடிக்கையானது 'சிவம்' தமிழ்ச்சொல் என்று டாக்டர் கூறுவது. ஏன்! பேசாமல் எல்லா வடமொழிச்சொற்களுமே தமிழ்தான் என்று கூறி, தமிழுக்கு மற்றொரு பெயர்தான் ஸம்ஸ்க்ருதம் என்றுகூட இவர்கள் கூறி விடலாமே! என்னே! இவர்களது சாமர்த்யம்! இவர்களை நினைத்து நலம் பரிதாபப்படுவதைத் தவிர வேறு வழியில்லை.

மேலும் டாக்டர் ஏதோ எல்லா வடமொழி நூல்களையும் படித்துக் கரைத்துக் குடித்துவிட்டவர்போல் தன்னை நினைத்துக் கொண்டு, கடவுளைக் குறிக்கும் சொல் வடமொழியில் இல்லை என்று எழுதுகிறார்.

தன்னால் படைக்கப்பட்ட எல்லாவற்றையும் கடந்தும் அந்தப் படைப்புக்களுக்குள்ளேயே அந்தர்யாமியாய் இருந்தும் அவற்றை இயங்கவைக்கும் மஹாசக்தியுடையவனே கடவுள் என்ற தத்வம். இந்தத் தத்வ ''ப்₃ரஹ்மம்'' என்ற சொல்லால் வேதங்களில் அழைக்கப்படுகிறது.

யதோ வா இமானி பூ₄தானி ஜாயந்தே
யேந ஜாதானி ஜீவந்தி
யத் ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி
தத் விஜிஜ்ஞாஸஸ்வ தத் ப்₃ரஹ்மேதி

[எங்கிருந்து எல்லாப் பொருள்களும் உண்டானதோ, எதனால் அவை உயிருடன் இருக்கின்றனவோ, எதனிடத்தில் ஊழியில் சென்று லயிக்கின்றனவோ, அதை அறி. அதுவே ப்ரஹ்மம்.] இதுவே ப்ரஹ்மத்திற்கு வேதம் தரும் விளக்கம். அதே வேதம் "நாராயண: பரம்ப்ரஹ்ம" என்பதன்மூலம் அந்த ப்ரஹ்மம் என்ற தத்துவம் நாராயணனே என்று நமக்குக் காட்டித்தரு கிறது. புருஷ, நாராயண ஸூக்தங்களில் சொல்லப்படுகிற ஆயிரக்கணக்கான கைகளையும் தலைகளையும் உடைய புருஷோத் தமனான அந்த நாராயணனையே சங்கத் தமிழர்களும் "நான்மு கிரண்டை ஆறு அறி கடவுள்"—என்று கடவுள் என்ற தமிழ்ச் சொல்லாலேயே குறிப்பிட்டார்கள். டாக்டர் கூறுவதுபோல், சிவனுக்கு இப்படிப்பட்ட கடவுள் தன்மை வேதங்களிலோ அதைத் தழுவிய இதிஹாஸ புராணங்களிலோ சங்கஇலக்கியங் களிலோ எதிலுமே காணமுடியாது. சிவன் நாராயணனால் படைத்து அழிக்கப்படும் ஒரு ஜீவனே என்றுதான் வேதங்களில் முழங்கப்படுகின்றன. மேலும் மும்மூர்த்திகளுக்கு மேல் நான் காவதான 'பரமசிவம்' என்ற தத்துவம் வேதங்களில் எங்குமே காணப்படவில்லை. இதிஹாஸ ஸாத்விக புராணங்களிலும் அப் படி ஒரு தத்துவம் இருப்பதாகச் சொல்லப்படவில்லை. உலகி லும் விஷ்ணுகோயில், சிவன்கோயில் தவிர பரமசிவன்கோயில் இல்லை.

மேலும் கண்ணன் உபமன்யுவிடம் சிவதீட்சை பெற்றதைப் பற்றிக் கூறுகிறார் டாக்டர். ஸ்ரீமஹாபாரதத்தில் உள்ளதாகச் சொல்லப்படும் இந்த உபமன்யு உபாக்யானம் பின்னாளில் இடைச்செருகலாகச் சேர்க்கப்பட்டது என்றும், மூல பாரதத்தில் அப்பகுதி இல்லை என்றும் ஸ்ரீமஹாபாரதத்தின் மிகப்பழையதான பதிப்புகளை ஆதாரங்காட்டி நிரூபித்துள்ளார் புத்தூர் ஸுதர்சனர் ஸ்வாமி அவர்கள். அதேபோல் பாரதத்தை விநாயகர் எழுதி னார் என்ற செய்தியும் பிற்சேர்க்கையே; தகுந்த நிரூபணத்தின் மூலம் இதை வெளிப்படுத்திய ஸுதர்சனர் ஸ்வாமி அவர்களின் கருத்து தம் வசதிக்காகப் பிற்சேர்க்கை செய்வோரின் வாய் களிலே மண்ணை வைத்துவிட்டது. ஆகவே உபமன்யு உபாக் யானம் மூலபாரதத்தில் இல்லாத செய்தியாகும்.

மேலும் "கண்ணன் காலத்துக்குப் பிறகு வந்த பரசுராமர், கோதண்டராமர். கண்ணன் போன்ற சிவபக்தர்களைக் கடவுளாகக் கூறும் வைஷ்ணவ மதம் சுமார் 5100 ஆண்டுகளுக்கு முன்பு தான் ஏற்பட்டது" என்று வாய்க்கு வந்தபடி உளறுகிருர் டாக்டர். தசாவதார வரிசைக் கிரமம் கூடத் தெரியாத டாக்டர், கண்ணன் காலத்திற்குப்பிறகு பரசுராமர், கோதண்டராமர் காலம் என்று எழுதுகிருர். இவரது "ஆராய்ச்சி" அறிவை என்னென்று சொல்வது? சரி கண்ணன் காலத்துக்குப்பிறகு என்று கூறும் இவரது பட்டியலிலும் ஒரு கண்ணனைச் சேர்த் துள்ளாரே அந்தக் கண்ணன் யார்? எதையாவது உளறி சிவ னைப் பரம்பொருளாக்கிவிடவேண்டும் என்பது டாக்டரின் எண் ணம். டாக்டர் உளறிக்கொண்டு வேண்டுமானுல் இருக்கலாம். ஆனுல் உண்மையை இவர் மறைத்து விடமுடியாது. பொய்ம் மையை இவரால் நிலைநிறுத்தவும் முடியாது.

ஸ்ரீவிஷ்ணுவினுல் அதிஷ்டிக்கப்பட்ட இந்தப் பிரபஞ்ச ஜீவர் கள் அனைவருமே வைஷ்ணவர்கள்தான் என்று வேதமே கூறும் போது ஸ்ரீவைஷ்ணவ மதம் தோன்றிய காலம் என்று ஒரு காலத்தைக் குறிப்பிட டாக்டருக்கு எப்படித் துணிவு வந்தது? பிரபஞ்ச ஜீவர்களில் சிலர் கர்மவினையால் தடம்புரண்டு போக லாம். ஆனுல் ஸ்ரீவைஷ்ணவ சமயமே அநாதி காலந்தொட்டு இருந்து வந்திருக்கிறது என்பதற்கு வேதங்களே சான்று. நமது சங்க இலக்கியங்களும் இதையே உறுதிப்படுத்துகின்றன.

இலங்கைக்கு அப்பால் ஐந்து முகங்களுடன் சிவன் ஆகமங் களை உபதேசித்ததால் சிவனுக்கு முகஞ்சோதரர் என்ற பெயர் வந்ததாம். சிவனுக்கு முகஞ்சோதரர் என்ற பெயரை டாக்டரே வைத்துள்ளார் போலும்! இப்பெயரில் சிவனை எந்த சிவனடியாரும் அழைக்கவில்லையே! பிறகு ஏன் இந்தப் பெயரை டாக்டர் சிவ னுக்கு வைத்தார்? ஏனெனில் வட இந்தியாவில் உள்ள மொகஞ்ச தாரோவுக்கும் சிவனுக்கும் முடிச்சுப் போட்டு, மொகஞ்சதாரோ வில் அகழ்வாராய்ச்சி மூலம் எடுக்கப்பட்ட சிவச்சின்னங்களை வைத்து சைவாகமம் மொகஞ்சதாரோ நகர நாகரீக காலத்தி லேயே பிரசித்தி பெற்றிருந்தது என்ற தனது சொந்தமான கருத்தை வெளியிட விருப்பம் டாக்டருக்கு. அந்த விருப்பத்தை

இக்கட்டுரைமூலம் நிறைவேற்றிக் கொண்டுள்ளார் டாக்டர். அகழ்வாராய்ச்சிகளை வைத்து மத வரலாற்றை ஆராய்ச்சி செய்யும் இந்த டாக்டரின் "நுண்மாண் நுழை புலம்" அகழ்வாராய்ச்சிக்குரியது.

மேலும் முருகனின் தோற்றம் பற்றியும் இவர் வழக்கமாகக் கூறும் கருத்துக்களையே கூறியுள்ளார். முருகன், பிள்ளையார் பற்றிய இவரது கருத்துக்களுக்கு ராமபாணம் முதல் பாகத்திலேயே தக்க பதிலடி கொடுத்துள்ளேன். (ராமபாணம் முதல் பாகம் — 29-ம் பக்கம் காண்க.)

ஞானபூமியில் இடம் பெற்ற "சிவ பரம்பொருளின் பலமுக வடிவங்கள்" என்ற கட்டுரையில் டாக்டர் சிவப்ரியா எழுதிய மேலும் சில அபத்தங்களைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

"கண்ணன் காலத்திற்குப்பிறகு பரசுராமர் கோதண்டராமர் கண்ணன் போன்ற சிவபக்தர்களையே கடவுள் என்று கூறும் வைணவம் சுமார் 5100 ஆண்டுகளுக்கு முன்பு உண்டானது"— என்று கூறும் சிவப்ரியாவுக்கு சரியான நூலறிவு இல்லை என்றே சொல்லத் தோன்றுகிறது.

ராமர் காலத்திலேயே வசிஷ்டர், விச்வாமித்ரர் மற்றும் வனத்தில் வசிக்கும் ரிஷிகள் எல்லோரும் ஸ்ரீராமனை பரப்ரஹ்மமாகக் கண்டு அனுபவித்துள்ளனர். மேலும் பிரமனே ஸ்ரீராமனைப் பரப்ரஹ்ம வஸ்து என்று கூறி உலகறியப் போற்றித் துதித்துள்ளார். பரமசிவனும் ராமபிரானைப் போற்றித் துதித்துள்ளார். இதற்கெல்லாம் வால்மீகி ராமாயணத்தில் சான்று உள்ளது. மேலும் பரசுராமர் விஷ்ணுவின் அம்சாவதாரமே என்பதற்கும், தனது அடுத்த அவதாரம் ஏற்பட்டதும் அதை அவர் உணர்ந்துகொண்டார் என்பதற்கும் ராமாயணமே ஆதாரம். கண்ணனுடைய காலத்திலும் பீஷ்மர், துரோணர் போன்ற ஞானிகளும், ரிஷிகளும் கண்ணனைப் பரப்ரஹ்மமாகவே கண்டு துதித்தனர். இதுவும் தவிர, கண்ணனே ஒப்புயர்வற்ற முழு முதற்கடவுள் என்பதற்கு பகவத் கீதையைவிட வேறு ஆதாரமும் வேண்டுமோ? பரசுராமனும், ராமனும் கண்ணனுக்கு முன் யுகத்தில் பிறந்தவர்கள். உண்மை இவ்வாறு இருக்க, "கண்ணன் காலத்திற்குப்பிறகு" என்று தொடங்கி, முட்டாள்தனமாக எழுதுகிறுர் சிவப்ரியா.

மேலும் வைணவம் சுமார் 5100 ஆண்டுகளுக்கு முன்புதான் ஏற்பட்டது என்று இவர் கூறுகிறார். வேதம் எவ்வளவு பழமை யானதோ அவ்வளவு பழமையானது வைணவ சமயம். வேதம் தோன்றிய காலத்தை யாருமே அறுதியிட்டுக் கூறமுடியாது. ஏனெனில் வேதம் நித்யமானது. அழிவில்லாதது. அதைப்போல வைணவ சமயம் தோன்றிய காலத்தையும் யாரும் கூறமுடியாது. இதற்கு வேதத்திலேயே ஆதாரம் உள்ளது. சதபத ப்ராஹ்மணம் 5-ஆம் காண்டத்தில் இரண்டாவது பிரபாடகம் 4.வது பிராஹ்மணத்தில் த்ரிஷம்யுக் தாதி யாகத்தைப் பற்றி விவரிக்கும் இடத்தில் ''வைஷ்ணவா: புருஷா:'' என்று இரண்டு இடத்தில் வேதம் ஓதுகின்றது. இந்த இடத்தில் ஸ்மார்த்தரான ஸாயணசார்யர் ''விஷ்ணோ: அவதார ஸ்வீகாரேண மநுஷ்ய ஸம்ப₃ந்த₄ாத் மநுஷ்யா: ஸர்வே வைஷ்ணவா: விஷ்ணவதி₄ஷ்டி₂தா இத்யர்த்த₂:'' [விஷ்ணு அவதாரம் செய்து, எல்லா மனிதர்களுடனும் உறவு கொள்கையால் மனிதர்கள் அனை வரும் வைஷ்ணவர்களே. அதாவது—விஷ்ணுவால் அதிஷ்டிக்கப் பட்டவர்கள் என்று பொருள்.] என்று பாஷ்யமிட்டார். ஒரு தகப் பனுக்குப் பிறந்த நான்கு பிள்ளைகளில் இரண்டு பிள்ளைகள் தன் னைப் பெற்ற தகப்பனின் பெருமை உணர்ந்து அவனுக்குக் கட்டுப் பட்டு வாழ்வதையும், மற்ற இரண்டு பிள்ளைகள் தன் தகப்பனின் பெருமையில் 16-ல் ஒரு பங்கு பெருமை கூட இல்லாத வேறொரு வனைத் தன் தகப்பன் ஸ்தானத்தில் வைத்துத் தன் சொந்தத் தகப்பனைப் புறக்கணித்து வாழ்ந்து வருவதையும் நடைமுறை உல கில் காண்கிறோம். எப்படி இருந்தாலும் அந்த நான்கு பிள்ளை களுக்கும் பெற்ற தகப்பன் ஒருவன்தானே. அதைப்போல விஷ்ணுவினால் படைத்து அளித்து அழிக்கப்படும் அனைத்து உயிர்களும் விஷ்ணுவின் உடைமையே. ஆகவே வேதத்தின்படி பார்த்தால் உலகில் உள்ள அனைவரும் வைஷ்ணவர்களே. முன் சொன்ன தகப்பன்—பிள்ளை உதாரணத்தில் கண்டதுபோல அவ ரவர்களின் குணத்துக்குத் தக்கபடி வேறு வேறு தேவதைகளை உபாஸித்து அந்தந்த தெய்வங்களின் பேரில் மதங்களை உருவாக் கிக் கொண்டனர். அந்த வகையில் பார்த்தால் உலகத் தோற் றத்திலும், முடிவிலும் என்றுமே அழியாது உள்ள ஸநாதந மதம் வைஷ்ணவம் தான் என்பதை சிவப்ரியா மறுக்கத் துணிவாரோ? மேலும் கண்ணன், ராமன் போன்றோர் சிவனை வழிபட்டதாகக் கூறப்படும் கதைகள் எல்லாமே கட்டுக்கதைகளே. அதற்கு நூல்

ஆதாரம் எதுவும் இல்லை. உபமன்யு உபாக்யானம் மஹாபாரதத்தில் இடைச்செருகல் என்பதை ஸுதர்சனர் போன்ற அறிஞர்கள் ஆதாரத்துடன் நிறுவியுள்ளனர்.

மேலும் சிவன் ஐந்து முகங்களுடன் சிவாகமத்தைஉபதேசித்ததால் சிவனுக்கு முகஞ்சோதரர் என்ற பெயர் ஏற்பட்டதாம். அதனால்தான் வடநாட்டில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களால் கண்டு பிடிக்கப்பட்ட நகரத்திற்கு மொகஞ்சதாரோ என்ற பெயர் ஏற்பட்டதாம்.

சிவனுக்கு முகஞ்சோதரர் என்ற ஒரு பெயர் இருப்பதாக டாக்டர் சிவப்ரியாதான் கூறுகிறார். எவரும் கேள்விப்படவில்லை. சிவனடியார்களின் பாடல்களில் கூட முகஞ்சோதரர் என்ற பெயர் சிவனுக்குக் கூறப்படவில்லை. அகழ்வாராய்ச்சியில் கிடைத்த நகரத்தின் தொன்மையை வைத்து, இப்படியொரு முடிச்சைப் போட்டால் சைவத்தின் தொன்மையை நிலைநாட்டி விடலாம் என்று சிவப்ரியா கனுக் காண்கிறார் போலும்! வடநாட்டில் அகழ்வாராய்ச்சியில் ஈடுபட்ட நிபுணர்கள் கூட முகஞ்சதாரோ நகரத்தின் பெயர்க்காரணம்பற்றி சிவப்ரியா கூறுவது போல் கூறவில்லையே. பிறகு ஏன் சிவப்ரியா இவ்வாறு உளறி வைக்கிறார்! காரணம்? சிவன் மற்றும் சைவத்தில் அபிமானம்தான் காரணம்.

மேலும் "உருவமில்லாத பரமசிவம் முருகனைத் தோற்றுவிப்பதற்காக ஆறுமுகங்களுடன் வெளிப்பட்டார். சிவபரம்பொருள் ஆனைமுகனைத் தோன்றியபோது ஆனைமுகன் தோன்றினான்" என்கிறார் சிவப்ரியா. இவரின் இந்தக் கருத்தை ராமபாணம் முதல் பாகம் 30-ஆம் பக்கத்தில் மறுத்துள்ளேன். கண்டு கொள்க.

அக்டோபர் 2003 குமுதம் பக்தி ஸ்பெஷலில் "காசி விஸ்வநாத கங்கே" என்ற தலைப்புடன் ப்ரியா கல்யாணராமன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் "காசியில் இறப்போர்க்குப் பார்வதிதேவி உபசாரம் செய்ய, சிவன் தாரகமந்திரம் கூறி முக்தி அளிப்பார் என்பது ஐதீகம்.

மாதவத்தார் காசிதனில் மாண்டவர்கள் தம் செவியில்
தீது அகல விஸ்வேசன் செப்புவான் ஐந்தெழுத்தை
மாதவள் விசாலாட்சி மடிக்கிடத்தி வீசுவாள்
வேதனையெல்லாம் தீர்ந்து வென்றிடுவர் பின் பிறப்பை

என்கிறது ஒருபாடல்'' என்று எழுதியுள்ளார். இந்தப் பாடல் எதில் உள்ளது. யார் எழுதியது என்பது ப்ரியா கல்யாணராமனுக்குத் தெரியாது போலும். அதனால்தான் அவர் அதைப்பற்றியெல்லாம் பேசாமல் ''என்கிறது ஒரு பாடல்'' என்ற சொற்றொடரோடு முடித்து விட்டார். நான் சொல்கிறேன். இந்தப் பாடல் ப்ரியா கல்யாணராமன் போன்ற நவீனர்கள் சொந்தமாக எழுதியதுதான். இந்தப் பாடலின் மூலம் ''நமःசிவாய'' என்ற ஐந்தெழுத்துதான் தாரக நாமம் என்று ஏற்படுகிறது. அதை இறந்தவர்களின் காதில் சொல்லித்தான் சிவன் முக்தியளிக்கிருர் என்பது ப்ரியா கல்யாணராமனின் கருத்தென்று தெரிகிறது. ப்ரியா கல்யாணராமன் உண்மையை உணராத மதவெறி பிடித்த சைவர் என்று இதனுல் தெரிகிறது. இவரைப் போன்ற சைவர்களாலும் சமரசவாதிகளாலும், சாக்தர்களாலும் 'ஜகத்குரு' என்று அழைக்கப்படும் ஆதிசங்கரர்.

> யத₃வர்ணயத் கர்ணமூலேந்தகாலே
> சிவோ ராம ராமேதி ராமேதி காஶ்யாம்
> ததே₃கம் பரம் தாரகம் ப்₃ரஹ்ம ரூபம்
> ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ப₄ஜேஹம் ||

[''சிவன் காசியில் ஜீவன் சரீரத்தை விடும்போது வலக்காதில் எந்த ராமனின் தாரக மந்திரத்தை ராம, ராம, ராம என்று நன்கு உபதேசிக்கின்ருரோ அந்த உத்தமமான மந்திரமாய் பிறப்பென்னும் துன்பத்திலிருந்து காப்பாற்றுவதாய், வேதமயமான தான அந்த ஸ்ரீராம தாரக மந்திரத்தை ஜபிக்கிறேன்''] என்று கூறுகிருர். ஆதிசங்கரரின் கூற்றுப்படி பார்த்தால் மோட்சமளிக்கக் கூடிய தாரக மந்திரம் ஸ்ரீராமநாமம்தான் என்று தெரிகிறது. பிறகு ஏன் ப்ரியா கல்யாணராமன் உண்மையை மறைத்து எழுதினுர்? காரணம் அவரது விஷ்ணு த்₃வேஷமும் சிவாபிமானமுமே.

மேலும் அதே பக்தி ஸ்பெஷல் இதழில் 108 வைணவத் திருப்பதிகளுள் ஒன்றுன ''திருச்செம்பொன் செய் கோவிலைப்'' பற்றி ப்ரியா கல்யாணராமன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ''ராவணனைக் கொன்றதால் ஏற்பட்ட ப்ரஹ்மஹத்தி தோஷம் நீங்க ராமன் திருச்செம்பொன் செய் கோயில் வந்து பொன் பசுவை தானம் செய்து பெருமானை வழிபட்டு தோஷம் நீங்கப்பெற்ருர்'' என்று எழுதுகிருர். ராமன் ராமேச்வரத்தில் சிவனை வழிபட்டு பிரஹ்மஹத்தி தோஷம் நீங்கப்பெற்ருர் என்ற விஷ்ணு த்வேஷிகளின் கட்டுக் கதையை ஏற்றுக்கொள்ளும் ப்ரியாகல்யாணராமன் இங்கு வேறு விதமாகக் கூறுவது ஏன்? வைஷ்ணவ திவ்யதேசமான திருச்செம்பொன் செய் கோயிலின் தல வரலாறு இவர் சொல்வதைப்போல் இல்லையே.

திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் செய்தது இந்த க்ஷேத்ரம் (திருச்செம்பொன் செய் கோயில்). ''ராமபிரான் த்ருடநேத்ரர் என்ற முனிவரின் அறிவுரைப்படி தங்கப்பசு செய்து, நான்கு நாட்கள் தங்கி, பிறகு ஒரு பிராமணனுக்கு தானம் செய்தாரென்பதும், அந்தத் தங்கத்தைக் கொண்டு இளையபெருமாள் கோயிலைக் கட்டியதால் இது 'செம்பொன் செய் கோயில்' என்று வழங்கப்படுகிறது; சிவபெருமான் தனது ப்ரஹ்மஹத்தி தோஷம் (பிரம்மன் தலையைக் கிள்ளியதால் விளைந்தது.) நீங்க 'ஏகாதச ருத்ர' அஸ்வமேத யாகத்தைச் செய்து, பூர்ணாஹுதி ஸமயத்தில் பகவான் ஸ்ரீபூமிநீளா ஸமேதராய் ப்ரஹ்மாதிகளுடன் ருத்ரனுக்கு சேவை சாதித்தபோது, ருத்ரனின் பிரார்த்தனைப்படி பகவான் விஷ்ணு பதினொரு ரூபத்துடன் நித்யவாஸம் செய்துகொண்டு பக்தர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறார் என்பதும் இக் கோயில் வரலாறு. இதனால் தை மாதம் சுக்லபக்ஷம் ப்ரதமை ராத்ரியில் 11 திவ்யதேச எம்பெருமான்களும் நாங்கூர் மணிமாடக் கோயிலிலிருந்து தொடங்கி 11 கருடவாஹனங்களில் எழுந்தருளுகிறார். திருநாங்கூரில் 11 கருடஸேவை உத்ஸவம் இன்றும் வருடாவருடம் சிறப்புடன் நடைபெறுகிறது. திருநாங்கூர் 11 திவ்யதேசங்களும் சிவன் பெருமாளைப் பூஜிப்பதற்காக ஏற்பட்டவை. இந்த உண்மையை இப்பொழுதும் அந்த திவ்ய தேசத்தில் நடைபெற்றுவரும் விழாக்களின்மூலம் அறியலாம். சிவனுடைய பிரஹ்மஹத்தி தோஷம் விலகப் பெருமாளை சிவன் வழிபட்ட ஸ்தலமே திருச்செம்பொன் செய் கோயில். இந்த உண்மையை மறைத்து ''பிரஹ்மஹத்தி தோஷம் விலக ராமன் வழிபட்ட ஸ்தலம்'' என்று எழுதி, தனது சிவாபிமானத்தையும், விஷ்ணு வைஷ்ணவத்வேஷத்தையும் வெளிக்காட்டுகிறார். வைணவ ஸ்தலங்களைப்பற்றி எழுத ஒரு நல்ல வைணவர் கிடைக்கவில்லையா இந்த நாட்டில்? பிரியா கல்யாணராமனைப் போன்ற சைவ வெறி பிடித்த புல்லுருவிகளைக் கொண்டு வைணவத்தலங்களின் வரலாற்றை எழுதச் சொன்னால் இப்படித்தான் தாறுமாறாக எழுதி வைப்பார்கள். இதை 'குமுதம் பக்தி ஸ்பெஷல்' நிர்வாகிகள் புரிந்து கொள்வார்களா?

ஞானபூமி—அக்டோபர் 2003 இதழில் மூத்த வழக்கறிஞர் ஆர் கிருஷ்ணஸ்வாமி என்பவர் ''பாதங்களே போற்றி போற்றி'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் ''பிரம்மமான சக்தியே ஹிமவானின் பெண்ணாக அவதரித்தாள். தேவாசுர யுத்தத்தில் வெற்றியடைந்த மமதையில் தேவர்கள் இருந்த போது தேவர்களின் கர்வத்தையடக்க ஆதி சக்தியான அந்த பிரஹ்மம் யக்ஷ வடிவில் தோன்றியது. அந்த யக்ஷனின் பலத்தை ஸஹிக்க முடியாமல் வாயுவும் அக்னியும் தோல்வியடைந்தபோது இந்திரன் அங்கேவர அந்த யக்ஷரூபம் மறைந்

தது. தேவர்களுக்கு உண்மையைப் புகட்ட சக்திரூபமான அந்த ப்ரஹ்மம் உமையவளாக அருள் பாலித்தது. யக்ஷன் மறைந்தவுடன் இந்திரன் முன் அழகான ஒரு யுவதி தோன்றினாள். அவள்தான் ஹிமவானின் மகள் உமா. ஆதிபராசக்தியான அந்த தேவியே பிரஹ்மம் என உபநிஷத் உண்மையை இந்த சம்பவம் விளக்குகிறது' என்று எழுதியுள்ளார்.

தச உபநிஷத்துக்களில் ஒன்றான கேனோபநிஷத்தில் சொல்லப்படும் ஒரு விருத்தாந்தத்தை வைத்துக்கொண்டு உபநிஷத்தின் பொருளைப் புரிந்து கொள்ளாமல் தனது சாக்த மதாபிமானத்தால் உண்மையை மறைத்து மனம் போனபடி எழுதுகிறார் மூத்த வழக்கறிஞர். இதை இனி விமர்சிப்போம்.

கேனோபநிஷத்தில் மூன்றாம் கண்டத்தில் வழக்கறிஞர் சொன்ன விருத்தாந்தம் வருகிறது அதாவது — அஹங்காரம் கொண்ட தேவர்கள் தங்களின் வெற்றியைக் குறித்து மமதையில் இருந்தபோது அவர்களுடைய வெற்றிக்கு உண்மையில் யார் காரணம் என்பதை அவர்களுக்குப் புரிய வைப்பதற்காக பரப்ரஹ்மம் ஒரு யக்ஷ வடிவுடன் அவர்கள் முன் தோன்றியது. வாயுவும் அக்னியும் அந்த யக்ஷனின் பலத்தின் முன் நிற்க முடியவில்லை. முடிவில் இந்திரன் யக்ஷன் முன் வந்தபோது அந்த யக்ஷன் மறைந்துவிட்டான். அப்போது ஆகாயத்தில் அழகிய ஒரு ஸ்த்ரீயைக் கண்டான். அவள்தான் ஹிமவானின் புத்ரியான உமா. அவளைப் பார்த்து இந்திரன் ''இந்த யக்ஷன் யார்?' என்று கேட்டான். அதற்கு அவள் ''அந்த யக்ஷன்தான் பிரஹ்மம். அவனுடைய வெற்றியில் பெருமை கொள்ளுங்கள்'' என்று கூறினாள். உமா இந்திரன் முன் தோன்றிக் கூறிய நிகழ்ச்சியை விளக்கும் உபநிஷத் மந்திரங்கள் கீழ்க்கண்டவாறு ;—

ஸ தஸ்மிந்நேவாகாஶே ஸ்த்ரியமாஜகா₃ம
ப₃ஹுஶோப₄மாநாம் உமாம் ஹைமவதீம் |
தாம் ஹோவாச கிமேதத் யக்ஷமிதி |
ஸா ப்₃ரஹ்மேதி ஹோவாச, ப்₃ரஹ்மணோ வா
ஏதத்₃விஜயே மஹீயத்₄வம் இதி |
ததோ ஹைவ விதா₃ஞ்சகார ப்₃ரஹ்மேதி ||

இங்கே ஹைமவதியான உமா தோன்றி ''அந்த யக்ஷன்தான் பிரஹ்மம்'' என்று இந்திரனிடம் சொல்லியிருக்கும்போது அந்த உமாவே ப்ரஹ்மம் என்று எப்படித் தேறும்? பரப்ரஹ்மம் பெண் தேவதையல்ல என்பதை இந்த உபநிஷத் மந்திரங்கள் தெளிவாக விளக்குவதோடு சாக்த மதத்திற்கு மரண அடி கொடுத்துள்ளது. இவ்விடத்தில் உரை செய்த ஆதிசங்கரர் ''உமா

ஸப்தமும் மனைவியுமாகிய பார்வதியையே குறிக்கலாம். அவள் ஸர்வஜ்ஞனான (எல்லாமறிந்தவரான) ஈஸ்வரனோடு என்றும் கூடியிருப்பவளாகையால் ப்ரஹ்மம் யார் என்பதை உணர்வாள் என்ற கருத்தாலே இந்திரன் அவளை அணுகினான்" என்று எழுதியுள்ளார். அதாவது—சிவனை "எல்லாம் அறிந்த ஞானி" என்று குறிப்பிடுகிறாரே தவிர ப்ரஹ்மம் என்று கூறவில்லை. ஞானியின் மனைவியிடமும் ஞானத்தினுக்குக் குறைவிருக்காது என்ற காரணத்தால்தான் உமா இந்திரனுக்கு பிரஹ்மஜ்ஞானத்தைப் புகட்ட வந்தாள் என்பதே இங்கு தேறி நிற்கும் உண்மை. ஆகவே சிவனைப் பரப்ரஹ்மம் என்றோ அவன் மனைவியான பார்வதியைப் பரப்ரஹ்மம் என்றோ சொல்வதற்கு இந்த உபநிஷத்தில் அணுவளவும் ஆதாரம் இல்லை. "நாராயண பரம்ப்ரஹ்ம" என்று வேதமே கூறியிருக்கும்போது இங்கு யக்ஷ வடிவில் வந்த ப்ரஹ்மம் ஸ்ரீமந் நாராயணனே என்பது அசைக்கமுடியாத உண்மை ஆகிறது. வேதங்களில் சரியான பரிசயம் இல்லாமல் எவரிடமோ உபநிஷத்திலுள்ள கதையைக் கேட்டுத் தன் மனம் போனபடி எழுதுவது அறிவுடைமை ஆகாது. ஆர் கிருஷ்ணஸ்வாமி ஒரு மூத்த வழக்கறிஞர். வழக்கறிஞர் என்றாலே ஆதாரங்களின் அடிப்படையில் வாதவிவாதங்களைச் செய்து உண்மையை நிலைநாட்டவேண்டும். ஆனால் ஆர் கிருஷ்ணஸ்வாமி தன் தொழிலின் தகுதிக்குத் தக்கவாறு எழுதவில்லை. இனிமேல் அவர் எதை எழுதினாலும் அதற்குத்தக்க ஆதாரங்களைக் காட்ட வேண்டும். இல்லையெனில் மக்களால் அவரது தொழிலின் சிறப்பு சந்தேகத்திற்குரியதாகக் கொள்ளப்படும். இவர் இங்கு குறிப்பிட்ட கேனோபநிஷத்திற்குக் கடந்த 50. வருடங்களாகப் பரம்பொருளின் வழக்கறிஞராய் வாழ்ந்துவரும் ஸ்ரீ எஸ் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L. அவர்கள் மிகத்தெளிவாகவும் விரிவாகவும் வ்யாக்யானம் செய்துள்ளார்கள். மேலும் "விஷ்ணு சித்த விஜயம்" என்ற ஒரு மாபெரும் கிரந்தத்தையும் எழுதியுள்ளார்கள். மனிதர்களுக்கு வழக்கறிஞரான ஆர். கிருஷ்ணஸ்வாமி அந்த நூல்களை அவசியம் வாங்கிப் படிக்கவேண்டும். அப்பொழுதுதான் அவரைப் பிடித்திருக்கும் அறியாமை விலகும். "ஸ்ரீ எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், M.A., B.L., ஆசிரியர், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், 5, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17" என்ற முகவரியில் இப்புத்தகங்கள் கிடைக்கும். அவருக்கு எழுதிப் பெற்றுப் படித்து உண்மையை உணர்வாராக.

நவம்பர் 2003 ஞானபூமி—இதழில் 'மூத்த' வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணஸ்வாமி "திருமுருகா உன் பாதம் போற்றி" என்ற தலைப்புடன் எழுதியுள்ள ஒரு கட்டுரையில் முருகனுக்கு உரிய நாமங்களில் சுப்ரமணியன் என்ற நாமமே அவன் பரப்ரஹ்மம் என்பதைக் காட்டுகிறது என்றும், 'மு' என்றால் முகுந்தன், 'ரு' என்றால் ருத்ரன், 'க' என்றால் கமலன் என்கிறபடி 'முருகன்' என்னும் நாமம் மும்மூர்த்திகளின் சேர்க்கைதான் என்றும், முருகன் தான் ப்ரணவஸ்வரூபி என்றும், வேதங்களே முருகனைத் தான் பரம்பொருள் என்று கூறுகிறது என்றும், "நிஹிதம் கு₃ஹாயாம்" என்ற இடத்தில் வேதம் முருகனை குஹன் என்ற பெயரால் அழைக்கிறது என்றும் சாந்தோக்ய உபநிஷத் முருகனைப் பரம்பொருளாகவும், ஒளிப்பிழம்பாகவும் விளக்குகிறது என்றும் தன் வாய்க்கு வந்தபடி உளறியிருக்கிறார்.

கந்தபுராணத்தை அடிப்படையாக வைத்துத் தங்களின் சொந்தப் புளுகையெல்லாம் அளவில்லாமல் அள்ளிவிட்டுக்கொண்டிருக்கும் சைவ விஷமிகள் தற்போது தங்களது சொந்தச் சரக்கை முதலாக்கி, தங்களின் அபத்தக் கருத்துக்களுக்கு வேதங்களை வேறு துணையாக இழுக்கின்றனர். வடமொழி வார்த்தைகளில் ஏதோ ஒன்றிரண்டுக்கு அரைகுறையாக அர்த்தம் தெரிந்து வைத்துக்கொண்டு ஏதோ வேதத்தைக் கரை கண்டு விட்டவர்கள் போல் அளவின்றி உளறித் தள்ளுகின்றனர். தங்களது இஷ்ட தெய்வங்களுக்கு ஏற்றம் கொடுக்கவேண்டும் என்ற நோக்கத்தில் அந்த தெய்வங்களின் தமிழ்ப் பெயர்களில் உள்ள எழுத்துக்களைக் கொண்டு தத்துவத்தை நிர்ணயிக்கின்றனர். இவர்களுடைய கருத்துக்களுக்கு எந்தவித ஆதாரத்தையும் இவர்களால் காட்டமுடியாது. ஆனால் இவர்கள் எழுதுவதைப் படிக்கும் மக்களை மடையர்களாக்க இப்படியெல்லாம் எழுதியும் பேசியும் வருகின்றனர். இப்படிப்பட்டவர்களில் தற்போது முதலிடத்தைப் பெறுபவர்தான் மேற்சொன்ன ஞானபூமிக் கட்டுரை ஆசிரியர் ஆர். கிருஷ்ணஸ்வாமி.

வேதத்தில் (தைத்திரீய உபநிஷத்தில்) உள்ள "நிஹிதம் கு₃ஹாயாம்" என்ற சொற்றொடருக்கும் முருகனுக்கும் உள்ள சம்பந்தம் அமாவாசைக்கும் அப்துல்காதருக்கும் உள்ள சம்பந்தம் தான். தஹராகாசம் என்னும் ஹ்ருதயத்தினுள் இருக்கும் பர

ப்ரஹ்மத்தைப் பற்றிப் பேசுகிறது—''நிஹிதம் குஹாயாம்'' என்ற வேதச்சொற்றொடர். ''குஹாயாம்—குகையில், நிஹிதம்—மறைந்திருப்பவன்'' என்பதல்லவோ இதன் பொருள். இந்த இடத்தில் முருகனுக்கு என்ன வேலை இருக்கிறது? ஸாம வேதத்தில் உள்ள சாந்தோக்ய உபநிஷத் முழுவதிலும் ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளாகக் கூறப்படுகிறான். அந்த உபநிஷத்தில் முருகனுக்கு எங்கே இடம் இருக்கிறது?

''மறைகளின் தலைகள் மன்பெரும் பரமார்த்தமென்று
உரைக்கின்ற மாற்றம் அன்ப நின்னையல்லால்
மற்றிங்கு யாரையும் அறையா'' — என்று நான்முகன் ஸ்ரீராமனைப் பார்த்துக் கூறுவதாகக் கம்பன் கூறியுள்ளதை மூத்த வழக்கறிஞர் படித்தாரோ படிக்கவில்லையோ தெரியவில்லை. இது தவிர, வேதத்தில் சிவன், துர்க்கை போன்ற தெய்வங்களுக்கு இருப்பதுபோல் முருகனுக்குத் துதி மந்திரங்கள் கூட இல்லை. முருகனைப் பற்றி ஒரு பதம் கூட வேதங்களில் காணப்படவில்லை. அப்படியிருக்கும்போது ''மூத்த'' வழக்கறிஞர் எப்படி முருகனை வேதம் காட்டும் பரம்பொருள் என்கிறார்? வேதத்தில் வரும் ''ஸுப்ரம்மண்யோம்'' என்பது காடக மந்திரம். ''ப்ரஹ்மத்திற்கு நான் அடிமை என்று பிரணவம் சொல்கிறது'' என்பதே இப்பதத்திற்குப் பொருள் என்று பழைய உரைகளைப் பின்பற்றி ஸ்ரீஸுதர்சனர் போன்ற வடமொழி வல்லுநர்கள் கூறியுள்ளனர். ஆகவே இந்தப் பதத்திற்கும் முருகனுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்பது தெளிவு. ஆகவே ஸர்வ அபத்தமாகக் கட்டுரைகள் எழுதிவரும் 'மூத்த' வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணமூர்த்தி சரியான நூலறிவும், வடமொழி அறிவும் சிறிதும் இல்லாதவர் என்பதே உண்மை. இவரது கட்டுரைகளை வெளியிட்டு மக்களை மடையர்களாக்கி வரும் ஞானபூமி போன்ற பத்திரிகைகள் உண்மையான ஆன்மிக நெறிக்கும் வேதங்களுக்கும் தீங்கிழைத்து வருகின்றன என்பதில் ஐயமில்லை. மக்கள் புரிந்து நடந்து கொள்ள வேண்டும்.

மார்ச்—2004 குமுதம் பக்தி ஸ்பெஷலில் 21-ம் பக்கத்தில் பாணாசுரனுக்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் நடந்த யுத்தம் பற்றிய கட்டுரை ஒன்று வெளிவந்துள்ளது. கட்டுரை எழுதியவரின் பெயர் கொடுக்கப்படவில்லை. அந்தக் கட்டுரையில், ''அரியும் சிவனும் ஒன்று'' என்பதை உலகுக்கு உணர்த்தவே அங்கு

சிவனுக்கும் கிருஷ்ணனுக்கும் போர் நடந்தது. போரில் மற்றவர்கள்தான் ஸ்ரீகிருஷ்ணனின் மாய சக்திக்கு மயங்கினார்களே தவிர சிவன் ஸ்ரீகிருஷ்ணனின் மாயையில் சிக்கவில்லை. ஏனெனில் மாயையைக் கடந்த பரம் பொருளல்லவா சிவன்'' என்று எழுதப் பட்டுள்ளது.

பாணாசுரனுக்கும் ஸ்ரீகிருஷ்ணனுக்கும் நடந்த யுத்தம் பற்றிய விருத்தாந்தம் ஸ்ரீமத் பாகவதம் தசமஸ்கந்தம் 63-ஆம் அத்யாயத்தில் வருகிறது. அதில் ஸ்ரீகிருஷ்ணரால் பிரயோகிக்கப்பட்ட ஜ்ரும்பணாஸ்திரத்தினால் சிவன் கொட்டாவி விட்டார் என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீகிருஷ்ணனுடைய மாயைக்கு சிவன் வசப்பட்டு மயங்கியவுடன் சிவனுடன் வந்த மற்ற பூதகணங்கள், மற்றும் சக்தி, முருகன் எல்லோரும் ஸ்ரீகிருஷ்ணரின் தாக்குதலைத் தாங்க முடியாமல் போர்க்களத்தை விட்டு ஓடிவிட்டனர். அச்சமயம் ஸ்ரீகிருஷ்ணர் பாணாசுரனின் கைகளை மளமளவென்று வெட்டித் தள்ளினார். அந்த நேரத்தில் தன் பக்தனைக் காப்பாற்ற சிவன் ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி ஸ்தோத்ரம் செய்தார். அவரது ஸ்தோத்ரத்திலிருந்து ஓரிரண்டு ஶ்லோகங்களும் அவற்றுக்குப் பொருளும் கீழே தருகிறேன்.

**தவாவதாரோ ऽயமகுண்ட$_2$ தா$_1$மந்**
**த$_1$ர்மஸ்ய கு$_3$ப்த்யை ஜக$_3$தோ ப$_4$வாய |**
**வயம் ச ஸர்வே ப$_4$வதாநுபா$_4$விதா**
**விபா$_4$வயாமோ பு$_4$வநாநி ஸப்த ||**
**த்வமேக ஆத்$_3$ய: புருஷோ ऽத்$_3$விதீய:**
**துர்ய: ஸ்வத்$_3$ருக் ஹேது ரஹேதுரீஶ: |**
**ப்ரதீயஸே ऽதா$_2$பி யதா$_2$விகாரம்**
**ஸ்வமாயயா ஸர்வகு$_3$ண ப்ரஸித்$_3$த்$_4$யை ||**

[இதன் பொருள்: ''குறையாத புகழுள்ள இறைவா! தர்மத்தைக் காக்கவும் உலக வளர்ச்சிக்காகவும் இந்த அவதாரத்தை எடுத்துள்ளாய். தேவரீரிடமிருந்து பெற்ற சக்தியால் இப்பிரபஞ்சத்தின் ஏழு பிரிவுகளையும் நாங்கள் ஆள்கிறோம். ஒப்பற்றவனும் புராண புருஷனுமான நீயே மாயையின் முக்குணங்களைக் கடந்தவன். உன் கல்யாண குணங்களை வெளிப்படுத்த நீயே உன் மாயையால் (ஸங்கல்பத்தால்) உலகில் தோன்றுகிறாய்'']

இதுதான் சிவன் செய்த ஸ்துதி. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் மாயையைக் கடந்த பரம்பொருள் ஸ்ரீகிருஷ்ணர்தான் என்றும், சிவன் முதலிய மற்ற தேவர்களுக்கெல்லாம் சக்தியளித்த

வர் ஸ்ரீகிருஷ்ணராகிய விஷ்ணுவே என்றும் தெரிய வருகிறது. அதுவும் இந்த விஷயத்தைப் பேச நின்ற சிவனே தன் வாயால் சொல்லுகிறான் என்றால் இதைவிட என்ன ஆதாரம் வேண்டும்? அதே ஸ்ரீமத் பாகவதத்தில் பகவானின் மோஹினி அவதாரத்தைக் கண்டு மயங்கிய சிவனுக்கு வீர்யம் வெளிப்பட்டதாகச் செய்தி உள்ளது. அந்தச் சமயத்தில் தான் விஷ்ணுமாயையிலிருந்து மீண்டவுடன் சிவன் தன் மனைவியான பார்வதியிடம் 'விஷ்ணு மாயையை யாராலும் கடக்கமுடியாது' என்றும், தானே விஷ்ணு மாயையில் அகப்பட்டு விட்டதாகவும் கூறுகிறார். இப்படிப் பல இடங்களில் வருகிறது. இப்படியிருக்கும்போது சிவன் மாயைக்கு அகப்படாத பரம்பொருள் என்று ஆதாரமில்லாத இந்தக் கட்டுரை ஆசிரியர் கூறுவது வெறும் சிவாபிமானத்தாலன்றி வேறில்லை. இப்படிப்பட்ட அபத்தக் கட்டுரைகளை வெளியிடும் குமுதம் பக்தி ஸ்பெஷல் ஆன்மிக விஷயத்தில் மிகப்பெரிய தீங்கிழைத்து வருகிறது. பகட்டிற்கும் பந்தாவிற்கும், விளம்பரத்திற்கும் பெயர் போன இப்படிப்பட்ட பத்திரிகைகளில் வரும் ஆன்மிகச் செய்திகளை அறிவுள்ள எவரும் ஏற்கமாட்டார்கள்.

அம்மன் தரிசனம் நவம்பர் 2008 இதழில் "இராமாயணக் கேள்வி—பதில்" என்ற பகுதியில் "இந்திரனுடைய தாய் அதிதி வயிற்றில் உருவானவர் உபேந்த்ரன். திருமாலே உபேந்த்ரனாகப் பிறந்தார். அந்த உபேந்த்ரன்தான் அங்கதனாகப் பிறந்தார். எனவே அங்கதன் திருமாலின் அம்சம்" என்று எழுதியிருக்கிறார்கள்.

அங்கதன் திருமாலின் அம்சம் என்பதற்கு வால்மீகி ராமாயணத்திலோ கம்பராமாயணத்திலோ ஆதாரம் இல்லை. நமது பாரத வர்ஷத்தின் இருபெரும் தத்துவக் கருவூலங்களான ராமாயணத்தையும், மஹாபாரதத்தையும் ஒருமுறைகூடச் சரியாகப் படித்துப் பார்க்காமல் சில அதிகப் பிரசங்கிகள் கதை சொல்ல ஆரம்பித்து விடுகிறார்கள். அதை அப்படியே சரியா, தவறு என்றுகூடப் பார்க்காமல் சில தரங்கெட்ட பத்திரிகைகள் வெளியிட்டு விடுகின்றன. அதைப் படிக்கும் பாமர ஜனங்கள் அதை நம்பத்தானே செய்வார்கள் நமது இதிஹாஸங்களில் வரும் செய்திகளைத் திரித்துக்கூறும் இம்மாதிரிப் பத்திரிகைகளை மக்கள் படிக்காமல் இருப்பது நல்லது. வாலியும் அங்கதனும் இந்திரனின் அம்சமாக, உபேந்த்ரனை ஸ்ரீராமனுக்கு உதவி செய்யப் பிறந்தவர்கள். வாலி பாதை மாறிப்போனதால் ஸ்ரீராமனால் கொல்லப்பட்டான். அங்கதன் ராமபக்தனாகி, கடைசிவரை ராம கைங்கர்யம் செய்து வந்தான். இப்படித்தான் ராமாயணத்தில் உள்ளது ஆகவே அங்கதனைத் திருமாலின் அம்சம் என்று கூறுவது பரம அபத்தமாகும்.

ஆன்மிகப் பொதுஜனப் பத்திரிகைகளில் விற்பனையில் முதல் இடம் பிடித்துள்ள 'ஞானபூமி'' முழுக்க முழுக்க விஷ்ணு வைஷ்ணவ த்வேஷப் பிரசாரங்களையே தனது குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வருவதைப் பலமுறை ஸ்ரீஸு'தர்சனர் அவர்களும் ராமபாணத்தில் அடியேனும் கண்டித்து வந்துள்ளோம். கண்டனங்கள் அந்தப் பத்திரிகையின் நிர்வாகத்திற்கும் அடிக்கடி அனுப்பப்பட்டு வருகின்றன. ஆனால் 'ஞானபூமி' தன் போக்கை மாற்றிக் கொள்வதாகத் தெரியவில்லை. முன்பெல்லாம் விஷ்ணு வைஷ்ணவத்வேஷக் கருத்துக்களைக் கொண்ட கட்டுரைகளையே வெளியிட்டு வந்த இந்தப் பத்திரிகை சமீப காலமாக, ஓரிடத்தில் விஷ்ணு பரத்வத்தைச் சொல்லும் கட்டுரையையும், வேறோரிடத்தில் சிவ பரத்வத்தோடு கூடிய விஷ்ணுத்வேஷக் கட்டுரையையும் வெளியிட்டு 'சமரசப்' போக்கைக் கடைப்பிடித்து வருகிறது. காமகோடியின் ஆசியுடன் வெளிவரும் இப்பத்திரிகை இப்படி நடந்து கொள்வதில் ஆச்சர்யமில்லை என்றாலும், பொதுமக்களை மூளைச் சலவை செய்து ஆன்மிகத்தில் எந்தத் தெளிவையும் ஏற்படுத்தாது முழு மூடர்களாக்குவதை நம்மால் சகித்துக்கொள்ள இயலவில்லை. ஓரிடத்தில் விஷ்ணுவை சிவன் வணங்கினான் என்று சொல்லிவிட்டு மற்றோரிடத்தில் சிவனை விஷ்ணு வணங்கினான் என்று சொன்னால் ''நாம் யாரை வணங்குவது?'' என்ற கேள்வி ஞானபூமியைப் படிக்கும் வாசகன் (அவன் அறிவாளியாக இருந்தால்) மனத்தில் எழத்தானே செய்யும். ''யாரை வேண்டுமானாலும் நாம் வணங்கலாம்'' என்று சொன்னால், ''ஸகலஜகத்திற்கும் காரணமானவனைத்தான் வணங்கவேண்டும். (காரணம் து த்₄யேய:)'' ''நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே'' [பரமபுருஷனை அறிவது தவிர மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.] என்று வேத வாக்யங்கள் சொல்வதற்கு முரண்படுமே. ''வேதக் கருத்துக்கு முரண்பட்டாலும் பரவாயில்லை, யாரை வேண்டுமானாலும் வணங்கலாம்'' என்ற ஞான பூமிக் கருத்தை (காமகோடிக் கருத்தை) ஒருவன் ஏற்றுக்கொண்டால் அல்லாவையும் வழிபடலாம், இயேசுவையும் வழிபடலாம், புத்தரையும் வழிபடலாம் என்றுதானே அதற்கு அர்த்தமாக முடியும். ஞானபூமி படிக்கும் மற்ற வாசகர்களைவிட, ஞானபூமி படிக்கும் வைஷ்ணவர்கள் மிக முக்கியமாகச் சிந்திக்க வேண்டிய விஷயம் இது.

'ஞானபூமி' ஏப்ரல்-2004 இதழில், 'ஸ்ரீராமருக்கு கீதோபதேசம்' என்ற தலைப்பில் "மூத்த" வழக்கறிஞர் ஆர் கிருஷ்ணஸ்வாமி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இதில் "பத்ம புராணத்தில் உத்தர காண்டத்தில் சிவபிரானுக்கும் ராமனுக்கும் நடந்த சம்பாஷணையே சிவகீதை என்னும் பெயரில் பிரசித்தி பெற்றுள்ளது. இந்த அற்புதமான வேதாந்த சாரத்தை அகத்திய மாமுனி ராமனுக்கு உபதேசித்ததாகக் கூறப்படுகிறது. அவருடைய ஆலோசனையின் பேரில் ராமன் கடுந்தவம் புரிந்து சிவபெருமானின் ஆயிரம் உருவ லிங்கங்களைப் பூஜித்து அதன்பின் சிவபிரானால் உபதேசம் செய்யப் பட்டதாகப் புராணம் விளக்குகிறது. அகத்தியரின் உபதேசப்படி ராமன் சிவனை உபாஸித்து பாசுபதாஸ்திரம் பெற்றதாகவும், அதன் மூலம் ராமன் ராவணனைக் கொன்றதாகவும், சிவகீதையை சிவன் ராமனுக்கு உபதேசிக்கும்போது சிவனுடைய விஸ்வரூபத்தில் நாராயணன் உட்பட எல்லா தேவர்களையும் ராமன் கண்டதாகவும் அதனால் எல்லாம் சிவமயமே என்று ராமன் உணர்ந்ததாகவும் பத்ம புராணத்தில் கூறப்பட்டுள்ளது" என்று எழுதியுள்ளார்.

நமது சநாதன தர்மமான ஆன்மிகத் தத்துவத்திற்கு அடிப்படை வேதங்கள். அந்த வேதங்களை சாமாந்யர்கள் எளிதில் புரிந்துகொள்ள இயலாது என்பதற்காக வால்மீகி வியாஸர் போன்றோர் இதிஹாஸ புராணங்களை இயற்றினர். அவற்றினும் இதிஹாஸங்கள் என்று அழைக்கப்படுகின்ற ராமாயணமும், மஹாபாரதமும் வேதக் கருத்துக்களுக்கு முரண்படாதிருப்பதால் அவை முற்றிலும் பிரமாணமாகும். புராணங்களில் ஸாத்விக, ராஜஸ, தாமஸப் பிரிவுகள் உள்ளபடியால் வேதக்கருத்துக்கு முரண்படாத ஸாத்விக புராணங்கள் மட்டுமே பிரமாணங்கள் ஆகும் என்பது சங்கரர் ராமாநுஜர் போன்ற பேரறிஞர்களின் நிர்ணயம். புராணங்கள் 18-ல் விஷ்ணுபுராணம், நாரதபுராணம், பாகவத புராணம், கருடபுராணம், பத்ம புராணம், வராஹபுராணம் இந்த ஆறும் ஸாத்விக புராணங்கள் ஆகும். வேதம் பகரும் விஷ்ணு பரத்வத்துடன் மோக்ஷ சாதனங்களைக் கூறும் இப்புராணங்கள் ஆறும் அதிசிரேஷ்டமானவை என்று வேதாந்த நிர்ணயம் செய்யும் பேரறிஞர்களால் கருதப்படுகின்றன.

இங்கு 'மூத்த' வழக்கறிஞர் ஆர் கிருஷ்ணஸ்வாமி சிவகீதையும், ராமன் சிவனைப் பூஜித்ததாகக் கூறும் கதையும் பத்மபுரா

ணத்தில் உள்ளதாக எழுதியுள்ளார். பரம ஸாத்விக புராண மான பத்ம புராணத்தில் இப்படியொரு விஷ்ணுத்வேஷக் கருத் துள்ள கதை இடம் பெற்றிருப்பதாக வழக்கறிஞர் கூறுவதி லிருந்து என்ன தெரிகிறதென்றால், வழக்கறிஞர் பத்ம புரா ணத்தைப் புரட்டிக் கூடப் பார்த்தவர் இல்லை என்பது தெள்ளத் தெளிவாகிறது. அல்லது பத்மபுராணம் என்ற பெயரில் இவர் ஒரு புளுகு புராணத்தைக் கற்பித்திருக்கவேண்டும்.

பத்மபுராணம் உத்தர கண்டத்தில், சிவனுக்கு மிகவும் தாழ்ந்த உருவமான யோனிலிங்கஸ்வரூபம் ஏற்பட்டதற்கு என்ன காரணம் என்று திலீபன் வஸிஷ்டரைக் கேட்டபொழுது வஸிஷ் டர் பரம்பொருள் யார் என்பது குறித்து, ஸத்ரயாகம் செய்த ரிஷிகளுக்கிடையில் விவாதம் ஏற்பட்டதாகவும், அதை நிர்ண யிக்க ப்ருகு மும்மூர்த்திகளைச் சோதிக்கச் சென்றதாகவும், சோதனையின் முடிவில் பகவான் ஸ்ரீமந் நாராயணனே அழியாத பரப்ரஹ்ம வஸ்து என்பதும் அவரே மோக்ஷ மார்க்கத்தை விரும் பும் விவேகிகளான வைதிகர்களால் வணங்கப்படும் தெய்வம் என்பதும் நிரூபிக்கப்பட்டதாகவும் கூறுகிறார். மேலும் சிவனை உபாஸிப்பவர்கள் சண்டாளர்கள் என்றும், சங்கராதிகளுக்கு சமர்ப்பிக்கப்பட்ட ப்ரஸாதங்கள் வைதிகர்களால் உண்ணத்தகா தவை என்ற விபரமும் அந்த விருத்தாந்தத்தில் வருகிறது. ப்ருகு சிவனை சபித்த விஷயம் பத்ம புராண உத்தரகண்டத்தில் கீழ்க்கண்டவாறு உள்ளது.

நாரீஸங்க₃மமத்தோஸௌ யஸ்மாந் மாமவமந்யதே |
யோனிலிங்க₃ஸ்வரூபம் வை தஸ்மாத் தஸ்ய ப₄விஷ்யதி ||
ப₃ராஹ்மணம் மாவஜாநாதி தமஸா ஸமுபாக₃த: |
அப்₃ரஹ்மண்யத்வமாபந்நோ ஹ்யபூஜ்யோஸௌ த்₃விஜந்மநாம் ||
தஸ்மாத₃ந்நம் ஜலம் புஷ்பம் தஸ்மை த₃த்தம் ஹவிஸ் தத₂ா |
நிர்மால்யமஸ்ய தத் ஸர்வம் ப₄விஷ்யதி ந ஸம்ஶய: ||
ஏவம் ஶப்த்வா மஹாதேஜா: ஶங்கரம் லோகபூஜிதம் |
உவாச க₃ணமத்யுக்₃ரம் நந்தி₃ம் குலத₄ரம் ந்ருப ||
ருத்₃ரப₁க்தாஶ்ச யே லோகே ப₄ஸ்மலிங்க₃ாஸ்தி₂ தா₁ரிண: |
தே பாஷண்ட₃த்வ மாபந்நா வேத₃ப₃ாஹ்யா ப₄வந்து வை ||

இதன் பொருள் :— "பெண் உறவில் மயங்கி என்னை சிவன் அவமதித்ததனால் பெண்—ஆண் குறிகள் இணைந்த உருவம் இவனுக்கு ஏற்படக்கடவது. தாமஸ குணம் கொண்ட இவன் அந்தணனான என்னை அவமதித்ததால் ப்ராஹ்மண பூஜைக்கு அருகதை இல்லாதவனாகி, ப்ராஹ்மணர்களால் பூஜிக்கப்படமாட்டான். ஆகையால் இவனுக்கு அளிக்கப்படும் அந்நம், ஜலம், புஷ்பம், ஹவிஸ் இவைகள் எல்லாம் நிர்மால்யம் (உபயோகிக்கத்தகாதது) ஆகும். இதில் ஐயமில்லை" என்று உலகோரால் பூஜிக்கப்படும் ருத்ரனை சபித்து, மஹாதேஜஸ்வியான அந்த ப்ருகு முனிவர் ஜுலமேந்திய நந்தியை நோக்கி "சாம்பலையும், லிங்கத்தையும், கபாலத்தையும் தரித்து நிற்கும் சிவ பக்தர்கள் பாஷண்டிகளாய் வேதத்துக்குப் புறம்பானவர்களாகக் கருதப்படுவர்" என்று கடுமையாக சபித்தார்.

இதுதவிர, மஹாபாரதத்தில் வரும் பகவத்கீதை பல்லாயிரக் கணக்கான பதிப்புகளுடனும், மொழி பெயர்ப்புடனும் உலகம் முழுக்கப்பரவி உலகப்புகழ் பெற்றுள்ளது. ஆனால் சைவர்களின் கற்பனைப் படைப்பான சிவகீதையைப்பற்றிக் கேள்விப்பட்டவர்களின் எண்ணிக்கை கூட நம் நாட்டில் மிகக் குறைவாகத்தான் இருக்கும். பகவத்கீதை பெற்றுள்ள பெரும்புகழைக்கண்டு சகிக்காத சைவ வெறியர்கள் அதற்குப் போட்டியாக சிவகீதை என்று ஒன்றைக் கற்பித்து "அது அந்தப் புராணத்தில் உள்ளது. இந்தப் புராணத்தில் உள்ளது" என்று புளுகி வருகின்றனர். அத்தகைய பிரஹ்மாண்டப் புளுகர்களில் தலைசிறந்தவராக வந்துள்ளார் இந்த மூத்த வழக்கறிஞர் ஆர் கிருஷ்ணஸ்வாமி.

பரம ஸாத்விக புராணமான பத்ம புராணத்தில் இவர் சொன்ன சிவகீதைக் கதை இல்லை என்பது அந்தப் புராணத்தைப் படித்த நடுநிலையாளர்களுக்கு விளங்கும். ஆதாரமில்லாமல் புளுகு மூட்டைகளை ஆன்மிக விஷயத்தில் அவிழ்த்து விடுவது இவரைப் போன்ற மூத்த வழக்கறிஞர் செய்யும் வேலை அல்ல. தன் தொழில், தன் தகுதி இவற்றுக்கேற்ற மனச்சாட்சி கூட இவருக்கு இல்லை. வெறும் விஷ்ணுத்வேஷமும் சிவாபிமானமும் தான் இவரது எழுத்துக்களில் தெரிகிறது. மனச்சாட்சியற்ற ஒரு சைவமத வெறியர் என்றுதான் இவரைச் சொல்லவேண்டும்.

நவம்பர்—2008 அம்மன் தரிசனம் இதழில் 'ராமகாதை புதிய சிந்தனை' என்ற தலைப்பில் இதே சீனியர் அட்வகேட் "ராமன் வனவாஸத்தில் இருக்கும்போது கோதாவரியில் ராமன் சீதையோடும், லக்ஷ்மணனோடும் குளித்துவிட்டுக் கரையேறும்போது ருத்ரன் பார்வதியோடும் நந்தியோடும் வருவதுபோல் காணப்பட்டார் என்று வால்மீகி கூறியுள்ளார். இதனால் சிவ—விஷ்ணு பேதமில்லை என்பது வால்மீகியின் கருத்தல்லவா" என்று எழுதியுள்ளார்.

வால்மீகி ராமாயணம்—ஆரண்ய காண்டம்—16-வது ஸர்க்கம் 48-வது ஶ்லோகம்:—

> க்ருதாபி₄ஷேக: ஸ ரராஜ ராம:
> ஸீதாத்₃விதீய: ஸஹ லக்ஷ்மணேந |
> க்ருதாபி₄ஷேகோ கி₃ரிராஜ புத்ர்யா
> ருத்₃ர: ஸநந்தீ₃ ப₄க₃வாநிவேஶ: ||

இதன் பொருள் :— ராமன் ஸ்நானம் செய்து ஸீதையுடனும் லக்ஷ்மணனுடனும் திரும்பி வரும்பொழுது, ருத்ரன் ஸ்நானம் செய்து பார்வதியோடும் நந்தியோடும் இருப்பதுபோல் விளங்கினான்.

இந்த ஶ்லோகத்தால் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பேதமில்லை என்று எப்படித் தேறும்? குளித்துவிட்டு வரும்பொழுது ராமனுடைய உருவத் தோற்றத்திற்கு ருத்ரனுடைய உருவத் தோற்றத்தை உவமையாகக் கூறுகிறார் கவி. ஒரு பொருளுக்கு ஒன்றை உவமையாகக் கூறினால் அந்த உவமையும் உவமேயமும் ஒன்றாக முடியுமா? இராமன் இருந்த தவக்கோலத்திற்கு ருத்ரனுடைய தோற்றம் இங்கு உவமையாகக் கூறப்பட்டதே ஒழிய இராமன்—ருத்ரன் இருவருக்கிடையில் மற்றவகையில் எந்தவித ஸாம்யமும் சொல்லப்படவில்லை. "பெண் கிளி மாதிரி இருக்கிறாள்" என்று ஒருவன் சொன்னால் அதைக்கேட்கும் மற்றொருவர் "பறப்பாளா? இறக்கை உண்டா?" என்று கேட்டால் அது எவ்வளவு அறிவீனமானதோ அந்த அளவு அறிவீனமானது இந்த ஶ்லோகத்தை வைத்து வால்மீகி அரியும் சிவனும் ஒன்று என்று கூறுகிறார் என்று வழக்கறிஞர் கூறுவது. மேலும் "காலாக்₃நி ஸத்₃ருஶ: க்ரோதே₄" [ரா. பா. 1] [கோபத்தில் இராமன் ஊழிகாலத்தீயை ஒத்தவன்.] என்று ஊழிகாலத்தீயையும், மற்றும் பலவிடங்களில் இந்திரன் முதலானோரையும்

இராமனுக்கு உபமானமாகக் கூறியுள்ளார் வால்மீகி. இவரது ஸாம்யவாதம் அங்கும் செல்லுபடியாகுமா?

அருள்பூமி—மே—2004 இதழில் டில்லிப் பல்கலைக்கழகத்தின் டாக்டர் சிவப்ரியா என்பவர் "அருட்பெருஞ்சோதி ஆண்டவர் அண்ணாமலையார்" என்ற கட்டுரையில் விஷ்ணுத்வேஷ உணர்வை மனத்திற்கொண்டு தனது சிவாபிமானத்தால் மனம் போன போக்கில் கன்று பின்று என்று எழுதியிருக்கிறார்:—

"ப்ரம்மா—விஷ்ணு இவர்களெல்லாம் ஜீவராசிகள். அவர்களைப் படைத்த பரமசிவனே பரம்பொருள். தானே கடவுள் என்று பறைசாற்றும் உயிரினங்கள் கூறுவது ஆணவத்தால் ஏற்படும் பசுஞானம். இந்த ஞானத்தைத்தான் இரண்யனும் கண்ணனும் கொண்டிருந்தார்கள். இரண்யன் தானே கடவுள் என்றான். கண்ணனும் கீதையில் தானே கடவுள் என்றான். இது ஆணவத்தால் பேசுவது. ஆனால் எல்லாவற்றுக்கும் கடந்த பரம் பொருள் சிவமே" என்று பிதற்றியிருக்கிறார் சிவப்ரியா.

இரண்யன் தன்னைக் கடவுள் என்று சொல்லிக்கொண்டு அகம்பாவம் பிடித்து அலைந்ததால் பகவான் விஷ்ணு நரசிம்ம அவதாரம் எடுத்து அவனை அழித்தார் என்பது அனைவரும் அறிந்ததே. இரண்யனைப் போலவே கண்ணனும் அகம்பாவத்தால் தன்னையே கடவுள் என்று சொல்லிக்கொண்டான் என்று சொல்லும் சிவப்ரியாவின் மதிகேட்டை என்னென்பது! வேதங்களும் அவற்றைத் தழுவிய இதிஹாஸங்களும் ஸாத்விக புராணங்களும் கண்ணனே பரம்பொருள் என்று கூறுகின்றன. ஆதிசங்கரர், ராமாநுஜர், மத்வர் ஆகியோர் எழுதிய பாஷ்யங்கள் உட்பட, எத்தனையோ உலகமொழிகளில் ஆயிரக்கணக்கான உரைகள் பகவத்கீதைக்கு இருக்கின்றன. அந்த எல்லா உரைகளுமே 'கண்ணனே பரம்பொருள். கண்ணனே சிவன் உட்பட அனைவரையும் படைத்தான்' என்று கூறுகின்றன. அந்த எல்லா உரையாசிரியர்களையும் முட்டாள்கள் என்று சொல்ல, சிவப்ரியாவுக்கு எவ்வளவு ஆணவமும் அகம்பாவமும் இருக்கவேண்டும்! இப்படி பகவத்பரத்வத்தை இகழ்ந்து பேசிய சிவப்ரியா சிசுபாலன் கோஷ்டியில் சேர்ந்தவராவார். மடத்தனமாக எழுதும் இப்படிப் பட்டவர்களின் கட்டுரைகளை வெளியிடும் அருள்பூமி நிர்வாகிகள் மிகவும் கண்டிக்கத் தக்கவர்கள்.

தீப-ஆராதனை ஜூன் 2004 இதழில் "திருமாலுக்கு சக்கரம் கிடைத்தது எப்படி" என்ற தலைப்பில் தென்னாறு ஈ. மணி என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் "காக்கும் கடவுளாகிய திருமாலின் திருக்கரத்தில் தற்போது சுழன்று கொண்டிருக்கும் சுதர்சன சக்கரம் அவருக்கு எப்படிக் கிடைத்தது என்ற விபரம் உங்களுக்குத் தெரியுமா? இந்த சுதர்சன சக்கரம் கிடைப்பதற்கு முன் அவரிடம் வேறு ஒரு சக்கரம் இருந்தது ஒருசமயம் அச்சக்கரம் பகையை அழிக்க இயலாமல் வலிமையற்றுத் திரும்பியது. அதனைக் கண்ணுற்ற திருமால் மிகவும் வலிமை வாய்ந்த சக்கரம் ஒன்றை பெறும் நோக்கத்துடன் சிவபெருமானைக்குறித்து தவம் இயற்றினார். ஆயிரம் மலர்களைக் கொண்டு எம்பெருமானுக்கு அர்ச்சனை செய்ய முற்பட்டார். 999 மலர்களைக் கொண்டு அவர் அர்ச்சனை செய்து முடித்தபோது ஒரு மலரானது காணாமல் போய்விட்டது. மறுகணம் அந்த மலருக்குப்பதில் தன்னுடைய கண்ணையே மலராக அர்ப்பணிக்க முனைந்தார். தனக்காகத் தன்னுடைய கண்ணையே மலராக அர்ச்சிக்கத் துணிந்த காரணத்தால் அவருக்கு கமலகண்ணன் என்கிற திருப்பெயரினை வழங்கிய சிவபெருமான் சக்தி வாய்ந்த சுதர்சன சக்கரத்தையும் திருமாலுக்கு அளித்தான்" என்று எழுதியுள்ளார்.

மற்ற ஆன்மீக பத்திரிகைகளைவிட தற்போது அதிகமாக விஷ்ணு வைஷ்ணவ த்வேஷக் கட்டுரைகளை எழுதுவதில் தீப-ஆராதனை பத்திரிகை முதல் இடம் வகிக்கிறது. திருமால் கண்ணைப் பிடுங்கி சிவனை அர்ச்சித்ததாகக் கூறப்படும் மேற்கண்ட பொய்க்கதை பலமுறை ஸ்ரீஸுதர்சனர் அவர்களால் கண்டிக்கப் பட்டுள்ளது. ஆனால் இப்பொழுது தீப-ஆராதனைப் பத்திரிகை அதை மறுபடி வெளியிட்டுள்ளது.

சுதர்சனத்தை திருமால் சிவனிடமிருந்து பெற்றதாகவும், அதைப் பெறுவதற்குமுன் அவரிடம் ஒரு சக்கரம் இருந்ததாகவும் கூறுகிறார் ஈ. மணி. அப்படியானால் திருமாலிடம் முதலில் இருந்த அந்தச் சக்கரத்தின் பெயர் என்ன என்பதை ஏன் குறிப்பிடவில்லை இவர்?

இவர் கூறியுள்ள இந்தக் கதைக்கு வேதங்களிலோ இதிஹாஸங்களிலோ ஸாத்விக புராணங்களிலோ, தமிழ்ச்சங்க இலக்கி

யங்களிலோ எவ்வித ஆதாரமும் இல்லை. வேதத்தில் வரும் விஷ்ணு ஸூக்தத்தில் "தொண்ணூற்று நான்கு அவயவங்களைக் கொண்ட காலச் சக்கரத்தைச் சிறந்த ஆரங்களைக் கொண்ட சக்கரத்தைப்போல சுழற்றுகிறான் பகவான் விஷ்ணு" என்று கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் பகவான் விஷ்ணுவின் கையில் சுழலும் ஸுதர்சனம் காலச்சக்கரம்தான்; காலத்தையே இயக்கும் ஸர்வேச்வரனின் கையில் சுழலும் காலச் சக்கரம் சத்ருவின் காலம் முடியும பொழுது பிரயோகிக்கப்படுகிறது. வேதங்களில் வரும விஷ்ணு ஸூக்தங்களில் விஷ்ணுவின் அளவற்ற பராக்ரமம் சிறப்பாக வர்ணிக்கப்படுகிறது. வேதங்களிலோ, இதிஹாஸங்களிலோ, மற்றும் ஸாத்விக புராணங்களிலோ எங்குமே சத்ருக்களை எதிர்க்கும் விஷயத்தில் விஷ்ணுவின் வாக்யதாக எந்த இடத்திலும் இல்லை.

மேலும் சிவன் முப்புரம் அழித்தபோது மற்ற தேவர்களின் உதவியோடும், அம்பின் முனையாக இருந்த விஷ்ணுவின் உதவியோடும்தான் வெற்றி பெற்றார் என்று வேதமே கூறுகிறது. இந்தச் செய்தியை ஸாத்விக புராணங்கள் விரிவாக விளக்குகின்றன. யாருடைய தேஜஸ்ஸால் சிவன் திரிபுர ஸம்ஹாரம் செய்தாரோ, அவருக்கு சக்தி வாய்ந்த சக்கரத்தை சிவன் வழங்கினார் என்று கூறுவதை அறிவாளிகள் ஏற்றுக்கொள்வார்களா? அல்லது இப்படிப்பட்ட அண்டப்புளுகை அறிவுடையவன் கூறுவானா? வெறும் விஷ்ணு த்வேஷத்தை மனதில் வைத்துக்கொண்டு எழுதினால் இப்படித்தான் உண்மைக்குப் புறம்பான விஷயங்களை எழுதுவார்கள். சிவாபிமானத்தால் இப்படிப் புளுகு புராணங்கள் எழுதும் தென்னாறு ஈ. மணி போன்றவர்கள் ஆன்மீக அயோக்யர்கள் வரிசையில் இடம் பெறக் கூடியவர்கள். இப்படிப்பட்ட அபத்தங்களை வெளியிடும் தீப-ஆராதனை நிர்வாகிகள் வன்மையாகக் கண்டிக்கத் தக்கவர்கள்.

இதே புத்தகத்தில் இதே எழுத்தாளர் (தென்னாறு ஈ மணி) "விநாயகர் விசித்ர நிபந்தனை" என்ற தலைப்பில் விநாயகர் பாரதத்தை வியாஸர் சொல்ல எழுதினார் என்ற கதையை விரிவாக எழுதியுள்ளார். மஹாபாரதத்தில் வியாஸர் சொல்ல விநாயகர் பாரதத்தை எழுதினார் என்னும் விபரம் அநுக்ரமணிகா பர்வத்தில் வருகிறது. மஹாபாரதம் நம்நாட்டில் பல்வேறு பதிப்புகளாக

யல நிறுவனத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. அவற்றில் மிகப் பழமை வாய்ந்த பதிப்புகளில் இந்த ''விநாயகர் வியாஸர் சொல்ல எழுதினார்'' என்ற செய்தியும், உபமன்யு உபாக்யானம் போன்ற சில அத்தியாயங்களும் காணப்படவில்லை. பிற்காலத்தில் வெளிவந்த (சில பதிப்பாசிரியர்களால் பதிப்பிக்கப்பெற்ற) பதிப்புகளில்தான் இந்தச் செய்திகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஸ்ரீமஹா பாரதத்தின் கருப்பொருளுக்கு முரணாக இருக்கும் செய்திகள் அனைத்தும் பிற்சேர்க்கைகளே என்று ஸ்ரீஸுதர்சனர் முதலான அறிஞர்களால் நிரூபிக்கப்பட்டு நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. ஸ்ரீமஹாபாரதத்திற்கு இருக்கும் புகழின் மீதும் பெருமையின் மீதும் பொறாமை கொண்ட சிலர் அது வைஷ்ணவ காவியமாக இருப்பதால் அதில் எப்படியாவது சைவத்தையும் இணைத்துவிடவேண்டும் என்ற எண்ணத்தில்தான் வெகுசாமர்த்தியமாக இப்படிப்பட்ட செய்திகளைப் பின் காலத்தில் சேர்த்துள்ளனர் என்பது தெளிவான உண்மை. இதை ச. மணி போன்றோர் புரிந்துகொள்வது அவசியம்.

''காமகோடி'' ஆகஸ்ட் 2004 இதழில் காமகோடி ஜயேந்திரர் ஆந்திராவில் 20—6—2004-ல் அளித்துள்ள பேட்டி வெளிவந்துள்ளது அதில் காமகோடி ஜயேந்திரர் ''சைவமும் வைணவமும் ஆரம்பத்திலிருந்து இணைந்தே இருந்துள்ளன. உதாரணமாக மேல் திருப்பதியில் வெங்கடாஜலபதியும், கீழ்த்திருப்பதி கபில தீர்த்தத்தில் சிவனும் ஒரே க்ஷேத்ரத்தில் எழுந்தருளியுள்ளனர். அதேபோல காளஹஸ்தி, நகரியில் காசிபுக்க ஆலயம். இதேபோல் பல உதாரணங்கள் சொல்லிக்கொண்டே போகலாம். சைவமும் வைணவமும் வேறு வேறு அல்ல என்பதை உணர்த்தவே நம் முன்னோர்கள் இது போன்ற உதாரணங்களைக் காட்டியுள்ளனர். இப்போது இருப்பவர்கள் அதை உணர்ந்தாலே போதும். அதற்கான சமரச முயற்சியால் புதிதாக நான் ஒன்றும் செய்யவேண்டிய அவசியம் இல்லை'' என்று பத்திரிகையாளர்களுக்கு பேட்டி அளித்துள்ளார்.

கடவுட் கொள்கையாலும், தத்துவக் கோட்பாட்டாலும், வழிபாட்டு முறைகளாலும் முற்றிலும் மாறுபட்ட இரண்டு எதிர் எதிர் துருவங்கள் சைவமும் வைணவமும் என்பது காலம் காலமாக நடைமுறையில் கண்டு வரும் உண்மை. இந்தக் காம

கோடியின் ஆசாரியர் என்று சொல்லப்படும் ஆதிசங்கரரே சைவத்தை ஏற்காதவர். அதனால்தான் சிவாலயங்களில் ஆதி சங்கரருக்கு சிலை வைப்பதற்கு சைவர்கள் எதிர்ப்புத் தெரிவித்து வந்துள்ளனர். இப்படியிருக்க, எந்த வகையில் சைவமும் வைணவமும் ஒன்று என்று இந்த காமகே(ா)டி கூறுகிறார்? சிவனும் விஷ்ணுவும் ஒன்று என்றோ, அல்லது விஷ்ணுவே சிவனை விட உயர்ந்த பரம்பொருள் என்றோ ஏதாவது ஒரு சைவ நாயன்மார் பாடலில் இருப்பதாக சிலரால் காட்டமுடியுமா? சிவன் கோயில்களில் விஷ்ணு ஸந்நிதி இருப்பதை வைத்தும் விஷ்ணு கோயில்களில் சிவன் ஸந்நிதி இருப்பதை வைத்தும் சைவமும் வைணவமும் ஒன்று என்று கூறும் இவரது குரங்குமத்யஸ்த வேலையை மடையர்கள்தான் ஏற்றுக்கொள்வார்கள். உண்மையில் சூடு சொரணையுள்ள ஒரு சைவன்கூட இவரது இந்தக் கருத்தை ஏற்கமாட்டான். ஒரு தெய்வம் பிரதான தெய்வமாக உள்ள ஒரு ஆலயத்தில் மற்றொரு தெய்வத்திற்கு ஸந்நிதியிருக்கிறதென்றால், அந்த மற்றொரு தெய்வம் பரிவார தேவதையாக இருக்கும். அல்லது வேறு ஏதோ ஒரு காரணத்தால் அங்கு வைக்கப்பட்டிருக்கும். மற்றபடி அங்கே மத ஒற்றுமைக்கு இடமே இல்லை. சிதம்பரத்தில் விஷ்ணு சந்நிதியும்தான் உள்ளது. அதற்காக அந்த ஸந்நிதியில் விபூதியா கொடுக்கிறார்கள்? அங்கு உள்ள பிரதான சிவன் ஸந்நிதியில் துளசி தீர்த்தமா கொடுக்கிறார்கள்?

மேலும் தனது போலிச்சமரச வாதத்தை "இப்போது இருப்பவர்கள் உணர்ந்தாலே போதும்" என்றும் சொல்கிறார் இந்தக் காமகே(ா)டி "இப்போது இருப்பவர்கள்" என்று இவர் யாரைக் குறிப்பிடுகிறார் என்பது சொரணை உள்ள அனைவருக்கும் விளங்கும். போலிச் சமரச வாதம் பேசி, ஆன்மீக விஷயத்தில் பக்கா அரசியல்வாதியாக செயல்பட்டு மக்களை ஏமாற்றிவரும் இந்த காமகே(ா)டியைத் தன் மதப் பற்றுள்ள சைவரும், வைணவரும் சேர்ந்து எதிர்க்கவேண்டும். அப்படி எதிர்த்தால்தான் இந்த வேஷக்காரரர் எதிர்காலத்தில் செய்யப்போகும் அநியாயச் செயல்களை முறியடிக்க முடியும். சைவமும் வைணவமும் ஒன்று என்று கூறும் இவர் ஏன் தன் நெற்றியில் சாம்பலை மட்டும் பூசியுள்ளார் என்பதை அறிவுள்ளவர் சிந்திக்கவேண்டும்.

ஓம் சக்தி ஆகஸ்ட் 2004 இதழில் "சமய நல்லிணக்கத்திற்கு சித்தாந்திகள் எதிரிகளா?" என்ற தலைப்பில் எம். எஸ். சர்மா என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் "வேதாந்தமும் சித்தாந்தமும் வெவ்வேறல்ல; இரண்டும் ஒன்றே. வேதாந்தத்தின் சுருக்கமான விளக்கமே சித்தாந்தம் என்றால் தவறில்லை. ஸ்ரீகண்டாசார்யார் சிவபரமாக பிரம்ம சூத்ரத்திற்கு விசிஷ்டாத்வைத பாஷ்யம் எழுதியுள்ளார். அவரே முதன் முதலில் சைவ சித்தாந்தத்தை விளக்கினார். யஜுர் வேதத்தில் வரும் சிவ சம்பந்தமான செய்திகளை விளக்கமாக அறிய சிவ புராணங்கள் பயன்படும். அவை சைவத்திற்கு பெரிதும் ப்ரமாணங்களாகின்றன. மேலும் ஆதிசங்கரர் சிவனை வழிபட்டவர்" என்று எழுதியுள்ளார்.

ஸ்ரீகண்டபாஷ்யம் ஸ்ரீராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்திற்குப் போட்டியாக ஸ்ரீபாஷ்யத்தைக் காப்பியடித்து சிவபரமாக எழுதப்பட்டது என்றும், சுமார் 500 வருடங்களுக்குமுன் எழுதப்பட்டது என்றும், விஷ்ணுத்வேஷியான அப்பைய்ய தீக்ஷிதரே ஸ்ரீகண்டர் என்ற புனைபெயரில் இந்தத் திருட்டு வேலையைச் செய்திருக்கக் கூடும் என்றும் நடுநிலை ஆராய்ச்சி அறிவுள்ள அறிஞர்கள் அனைவரும் ஒருமித்து இசைந்த முடிவு. மேலும் யஜுர் வேதத்தில் வரும் சிவன் பசுபதியானது, திரிபுர ஸம்ஹாரம் முதலான செய்திகளை வைத்து சிவபரத்வம் சாதிக்கமுடியாது. ஏனெனில் சிவ புராணங்களில் வரும் இச்செய்திகளுக்கும் வேதத்தில் வரும் சிவனைப் பற்றிய செய்திகளுக்கும் வேறுபாடு அதிகம். சிவபரத்வத்திற்குவேதத்தில் ஒரு வரிகூடப் பிரமாணம் கிடையாது. சைவத்தை வேதத்திற்குப் புறம்பான மதம் என்று தள்ளிய ஆதிசங்கரர் சிவனை வழிபட்டார் என்று கூறுவது மடத்தனம். ஆகவே இக் கட்டுரைச் செய்திகள் அபத்தமானவை.

சக்தி விகடன் 14—9—2004 இதழில் "நரசிம்மரும் சிவனும் ஒரே அம்சம் தான்" என்ற தலைப்பில் சிவனடியான் என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில்—இரணியனை அழிக்கும் பொருட்டு மிகுந்த உக்ரமும் பலமும் உடையவராக மனித உடலும் சிங்கத்தலையும் உடைய ஸ்ரீமஹா விஷ்ணுவின் அவதாரம் நிகழ்ந்தது. "சாந்தாகாரம் புஜக சயனம்" என்று தோத்திரம் செய்யப்பட்ட அமைதியே உருவான ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு இவ்

வளவு உக்கிரம் எங்கிருந்து ஏற்பட்டது? அழித்தலின்போது ரௌத்ரம் என்ற கோபம் வெளிப்பட்டே ஆகவேண்டும்; ஆகவே ஸ்ரீமஹாவிஷ்ணு ருத்ரனுடைய குணத்தைத் தானுக் கொண்டு நரசிம்ம அவதாரத்தை நிகழ்த்தினுர் என்று கொள்வதே பொருத்தம். ஆகவே நரசிம்மப் பெருமாள்தான் ருத்ரன். ருத்ர மூர்த்தி தான் ஸ்ரீநரசிம்மம். நரசிம்மம் கோபம் உடையவர் என்பதில் சந்தேகமே இல்லை. வேதத்தில் வரும் ஸ்ரீருத்ரம் கோபம்கொண்ட ருத்ர மூர்த்தியையும் அவரது ஆயுதங்களையும் சாந்தப்படுத்துவதாகவே தொடங்குகிறது. ஆகவே ஸ்ரீருத்ர பாராயணம் நரசிம்மருக்கும் சிவனுக்கும் மிகவும் பொருந்துகிறது. ஸ்ரீருத்ரத்தில் 'அக்ரே வதாய ச, தூரே வதாய ச' என்ற பதங்களுக்கு "அருகில் வைத்து வதம் செய்தவனே, தொலைவில் இருந்தவனை வதம் செய்தவனே" என்று பொருள் ஆகிறது. இதை வைத்துப் பார்க்கும்போது, அருகிலே இரணியனை வைத்து வதம் செய்த நரசிம்மரும் தொலைவிலே இருந்த மன்மதனை எரித்த சிவனும் ஒன்றுகவே கருதப்படுகிருர்கள். ஆதிசங்கரர் நிறுவிய நான்கு தொன்மையான சங்கரமடங்களில் தட்சிணும்நாயத்தில் நிறுவப் பெற்ற சிருங்கேரி சாரதா பீடம் மிகச்சிறப்பு வாய்ந்தது. இந்தப் பீடத்தை அலங்கரிக்கும் ஆச்சார்யர்கள் அனைவரும் லட்சுமி நரசிம்மரின் உபாசனை கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இறுதியாக நரசிம்மரின் மூல மந்த்ரமாகிய 'உக்ரம் வீரம்...நமாம்யஹம்' என்பதற்கு ஸர்வேஸ்வரனை ஸ்ரீருத்ரனே ஒரு மந்த்ர ராஜபத ஸ்தோத்திரத்தை கானம் செய்திருக்கிருர்—என்று எழுதியுள்ளார்.

நரஸிம்ஹத்தின் கோபத்தை சிவனே சரபருபமாக வந்து அடக்கினுர் என்றும், நரசிம்மத்தை சிவனின் மனைவியே ப்ரத்யங்கிரா தேவியாக வந்து அடக்கினுள் என்றும் இவ்வளவுநாள் பிதற்றி வந்த சைவர்கள், தங்களுடைய கருத்தெல்லாம் பிரமாண விருத்தமானவை என்பதை அறிந்து கொண்ட பின்னர், இப்பொழுது நரசிம்மரும் சிவனும் ஒருவரே என்று ஐக்ய வாதம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். என்னே! இவர்களின் பரிதாப நிலை! வேதத்தில் வரும் ஸ்ரீருத்ரத்தின் மூலம் ஸ்தோத்ரம் செய்யப்படும் தேவதை இவர்களால் சொல்லப்படும் சித்தாந்த சிவனே, சைவக் குரவர்கள் தங்கள் பாடல்களில் போற்றிய சிவனே இல்லை என்பதை இவர்கள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும். சைவர்களின் சிவன் வேதத்தில் எந்த இடத்திலும்

இல்லை. வேதத்தில் வரும் சிவன், ருத்ரன் போன்ற நாமங்கள் எல்லாம் ருத்ரன் என்னும் க்ரூர தேவதைக்கு அந்தர்யாமியாய், பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனுடைய நாமங்களே. இந்த நிலையில் இந்த சைவர்கள் வேதத்தில் ஸ்ரீருத்ரத்தால் போற்றப் படும் ருத்ரனைத் தங்களின் சித்தாந்த சிவனாகக் கொண்டு வேதத் தில் ருத்ரனுக்குக் கூறப்படாத பெருமைகளையெல்லாம் சொல்லி சிவபரத்வத்தை நிலைநாட்டப் படாத பாடுபடுகிறார்கள். ருத்ர னுக்கு சுக்லயஜுர் வேதம் சதபத ப்ராஹ்மணத்தில் கர்மவசத் தாலான பிறப்பு சொல்லப்படுகிறது. ஆனால் ஸ்ரீமந் நாராயண னுக்கு வேதத்தில் எந்த இடத்திலும் கர்மத்தாலுண்டான பிறப்பு சொல்லப்படவில்லை. ''படைப்பின் தொடக்கத்திலும் முடிவிலும் ஸ்ரீமந் நாராயணன் மட்டுமே இருந்தான். வேறு யாரும் இல்லை'' என்று மஹோபனிஷத் குறிக்கிறது. ''ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா, நேஸாந:'' என்ற வாக்யம் காண்க. படைப்புத் தொழிலை ப்₃ரஹ்மாவும், காக்கும் தொழிலை விஷ்ணுவும், அழிக் கும் தொழிலை சிவனும் செய்கிறார்கள் என்பது மேலோட்டமான செய்தியே. உண்மையில் படைப்புத் தொழிலும், அழிப்புத் தொழிலும் கூட பகவான் ஸ்ரீஹரியின் அதீனத்திற்குட்பட்டதே. ஸர்வ பூதாந்தராத்மாவான நாராயணனே ப்ரஹ்மாவுக்கும், சிவ னுக்கும் அந்தர்யாமியாயிருந்து முறையே படைப்புத் தொழிலை யும், அழிப்புத் தொழிலையும் செய்கிறான்.

''ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல்
மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ
நலம்முழுது அளைஇய புகர்அறு காட்சிப்
புலமும் பூவனும் நாற்றமும் நீ''

என்ற சங்கநூலைச் சேர்ந்த பரிபாடல் வரிகளும் இதை வலி யுறுத்துகின்றன.

சாந்த ஸ்வரூபனாய் ஸாத்விக மூர்த்தியான விஷ்ணு ருத்ர னுடைய குணத்தைப் பெற்று இரண்யனைக் கொன்றார் என்று கூறுகிறார் கட்டுரை ஆசிரியர். ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் 'ஜிதக்ரோத₄:' என்ற ஒரு நாமம் உண்டு. இந்த நாமத்திற்கு உரையிடும்போது ஆதிசங்கரர் ''ராக்ஷஸர்களைக் கொல்வது வேத மரியாதையைக் காப்பதற்கன்றி கோபத்தினாலன்று'' என்று கூறு கிறார். இதைக் கட்டுரை ஆசிரியர் அறியவில்லை. சுத்த ஸத்வ ஸ்வரூபியான பகவான் ஸ்ரீமந் நாராயணன் தன்னால் படைக்கப்

பட்ட ஜீவாத்மாக்களுக்கு அவரவர்களின் கர்ம பலனுக்கேற்ப குணங்களை அளிக்கிறார். அந்த வகையில் தன்னால் படைக்கப் பட்ட ருத்ரனுக்கு கோபத்தையும் பலத்தையும் ஸ்ரீமந் நாரா யணனே கொடுத்திருக்கிறான். ருத்ரன் முதலான மற்ற தேவர் களின் ஸ்வரூபமும், குணங்களும் பகவான் ஸ்ரீமந் நாராயணனின் கட்டுப்பாட்டுக்குட்பட்டவையே. சுத்த ஸத்வத் திருமேனியுடைய அவனுக்கு ப்ராக்ருதமான ராஜஸ தாமஸ குணங்கள் எப்போ துமே இல்லை. வேதசாஸ்த்ரங்கள் இவ்விஷயத்தைத் தெளிவாக விளக்குகின்றன.

தவிர, வேதத்தில் வரும் ஸ்ரீருத்ரத்தைப் பெருமாள் ஸந்நிதியில் சொல்வதில் எந்தத் தவறும் இல்லை. ஏனெனில் வேதத்தில் உள்ள ஒவ்வொரு அக்ஷரமும் எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனையே நேரா கவோ மற்ற தேவதைகளுக்கு அந்தர்யாமியாகவோ குறிக்கும். உதா ரணமாக, ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவன், மனைவி, மக்கள் என்று பல உறுப்பினர்கள் இருக்கிறார்கள். அந்தக் குடும்பத்தில் உள்ள மற்ற அனைவரையும் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்ப வன் குடும்பத்தலைவன் அல்லவா! அந்தக் குடும்பத்தலைவனைத்தவிர, மற்ற உறுப்பினர்களுக்குக் கிடைக்கும் நற்பெயர், கெட்ட பெயர் அனைத்திற்கும் அந்த குடும்பத் தலைவனே பொறுப்பாவான். அந்தத் தலைவனாலேயே மற்றவர்களுக்கு நற்குணமோ தீக்குணமோ வந்து விடுகிறது. அதனால் மற்ற குடும்ப உறுப்பினர்களுக்குக் கிடைக் கும் புகழ் வார்த்தைகள் உண்மையிலேயே அந்தக் குடும்பத் தலைவனையே சாரும். அந்த அடிப்படையில் ஸர்வலோக பிதா வான ஸ்ரீமந் நாராயணன் எல்லோருக்கும் தலைவன். அவனால் படைத்தளித்தழிக்கப்படும் ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கு வேதத்தில் கூறப்படும் துதி மந்திரங்கள் அனைத்தும், அவர்களுக்கு அந்தர் யாமியாயிருக்கும் ஸ்ரீமந் நாராயணனையே குறிக்கும் என்பதில் எள் ளளவும் மாறுபட்ட கருத்து இருக்கமுடியாது. அப்படியிருக்க, அவனால் படைக்கப்படும் ஜீவாத்மாக்களுக்கும் அவனுக்கும் ஸாம் யம் கூறுவது அடிமுட்டாள்தனமாகும். வேதங்களிலும் அவற் றைத் தழுவிய ஸாத்விக சாஸ்த்ரங்களிலும் சிவன் பல இடங்களி லும் விஷ்ணுவிடம் தோற்றதாகவும், சிவனுடைய சில வெற்றிகள் விஷ்ணுவின் உதவியாலே ஏற்பட்டதாகவும் தான் உள்ளது. விஷ்ணு சிவனிடம் தோற்றதாகவோ, விஷ்ணு அரக்கர்களை அழிக்க சிவனின் உதவியை நாடியதாகவோ எந்த இடத்திலும் இல்லை என்பதைக் கட்டுரை ஆசிரியர் நன்கு உணரவேண்டும்.

இந்தக் கட்டுரை ஆசிரியர் கட்டுரையின் தொடக்கத்தில் 'ருத்ரன்' என்ற நாமத்திற்கு விளக்கம் சொல்லும் போது "ருதம் த்ராவயதீதிருத்ர:" [ருதம் என்றால் பாபம். பாபத்தைப் போக்குவதால் ருத்ரன் என்று சிவன் சொல்லப்படுகிறான்] என்று கூறுகிறார். பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனுக்கு ருத்ரன் என்ற பெயருண்டு. "ருத்3ரோ ப3ஹுஶிரா ப3ப்4ரு:" என்ற விஷ்ணு ஸஹஸ்ரநாமம் காணலாம். பரமாத்மாவின் நாமத்திற்கு விளக்கமே "ருதம் த்3ராவயதீதி ருத்3ர:" என்பது. பிரமன் சிருஷ்டிகளைச் செய்யும்போது அவருடைய கோபத்தால் அவரது புருவ மத்தியிலிருந்து கருஞ்சிவப்பு நிறத்தோடு ஒரு குழந்தை வெளிப்பட்டது. பிறந்தவுடன் அது அழுதது. தனக்குப் பெயரிடும்படி தன் தந்தையான பிரமனைக் கேட்டது. அப்போது பிரமன் "அழாதே, நீ பயந்தவனைப்போல் அழுததால் பிரஜைகள் உன்னை ருத்ரன் என்று அழைப்பார்கள்" என்று கூறினான்.

**யத3ரோதீ3: ஸுரஶ்ரேஷ்ட2 ஸோத்3வேக3 இவ பா3லக: ।**
**ததஸ்த்வாமபி4தா4ஸ்யந்தி நாம்நா ருத்3ர இதி ப்ரஜா: ॥**

என்று இந்த விவரம் ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ளது. விஷ்ணு புராணத்திலும் அப்படியே உள்ளது.

வேதத்திலும், ருத்ரன் பிரமனிடமிருந்து பிறந்தபோது அழுததாகவும், "நான் பாபம் நீங்கப் பெறாதவனாக இருக்கிறேன். என் பாபம் நீங்குவதற்குரிய நாமங்களை எனக்கு அளிப்பாயாக" என்று பிரமனிடம் வேண்டியதாகவும், மறுபடி பிரமன் "நீ ருத்ரன் என்ற பெயரையுடையவனாவாயாக" என்று கூறியதாகவும் உள்ளது. இதைச் சொல்லும் வேதமந்திரம் பின்வருமாறு :—

**ஸோரோதீ3த் । தம் ப்ரஜாபதிரப்3ரவீத் । குமார கிம் ரோதி3ஷி । யச்ச்2ரமாத் தபஸோதி4 ஜாதோஸீதி । ஸோऽப்3ரவீத் அநபஹத பாப்மா வா அஹமநாஹித நாமா । நாமமே தே3ஹி பாப்மநோऽபஹத்யை-இதி । தம் புந: ப்ரஜாபதிரப்3ரவீத் । ருத்3ரோऽஸீதி ।**
**[சுக்ல யஜுர் வேதீ3ய சதபத ப்3ராஹ்மணம்]**

நம்மில் பலர் கிருஷ்ணன், ராமன் என்று பெயர் வைத்துக்கொள்கிறோம். நம் குழந்தைகளுக்கு வைக்கிறோம். பரமாத்மாவின் பெயர்களான அவற்றை வைத்துக்கொண்டு நம்மை நாம் புனிதப்படுத்திக் கொள்கிறோம். அதற்காக "கீதை சொன்ன கிருஷ்ணனும் தசரத ராமனும் நான் தான். அவர்கள் வேறு நான் வேறு அல்ல" என்று நாம் கூறினால் அது எவ்வளவு மடத்தனமோ அவ்வளவு மடத்தனம்

சிவனும் நரஸிம்மனும் ஒன்றுதான் என்று கட்டுரை ஆசிரியர் கூறுவ தும்; சிவனிடம் உள்ள வீர்யமும், கோபமும், யசமும் அந்தர்யாமி யான நரஸிம்மனால் விளைந்தவையே என்பதே உண்மை.

மேலும் நரஸிம்ஹன் விஷயமாக சிவன் மந்த்ரராஜபத ஸ்தோத்ரம் செய்ததையும் கூறுகிறாரே; அந்த மந்த்ரராஜபத ஸ்தோத்ரத்தில் ஒரு ஸ்லோகம் பின்வருமாறு :—

**ஸாக்ஷாத் ஸ்வகாலே ஸம்ப்ராப்தம் ம்ருத்யும் ஶத்ருகணாநபி ।**
**பக்தாநாம் நாஶயேத் யஸ்தம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம் ॥**

**பொருள் :** "ஆயுளின் முடிவில் தனது பக்தர்களை அழிக்கவரும் ம்ருத்யு, பகைவர்களின் கூட்டம் இவற்றை மற்றவரைக்கொண்டு அழிக் காமல் தானே அழிக்கிறான். ஆகவே ம்ருத்யுவுக்கும் ம்ருத்யு (யமனுக்கு யமன்) என்ற பெயரைப் பெற்ற அவனைத் துதிக்கிறேன்" என்பது. இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால் "அழித்தல்" என்ற தொழிலை பகவான் சில நேரங்களில் மற்றவர்களைக் கொண்டும் சில நேரங்களில் தானே நேரிடையாகவும் செய்கிறான் என்பதை சிவனே ஒப்புக்கொண்ட தாகிறது. தன் பக்தர்கள் விஷயத்தில் கெடுதல் செய்பவர்களைத் தானே நேரிடையாகவும், மற்றவர்களை அழிக்கும் விஷயத்தில் சிவன் போன் றோரைக் கொண்டும் அழித்தலைச் செய்கிறான் பகவான். ஸர்வஸம் ஹாரகனான நாராயணனுக்கு ப்ரளய காலத்தில் யமன் ஊறுகாய் போன்றவன் (ம்ருத்யுர் யஸ்ய உபஸேசநம்) என்ற உபநிஷத் வாக்யம் நினைக்கத் தக்கது.

ஸ்ரீருத்ரத்தில் வரும் 'அக்ரேவதாய ச தூரே வதாய ச' என்ற பதங்களுக்குக் கட்டுரை ஆசிரியர் தன் எண்ணத்திற்குத் தக்கபடி பொருள் கொள்கிறார். அகரே வதாய ச—அருகில் வைத்து வதம் செய்தவனே என்றதால் இரண்ய வதத்தையும், தூரே வதாய ச— தூரத்தில் நின்று வதம் செய்தவனே என்பதற்கு வாலி வதத்தையும் கூடப் பொருளாகக் கொள்ளமுடியுமே! வேத மந்த்ரங்களில் ஒரு எழுத் துக்கூட இவர்களின் சிவபரத்வ வாதத்திற்கு இடம் கொடுக்காது என் பதை இவர்கள் உணரவேண்டும் (ஸ்ரீ ஸுதர்சனரின் விஷ்ணுசித்த விஜயத்தை இக்கட்டுரை ஆசிரியர் படிப்பது நன்று.)

சிருங்கேரி ஆசார்யர்கள் லட்சுமி நரசிம்மரை வழிபடுபவர்களாக உள்ளதால் சிவனும், நரஸிம்மனும் ஒன்றாகி விடமாட்டார்கள். உண்

மையில் இந்தப் பீடாதிபதிகள் தங்களின் ஆசார்யர் என்று கூறிக் கொள்ளும் ஆதிசங்கரர் பரம வைஷ்ணவர். அவர் விஷ்ணுவே பரம் பொருள். சிவன் உள்ளிட்ட மற்ற தேவதைகள் எல்லாம் விஷ்ணுவால் படைத்தளித்தழிக்கப்படுபவர்களே என்ற கருத்தைக்கொண்டவர். ஸகுண ப்ரஹ்மமாக அவர் விஷ்ணுவையே கருதினார் என்பது அவரது பாஷ்யங்களில் காணப்படும் உலகறிந்த உண்மை. அவரது வழிவந்தவர்களாகக் கூறிக்கொள்ளும் இந்தப் பீடாதிபதிகள் லக்ஷ்மி நரஸிம்மனையும் வழிபடுவார்கள். அதே நேரத்தில் சிவனும் பரம் பொருள்தான், சக்தியும் பரம்பொருள்தான் என்று ஊரை ஏய்த்துப் பிழைப்பார்கள். இந்தப் பீடாதிபதிகள் எல்லாம் ஆதிசங்கரரின் உயர்ந்த கொள்கைக்குக் களங்கம் விளைவித்து வருகின்றனர்.

அம்புலி மாமாவுக்குக் கதை எழுதுபவர் அசட்டுத் தைரியத்துடன் வேதங்களைப் பிரமாணம் காட்டிக் கட்டுரை எழுத முற்பட்டு விட்டார். ஆன்மீகத் துறை இவரைப் போன்றவர்களால் இன்று மிகவும் பரிதாபத்துக்குரியதாகி விட்டது.

ஸ்ரீகாமாட்சி அம்மன்—செப்டம்பர் 2004 இதழில் "சிவனருட் செல்வர் அப்பய்ய தீட்சிதர்" என்ற தலைப்பில் கே. ராமமூர்த்தி என்பவர் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் "சைவ சமயத்தை உயர்த்த முயன்ற தீட்சிதர் ஒருநாளும் வைணவ மதத்தைத் தாக்கியோ, குறைவாகவோ பேசியதில்லை. அவர் எதிர்த்தது மதவெறிப் போராட்டம், பிற முக்கிய மதங்களைத் தாழ்வாகக் கூறுதல் முதலியவற்றையே. அவரது வைணவ ஸித்தாந்த நூல், மாத்வ சித்தாந்த நூல், அவர் கட்டிய பெருமாள் கோவில் போன்றவை அவரது நடுநிலைமைக்குச் சான்றாகும். அவரது புகழைக் கண்டு சகிக்காத தாத்தாசாரியார் என்ற வைணவர் செய்த இன்னல்கள் பலவாகும். தீட்சிதரை ஆதரித்த சிவபக்தனான வேலூர் சின்ன பொம்ம நாயக்கன் என்ற அரசனுக்கும் அந்தப்புரப் பெண்களுக்கும் அபிசாரப் பிரயோகம் செய்து கடும் நோயைப் பரப்பினார் தாதாசார்யார். அப்பய்ய தீக்ஷிதர் வேத மந்திரங்களை ஓதி அந்த நோயை விரட்டவே அரசனது சிவபக்தி பன்மடங்காகியது. விஜயநகர ராமராயரின் ராஜகுருவான தாதாசார்யர் ஒரு தீவிர வைணவர். சிவனையும் சிவபக்தர்களையும் வெறுத்தார். அப்பய்ய தீட்சிதரும் இவரது வெறுப்பிற்கு விலக்கல்ல. துர்தேவதையை உபாஸிப்பவன் துணைகொண்டு தீட்சிதரின் பூஜையறையில் ரத்தம், மாமிசம் ஆகியவை விழும்படி செய்தார் தாதாசார்யார். தீட்சிதர் ஸ்ரீருத்ரத்தை ஜபித்தவுடன் சிவபூதம் தோன்றி பூஜை அறையை சுத்தம்

செய்தது. அரசனின் மனத்தை சிவ நிர்மால்யம் சாப்பிடலாகாது என்று தாத்தாசார்யர் கலக்கவே தீட்சிதர் உண்மையான சிவபக்தர்கள் அதைச் சாப்பிடுவதில் குற்றமில்லை என்று விளக்கினார். அரசனின் ஐயம் நீங்கியது. விஷ்ணு கோவில் அர்ச்சகருக்கு லஞ்சம் கொடுத்து தீட்சிதருக்கு விஷம் கலந்த தீர்த்தத்தைப் பருக அளிக்கும்படி செய்தார். சிவனருளால் தீட்சிதர் பிழைத்துக் கொண்டார். தீட்சிதரைக் கொல்ல தாத்தாசார்யார் அடியாட்களை அனுப்பினார். அந்த ஆபத்திலிருந்தும் சிவனருளால் தீட்சிதர் தப்பிவிட்டார். பின்னர் தீட்சிதரின் மகிமையையுணர்ந்து தாதாசார்யார் மனம் மாறி தீட்சிதருடன் நட்புக் கொண்டார்" என்று எழுதியுள்ளார்.

அப்பய்ய தீக்ஷிதரைப்பற்றி யாருக்கும் தெரியாது என்று நம்பிக்கையில் கட்டுரை ஆசிரியர் மனம் போனபடி எழுதியுள்ளார். பணத்திற்காக எழுதினாரோ என்னவோ? பரம ஸாத்விகர்களான வைணவர்கள் மற்ற மதத்தாருக்கு இடையூறு செய்ததாகவோ, மற்ற மதத்தவரை ரகசியமாகத் தாக்கும் இழி செயலைச் செய்ததாகவோ வரலாற்றில் எந்த இடத்திலும் பார்க்கமுடியாது. மற்ற மதத்தவர்களைக் கழுவேற்றிக் கண்பிடுங்கிக் கொன்றவர்கள் சைவர்கள்தான் என்பதற்கு வரலாறு சான்றாகும். மதக்கொள்கைகள் பற்றிய விவாதங்களை வாய்மொழியாகவும் நூல்கள் மூலமும் பிரமாணங் காட்டி உண்மையை நிறுவியவர்கள் வைணவர்கள். அந்த நேரங்களில் உயிரைக்கூடத் துச்சமாக நினைத்து மற்ற மதத்தவர் கொடுக்கும் இன்னல்களை சகித்துக் கொண்டு தம் கொள்கையில் உறுதியாக நின்றவர்கள் வைணவர்கள். வைணவராக மாறிய சைவர்கள் உண்டு. சைவராக மாறிய வைணவர்கள் ஒருவரும் இல்லை. ஒருவேளை சில வைணவர்கள் சைவராக மாறியிருந்தால் அது சிற்றின்ப நாட்டத்திற்காக இருக்கும். வைணவராக மாறிய சைவர்களும் உண்மையை மனப்பூர்வமாக உணர்ந்தபின் மாறினார்கள். மிரட்டலுக்காக அல்ல. சமணர்கள் கழுவேற்றப்பட்டது, கூரத்தாழ்வான் கண்ணிழந்தது, பெரியநம்பி உயிர் துறந்தது—இவையெல்லாம் வரலாற்றில் காணப்படும் சைவர்களின் ஆன்மீகக் களங்கங்கள். வைணவர்கள் எப்போதுமே தம் கொள்கைக்கு முரணாகப் பேசும் மற்ற மதத்தவரை நேர்மையான ஸாத்வீக விவாத அடிப்படையால் வென்றிருக்கிறார்களே தவிர வன்முறையால் அல்ல. இவர் எழுதியிருப்பது அனைத்தும் கட்டுக்கதையே.

இதுதவிர, அப்பய்ய தீட்சதர் வைணவத்வேஷமற்ற நடுநிலை
யாளர் என்று எழுதுகிறார் இவர். ஏதோ அப்பய்ய தீட்சதரின்
வாழ்நாளில் நடந்ததையெல்லாம் ஒன்று விடாமல் அறிந்துவிட்
டவர் போலும், அவரது நூல்களையெல்லாம் ஒன்று விடாமல்
படித்து விட்டவர் போலும் எழுதுகிறார் இந்தக் கட்டுரை ஆசிரியர்.

அப்பய்ய தீக்ஷிதர் ஒரு அத்வைதி. ஆனால் சிவபரத்வத்தை
நிலைநாட்டப் பல விதண்டாவாத நூல்களை எழுதியவர். ஆதி
சங்கரரது கொள்கைகளுக்கு முரணாக மனம்போனபடி த்ரிமூர்த்தி
ஸாம்ய வாதத்தையும், ஐக்ய வாதத்தையும், சிவபரத்வ வாதத்தை
யும், உத்தீர்ண வாதத்தையும் தம் நூலில் செய்திருக்கிறார். சிவ
தத்வ விவேகம், சிவார்க்கமணி தீபிகை போன்ற அவரது நூல்
களில் விஷ்ணுத்வேஷ விஷம் கொட்டிக் கிடப்பதைக் காணலாம்.
தீக்ஷிதருக்கு இளமை முதலாகவே விஷ்ணுத்வேஷம் மனதில்
பதிந்திருந்தது என்பதும், அவர் முறையாக வேத அத்யயனம்
செய்தவரில்லை என்பதும், வேத வாக்யங்களுக்கு அவர் விஷ்ணு
த்வேஷத்தை மனத்திற்கொண்டு அவப்பொருள் கூறிய சமயத்தில்
சிறந்த ஞானமணியான அவரது தாயார் அவரைக் கண்டித்துத்
திருத்தியதாகவும், தனக்கு "ஏன் விஷ்ணுத்வேஷம் அதிகரித்து
வருகிறது" என்ற விஷயத்தைத் தன் மாதாவிடம் அவர் வினவிய
தாகவும், அதற்கு அவரது மாதா ஏதோ பதில் கூறியதாகவும்,
அதன்பிறகு படிப்படியாக அவரது மனத்தில் இருந்த விஷ்ணு
த்வேஷம் குறைந்து முற்றிலும் விஷ்ணுத்வேஷமற்றவராய் நய
மயூக மாலிகா என்ற ஒரு பிரஹ்ம ஸூத்ர வ்யாக்யானம் செய்த
தாகவும், அதில் "ராமாநுஜரின் திருவுள்ளத்தையொட்டி நய
மயூக மாலிகா எழுதப்பட்டது" என்று எழுதியுள்ளதாகவும்
ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான் ஸ்வாமி ஸ்ரீமஹாவிஷ்ணு சாம்ராஜ்யம்
என்ற தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

எனவே அப்பய்ய தீக்ஷிதருக்கு விஷ்ணுத்வேஷம் இயற்கை
யிலேயே உண்டு. பின்னாளில் அவர் மனத்தில் இருந்த விஷ்ணு
த்வேஷ அழுக்கு மறைந்த பின்பே அவர் விஷ்ணு பரமான நூல்
களை எழுதினார். அதன்பின்பே பெருமாள் கோவிலும் கட்டினார்.
இதுவே உண்மை. இதையறியாமல் வைஷ்ணவத்வேஷ எண்ணம்
கொண்டு அப்பய்ய தீட்சதருக்கு வைணவர் தீங்கிழைத்ததாகவும்,
அப்பய்ய தீட்சதர் பிற மதத்வேஷமற்ற நடுநிலையாளர் என்றும்
கூறுகிறார் இந்தக் கட்டுரை ஆசிரியர். உண்மைகளைச் சரியாகப்
புரிந்து கொள்ளாமல் எழுதுவது மிகப்பெரிய அறிவீனமாகும்.

நவம்பர் 2004 ஞானபூமி இதழில் மூத்த வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணஸ்வாமி "முருக வழிபாடு" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதில் உள்ள சில அபத்தச் செய்திகளைக் கீழே தந்து விமர்சிக்கிறேன்.

"இந்து சமயம்" என்னும் இந்த சநாதன தர்மத்தை உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டியவர் ஆதிசங்கரர் ஆவார். அவரது தத்துவ பிரசாரத்திலும் குழப்பம் விளைவித்தவர்கள் உண்டு. உண்மை என்றும் அழியாது அழிக்கவும் முடியாது. சங்கரர் காட்டிய அத்வைதப் பாதையில் கடவுளுக்கு இடமில்லை என்று கூறுபவர்கள் அறியாமையால் அவ்வாறு கூறுகின்றனர். உண்மையில் அத்வைத அறிவைப் பெறுவதற்கு அடித்தளமாக அமைவதே கடவுளின் அருள். தெளிவாகவும், ஆணித்தரமாகவும் தெய்வ வழிபாட்டின் முக்யத்வத்தை எடுத்துக் கூறியபோது அந்த வழிபாட்டை எவ்வாறு கடைப்பிடிப்பது? என்று கேள்வி எழும். அக்கேள்விக்கு பதிலாகத்தான் ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார். சூரியன், அம்பிகை, விஷ்ணு, கணநாதன், மஹேஸ்வரன் இவ்வைவரையும் ஒரு கிரஹஸ்தன் தினசரி பூஜிக்க வேண்டியவனாகிறான் என்று "ஸ்ம்ருதி முக்தாவளி" என்ற நூலில் குறிப்பிடப்படுகிறது. இதில் ஒரு அதிசயம் என்னவென்றால் ஆறு வழிபாடுகளில் ஐந்துதான் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆறுவதான முருக வழிபாடு குறிப்பிடப்படவில்லை. அதில்தான் முருகவழிபாட்டின் விசேஷத் தன்மை அறியப்படுகிறது. எண்ணிக்கையில் ஐந்திற்குப் பிறகுதான் ஆறு வருகிறது. ஆக, (அஞ்சுதல்—பயப்படுதல்) அஞ்சுதலுக்குப் பிறகு அதாவது—அறியாமை அகன்றபிறகு அறிவாகிய ஆறு வெளிவருகிறது. ஆறுமுகமாகக் காணப்படுகிறது. ஆகவே வழிபாட்டில் படிப்படியாக முன்னேறி இறுதியில் முருக வழிபாட்டில் முக்தி பெறப்படுகிறது.

"ஆறு சமயக் கடவுள் வேறு வேறென்றியான் ஒருவனே
அங்கங்கு இருந்து அன்பர்க்கு முத்தி தருவித்தென்று
யாவர்க்கும் அறிவித்த வதனமணியே" என்று ஒரு அன்பர்

கூறுகிறார். "ஈஸானஸ் ஸர்வவித்யானாம் — என்று தொடங்கும் வேத மந்த்ரத்திலிருந்து ஈசனும் முருகனும் இணைந்து பிரணவமாக ஒலிக்கிறது என்று தெரிகிறது. முருகனை நினைத்தாலே முக்தி என்று வேதங்கள் கூறுகின்றன. அத்வைதம் காட்டிய சங்கரர் சுப்ரமண்ய புஜங்கம் எழுதியுள்ளார். "தத் புருஷாய வித்மஹே மஹா சேனாய தீமஹி தன்னோ ஷண்முகப்ரசோதயாத்" என்று ஷண்முக காயத்ரி வேதத்திலேயே உள்ளது" என்று பலவாறுகப் பிதற்றியிருக்கிறார்.

இந்த மூத்த வழக்கறிஞர் ஆர். கிருஷ்ணசாமியின் கட்டுரைகள் பலமுறை நம்மால் விமர்சிக்கப்பட்டிருக்கின்றன. ஆதாரமில்லாமல் மனம் போனபடி எழுதுவதே இவரது வேலையாகி விட்டது. ஆதிசங்கரரைப் பற்றிக் கூறும் இவர், அவரது முக்கியமான நூல்களையெல்லாம் படித்துவிட்டல்லவா எழுதவேண்டும்? ஆதிசங்கரர் தத்துவக்கோட்பாட்டால் அத்வைதி என்பதும், கடவுட் கொள்கையின்படி வைஷ்ணவர் என்பதும் உலகறிந்த உண்மை. ஆதிசங்கரர் தூய்மையான வைணவர் என்பதை "சங்கரரும் வைணவமும்", "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா" ஆகிய இரு நூல்களின் மூலம் ஸ்ரீஸுதர்சனர் அவர்கள் கல்வெட்டாக நிலைநாட்டியுள்ளார்கள். மேற்படி நூல்களை மூத்த வழக்கறிஞர் வாங்கிப் படித்த பின்பு ஆதிசங்கரரைப் பற்றிக் கருத்துச் சொல்லட்டும். நாமும் நமது கட்டுரையில் பல இடங்களில் ஆதிசங்கரரது உண்மையான கொள்கைபற்றித் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளோம். பலமுறை கண்டிக்கப்பட்டும் புத்தியில்லாமல் "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் செய்தார்" என்றே எழுதுவது அறிவுடையோர் செய்யும் செயலன்று. அல்லது தம் கருத்துக்கு ஆதிசங்கரரது நூல்களிலிருந்து ஆதாரமாவது காட்டவேண்டும். அதையும் செய்வதில்லை. ஆதிசங்கரரின் பிரஹ்ம ஸூத்ர பாஷ்யம், உபநிஷத் பாஷ்யம், கீதை ஸஹஸ்ரநாம பாஷ்யங்கள் இவற்றைக் கொண்டு அவர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்பதை இக்கட்டுரை ஆசிரியர் நிரூபித்து விட முடியுமா? ஆதிசங்கரர் முருகன், விநாயகர், அம்பிகை, சிவன் ஆகிய தேவதைகள் மீதெல்லாம் ஸ்தோத்ரம் பாடியிருக்கிறார் என்று சொல்வதெல்லாம் சுத்தப்பொய். பின்னாளில் யாரோ செய்ததையெல்லாம் ஆதிசங்கரர் செய்தார் என்று கூறி அவருடைய கடவுட்கொள்கைக்கே களங்கம் விளைவித்து வருகின்றனர் சிலர். ஆதிசங்கரர் காலத்திலேயே எத்தனையோ ஸஹஸ்ர நாமங்கள் வழக்கில் இருந்தன. இருந்தபோதும் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்துக்கு மட்டும் அவர் பாஷ்யம் (உரை) எழுதவேண்டிய அவசியம் என்ன என்பதை இக்கட்டுரையாளர் போன்றோர் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஏன்? மற்ற ஸஹஸ்ர நாமங்களுக்கு உரை எழுத அவருக்கு நேரமில்லையா? இல்லை, எழுதப் பிடிக்கவில்லையா? ஸுப்ரஹ்மண்ய புஜங்கம் பாடினார் ஆதிசங்கரர் என்று இவர்கள் கூறுவது உண்மையானால் ஏன் ஸுப்ரஹ்மண்ய ஸஹஸ்ரநாமத்திற்கு அவர் உரை எழுதியிருக்கலாமே? ஸௌந்தர்ய லஹரி பாடினார் என்று

இவர்கள் கூறுவது உண்மையானால் அவர் லலிதா ஸஹஸ்ர நாமத்திற்கும் உரை எழுதியிருக்கலாமே? ஏன் எழுதவில்லை என்பதற்கு நாம் பதில் கூறுகிறோம்.

பெருமை மிகுந்த ஒரு பெயரை இரு நபர்களுக்குச் சூட்டினால் உண்மையிலேயே அந்தப் பெருமை மிகுந்த பெயர் அந்த இரு நபர்களில் யாருக்குப் பொருந்தும் என்பதை அறிவாளிகள் உணர்வர். தகுதியில்லாதவனுக்குப் பெருமைமிகு ஒரு பெயர் சூட்டப்பட்டால் அது வெறும் உபசாரத்திற்காகவும், 'ஐஸ்' வைப்பதற்காகவும் சூட்டப்பட்டது என்பதையும் அறிவுடையோர் உணர்வர். தகுதியுடையவனுக்கு சூட்டப்பட்ட அந்தப் பெயருக்குத்தான் அது என்ன தகுதிக்காகச் சூட்டப்பட்டது என்று விளக்கமும் அளிப்பார்கள் அறிஞர்கள். தகுதியில்லாதவனுக்கு சூட்டப்பட்டிருக்கும் பெயரைக் கண்டு கொள்ளவே மாட்டார்கள் அறிஞர்கள். அந்த வகையில் ஆதிசங்கரர் பேரறிஞராகையால், ஆயிரம் நாமங்களுக்கும், அந்த நாமங்களுக்குரிய பொருளுக்கும் தகுதியுடையவன் வேதநாயகனும், பரம்பொருளுமான விஷ்ணுவே என்று உணர்ந்துதான் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு விளக்கம் எழுதினார். மற்ற தேவதைகளுக்குக் கொடுக்கப்பட்ட நாமங்கள் எல்லாம் பகவான் விஷ்ணுவின் நாமங்களே. உபசாரமாக அந்த தேவதைகள் விஷயத்தில் வழங்கப் படுகின்றன. ஆகவே அத்வைதியான ஆதிசங்கரர் விஷ்ணுவையே ஸகுணப்ரஹ்மமாகக் கொண்டு வாழ்நாள் முழுக்க ஸாளக்ராம சிலையை உபாஸித்து வந்தவர் என்பது அவரது ப்ரஸ்தானத்ரய பாஷ்ய நூல்களிலிருந்து தெளிவு. இதையறியாமல் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்று எழுதி எழுதி மக்களை ஆன்மிக விஷயத்தில் முழு மூடர்களாக்கி வருகின்றனர் சிலர். அவர்களில் ஒருவர்தான் இந்த மூத்த வழக்கறிஞர். ஒருவரது தனிப்பட்ட கொள்கையை, அவர் மறைந்த பின்பு களங்கப்படுத்துவது மஹா பாபமாகும். அந்தப் பாபம் சும்மா விடாது. அநுபவித்தே தீரவேண்டும்.

மேலும் ஐந்து வழிபாட்டால் ஏற்பட்ட அறியாமை விலக ஆறுவதாக வரும் முருக வழிபாடு தான் ஞானம் தந்து முக்தி அளிக்குமாம். இது வேதத்தில் உள்ளது என்று கயிறு திரிக்கிறார் கட்டுரையாளர். சாதாரண ஜீவராசிகளைப் போல, ஆண் பெண் சேர்க்கையால் பிறந்தவனே முருகன். சிவனும், பார்வதியும் புணர்ச்சிசெய்து அதன்மூலம் பிறந்தவனே முருகன் என்று

வால்மீகி ராமாயணமும், நமது சங்க இலக்கியமான பரிபாடலும் கூறுகின்றன. முருகனை லௌகிக இன்பங்களை வழங்கும் ஒரு காதல் தேவதையாக வர்ணிக்கிறது பரிபாடல். ஆனால் திருமாலையோ இந்த அண்ட சராசரத்தையும் படைத்து அளித்து அழிக்கும் பரம்பொருளாகக் கூறுகிறது பரிபாடல். வேதத்தில் முருகனுக்கு ஒரு துதி மந்திரம் கூடக் கிடையாது. அப்படியிருக்கும் போது முருகன் முக்தி தருவான் என்று வேதமே கூறுகிறதாம். கச்சியப்பர் எழுதிய கந்தபுராணத்தைத்தான் வேதம் என்று கட்டுரையாசிரியர் கருதுகிறார் போலும்! யார் கண்டது?

''ஈசானஸ் ஸர்வவித்₃யானாம் ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தானாம்
ப்₃ரஹ்மாதி₄பதிர் ப்₃ரஹ்மணோऽதி₄பதிர் ப்₃ரஹ்மா சிவோ
மே அஸ்து ஸதாசிவோம்'' — இந்த மந்திரத்திலிருந்து சிவனும் முருகனும் சேர்ந்ததே பிரணவஸ்வருபம் என்று எப்படித் தேறும்? கட்டுரையாசிரியருக்கு எங்கும் எதுவும் எப்படி வேண்டுமானாலும் தேறும் போலும்! இம்மந்திரத்தின் உண்மையான பொருள்— ''எல்லா வித்தைகளுக்கும் ஈசனும், ஸர்வபூதேஶ்வரனும், வேத நாயகனும், ப்ரஹ்மனுக்கு அதிபதியும் ஆகிய அந்த ப்ரஹ்ம வஸ்து எனக்கு மங்களகரமாக இருக்கட்டும். எப்பொழுதும் மங்களகரமாக இருக்கட்டும் (அல்லது அதுவாகவே நானாக இருக்கிறேன்) என்று ப்ரணவமாகிய ஓம் சொல்கிறது''—என்பதே இதன் திரண்ட பொருள். இங்கே முருகனுக்கும் சிவனுக்கும் என்ன வேலை? ''ஸதாசிவோம்.'' என்று இருந்தவுடன் இது சிவனைக் குறிப்பதாகக் கொள்கிறார் கட்டுரை ஆசிரியர். ஸதாசிவன் என்றால் எப்பொழுதும் மங்களகரமானவன் என்ற பொருளில் இந்த மந்திரத்தில் இப்பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. எப்பொழுதும் மங்களகரமானவன் ஸ்ரீமந் நாராயணனைத்தவிர வேறு யாருமில்லையன்றோ. எப்பொழுதும் மங்களகரமானவனான (அதாவது ஸதாசிவனான) ஸ்ரீமந்நாராயணனின் திருவடியில் ப்ரஹ்மனால் அபிஷேகம் செய்யப்பட்ட நீரைத் தலையில் தாங்கியதாலேயே ருத்ரன் சிவனானான். அதாவது—மங்களகரமானவனானான். இதிலிருந்து இயற்கையிலேயே எப்பொழுதும் மங்களத்தன்மை கொண்டவன் ஸ்ரீமந் நாராயணன் என்பதும், ருத்ரனுக்கு மங்களத்தன்மை ஸ்ரீமந்நாராயணனாலேயே ஏற்பட்டது என்பதும் தெரிய வருகிறது. ஆகவே இம்மந்திரம் சிவனையும் முருகனையும் பற்றியது என்று கட்டுரை ஆசிரியர் கூறுவது மடத்தனமானது. முக்கண்ணனையும், பன்னிரு கண்ணனையும் குறிக்கும் அடையாளம் எதுவும் இதில் இல்லையே.

மேலும் முருகனுக்கு ஒரு காயத்ரீ மந்திரம் வேதத்தில் இருப்பதாகக் கூறுகிறார் இக்கட்டுரை ஆசிரியர். தைத்திரீய உபனிஷத் நாராயணவல்லியில் மொத்தம் ஆறு காயத்ரிதான் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது — "புருஷஸ்ய வித்ம" எனத் தொடங்கும் ருத்ர காயத்ரி, 'தத் புருஷாய' எனத்தொடங்கும் ருத்ர காயத்ரி, தந்தி காயத்ரி, கருட காயத்ரி, துர்க்கா காயத்ரி, விஷ்ணு காயத்ரி—என்ற ஆறு காயத்ரிகளுக்கே வேத பாஷ்யகாரரான ஸாயணாசார்யர் உரை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த ஆறில் முருகனுக்குரிய காயத்ரி இடம் பெறவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. பின்னாட்களில் தங்களின் இஷ்ட தெய்வங்களின் மேல் காயத்ரி செய்து வைத்து விட்டால் அதுவும் வேதத்தில் உள்ளது என்று நம்பவைத்து விடலாம் என்பது பகற்கனவன்றோ! மேலே சொன்ன ஆறு காயத்ரிகளைத்தவிர நடைமுறையில் உள்ள மற்ற காயத்ரிகள் எல்லாம் வேதத்தில் இல்லாத கற்பனைகள் என்பதே உண்மை; இன்னும் கொஞ்ச நாளில் ஐயப்பன், காட்டேரி, கருப்புசாமி, முனீஸ்வரன் போன்ற பாமர தெய்வங்கள் மீதும் காயத்ரி எழுதி அவையும் வேதத்தில் உள்ளதாகச் சொன்னாலும் சொல்வார்கள். யார் கண்டது? எதைச் சொன்னாலும்தான் மண்டை ஆட்ட ஒரு கும்பல் இருக்கிறதே.

மேலும் தமிழ்க்கடவுள் முருகனாம்! இவர்கள் சொல்கிறார்கள். அப்படியானால் ஆங்கிலக் கடவுள் யார்? ஹிந்திக் கடவுள் யார்? உலகிற்கே கடவுள் ஒருவனாகத்தானே இருக்கமுடியும். அப்படியிருக்கும்போது மொழிக்கு ஒரு கடவுளா இருக்க முடியும்?

"மூவேழுலகமும் உலகினில் மன்பதும்
மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம்" என்றும்,

"இருநிழல் படாமை மூ—ஏழ் உலகமும்
ஒருநிழல் ஆக்கிய ஏமத்தை மாதோ" என்றும் சங்க இலக்கியமான பரிபாடல் திருமாலையே எல்லா உலகங்களுக்கும் ஒரே தலைவனாக ஒரே கடவுளாகக் கூறியிருக்கும்போது தமிழருக்கு மட்டும் தனிக்கடவுள் எங்கிருந்து வந்தார்? வேத நாயகனை திருமாலே பரம்பொருள் என்று நமது தமிழ்ச்சங்க இலக்கியங்கள் அனைத்துமே மறைகளைச் சாட்சியாக வைத்து நமக்குக் காட்டித் தருகின்றன. மேலும்,

"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்" — என்று கூறி,

திருமாலைத்தவிர வேறு யாராலும் வீடு பேறு என்னும் மோக்ஷத் தைத் தரமுடியாது என்றும் கூறிவிட்டது சங்க இலக்கியமான பரிபாடல்.

இவற்றையெல்லாம் மூத்த வழக்கறிஞர் படித்தாரோ படிக்க வில்லையோ தெரியவில்லை. ஸ்ரீஸுதர்சனர் அவர்களின் சங்க காலத் தமிழர் சமயம் என்ற நூலை இவர் வாங்கிப் படித்தால் இவருடைய அறியாமை விலக வாய்ப்புள்ளது. ஆகவே இக் கட்டுரையின் ஆசிரியர் கருத்துக்கள் அனைத்தும் ஆதாரமில்லா மல் எழுதப்பட்ட அபத்தக் களஞ்சியங்கள் என்பது நிரூபிக்கப் பட்டது.

ஞானபூமி, அருள்பூமி ஆகிய புத்தகங்களில் "ஸ்ரீமத் பாக வதம்" என்ற தலைப்பில் எம். கே. கிருஷ்ணஸ்வாமி என்பவர் தொடர்க்கட்டுரை ஒன்று எழுதி வருகிறார். ஸ்ரீமத் பாகவதத்தின் மூலக்கருத்துக்கு முரணாக இக்கட்டுரை ஆசிரியர் ஸ்ரீமத் பாகவதத் திலுள்ள கதைகளைத் திரித்து எழுதி வருகிறார். ஷை நவம்பர்— 2004 ஞானபூமி இதழில் "திரிபுர தகனம்" பற்றி எழுதும்போது, "திரிபுர அசுரர்களின் கொடுமை தாங்க முடியவில்லை என்று ப்ரஹ்மாவும் விஷ்ணுவும் சிவனிடம் முறையிட்டதாகவும் சிவன் தன் நேத்ராக்னியால் திரிபுராசுரர்களை எரித்தார் என்றும் எழுதி யுள்ளார். இவர் சொன்னபடி இச்சம்பவம் ஸ்ரீமத் பாகவதத்தில் விவரிக்கப்படவில்லை. ஸ்ரீமஹா விஷ்ணுவின் தேஜஸ்ஸால் காப் பாற்றப்பட்டு வில்லில் நாண் பூட்டி ஓர் அம்பினால் அந்த முப் புரங்களையும் எரித்தார் என்றே ஸ்ரீமத் பாகவதத்தில் வருகிறது. இச்செய்தியை மறைத்து எழுதுகிறார் கட்டுரை ஆசிரியர். மேலும் அக்டோபர் 2004 அருள்பூமி இதழில் வரும் ஸ்ரீமத் பாகவதக் கட்டுரையில் இவ்வாசிரியர் கபில வாசுதேவர் தன் தாயாருக்கு ஞானோபதேசம் செய்த விபரத்தைச் சொல்லுகையில், முருகன் தன் தகப்பனான சிவனுக்குப் பிரணவத்தின் பொருளை உபதேசித் ததாகக் கூறப்படும் கந்தபுராணக் கதையையும், சபரிமலை ஐயப்பன் தன் தந்தைக்கு ஞானோபதேசம் செய்ததாகக் கூறப் படும் ஐயப்ப புராணக் கதையையும் மேற்கோள் காட்டி இக் கதைகளுக்கிடையில் பேதமில்லை என்று எழுதியுள்ளார். பரம ஸாத்விக புராணமான ஸ்ரீமத் பாகவத புராணக் கதையோடு தாமஸ புராணக் கதைகளையும் ஒப்பிட்டு, ஸ்ரீமத் பாகவதத்தின் தனித்தன்மை விளங்காமல் போகும்படி செய்வதில் மிகவும் அக் கறை காட்டி எழுதி அதைப் படிக்கும் வாசகர்கள் ஸ்ரீமத் பாக வதத்தின் மூல தத்துவத்தைப் புரிந்துகொள்ள இயலாமல் செய் கிறார் இக்கட்டுரை ஆசிரியர். இப்படிப்பட்ட விஷ்ணு வைஷ்

ணவ த்வேஷிகளைக் கொண்டு ஸ்ரீமத் பாகவதத்தை எழுதுவைக்கும் 'அருள்பூமி' 'ஞானபூமி' பொறுப்பாளர்கள் மிகவும் கண்டிக்கத் தக்கவர்கள்.

25—10—2004 குமுதம் ஜார இதழில் பெங்களூர் சந்தானக் கிருஷ்ணன் என்பவர் தனது 'நேபாள யாத்திரை' என்ற கட்டுரையில் பசுபதிநாத் கோயிலின் தல புராணமாகக் கீழ்க்கண்டவாறு ஒரு கதை கூறியுள்ளார்.

''பிரளயத்தில் பூமியே தண்ணீருக்குள் மூழ்கிப்போன நேரம் அது. பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் அப்போது ஒரு விவாதம் ஏற்பட்டது. இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தது யார்? இது தான் வாதம் விவாதம். இதற்கு பதில் தர விரும்பினார் சிவபெருமான். தான் மிகப்பெரிய லிங்கமாக விஸ்வரூபம் எடுத்தார். ''உங்கள் இருவரில் யார் என்னுடைய தலைப் பகுதியையோ, கால் பகுதியையோ முதலில் பார்த்துவிட்டு வருகிறீர்களோ அவரே பிரபஞ்சத்தைப் படைத்தவர் என்று கூறினார் சிவபெருமான்'' என்று கதையை ஆரம்பித்து வழக்கம்போல் தாழம்பூ, பசுமாடு, பொய்சாட்சி இப்படி வழக்கமான கதையைக் கூறி முடித்து, சிவன் தானே ப்ரபஞ்சத்தைப் படைத்தவன் என்று பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் நிரூபித்தாராம். அந்த விஸ்வரூப லிங்கம்தான் பசுபதிநாத்தில் சிறிய லிங்கமாக உள்ளதாம். பிறகு பிரபஞ்சமே இருளடைந்து காணப்பட்டதால் தேவர்கள் சிவபெருமானை வேண்டிக்கொண்டார்களாம். உடனே ஈசன் பூமியை வெளிக்கொண்டுவர பிரம்மாவை ஏவினாராம். சூரியன், சந்திரன் ஆகியோர் வந்து பிரளய நீரை ஆவியாக்கினார்களாம். பூமி மேலே எழுந்ததாம். முதலில் வந்த பகுதிதான் காசியாம்.

வழக்கமாக சைவர்கள் இந்த அடிமுடி தேடிய கட்டுக்கதை திருவண்ணாமலையில் நடந்ததாகக் கூறுவர். இக்கட்டுரை ஆசிரியர் நேபாளத்தில் நடந்ததாகக் கூறுகிறார். மும்மூர்த்திகளுக்குள் யார் பெரியவர் என்ற சர்ச்சை வந்தபோது இக்கதை நடந்ததாக சைவர் கதையளப்பர். ஆனால் ப்ரளய காலத்தில் நடந்ததாக இந்த பயணக் கட்டுரை ஆசிரியர் கதை விடுகிறார். இதை வைத்துப் பார்க்கும்போதே இக்கதை சைவர்கள் விஷ்ணுத்வேஷத்தால் கட்டிய கட்டுக்கதை என்பது தெள்ளத் தெளிவாகப் புலப்படும். ஒரே சம்பவம் வேறுவேறு சந்தர்ப்பங்களில், வேறுவேறு இடங்களில் எப்படி நடக்கும்? எத்தனை முறைதான் திருமூர்த்திகளுக்குள் யார் பெரியவர் என்ற சர்ச்சை வந்தது? இதிலிருந்தே இது புளுகு புராணம் என்பது தெளிவாகிறதல்லவா? ஸ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக் கொண்டு சிவபரத்வத்தை நிலைநாட்ட இயலாத சைவர்கள், ஸ்தலபுராணக் கதைகளைக் கட்டிக்கொண்டு அழவேண்டிய நிலைக்கு வந்துவிட்டனர்! அந்தோ பரிதாபம்.

அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாச்சார்யார்—வைணவ உலகத்தில் இவரை அறியாதோர் இருக்க முடியாது. வேதார்த்த ரத்னகர, வேத பூஷண, வேத வாசஸ்பதி, மஹாமஹிமோபாத்யாய முதலிய (தம்) பட்டங்களுக்குச் சொந்தமான இவர் வேதாந்த தேசிகனை ஆசார்யனாகக் கொண்ட வைணவ மரபில் வந்தவர். தனது ஆசார்யரான தேசிகனே உகக்காத விஷயங்களை "வரலாற்றில் பிறந்த வைணவம்" என்ற நூலாக்கி அந்நூலை கும்பகோணம் ஸ்ரீசாரங்கபாணி கோவில் பணத்தைக் கொண்டே வெளியிட்டு "வைணவத்திற்குப் பெருமை சேர்த்த மஹநீயர்". காமகோடிப் பெரிய பீடாதிபதியின் ஆதரவுடனும் ஆசியுடனும் வெளிவந்த அந்நூலில் விஷ்ணுவும், வைஷ்ணவமும் இழிவுபடுத்தப்பட்டுள்ளது கண்டு உபயகலை நடுநிலை அறிஞர்களும் அந்நூலுக்குக் கடுமையாகக் கண்டனம் தெரிவித்தனர். "அக்னிஹோத்ரியும் வைணவமும்" என்ற தலைப்பில் ஸ்ரீஸுதர்சனர் அவர்களும் ஒரு கண்டன நூலை எழுதி வெளியிட்டார்கள். அந்நூலில் பல அறிஞர்களுடைய கண்டனங்களும் இடம் பெற்றுள்ளன. இப்படி பலத்த கண்டனத்துக்குள்ளாகி, செத்த பாம்பாகிப் போன "வரலாற்றில் பிறந்த வைணவம்" என்ற அ.ஹோ-வின் அந்த நூலை "அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யருக்குப் பெயர் வாங்கித்தந்த நூல்" என்று வானளாவப் புகழ்கிறது நக்கீரன் வார இதழ். ஆம்! அந்நூல் அ.ஹோவிற்குப் பெயர் வாங்கித் தந்த நூல் தான்! என்ன பெயர் தெரியுமா? "வைணவத்ரோஹி அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யர்" என்பது தான் அது. இப்போது விஷயத்துக்கு வருவோம். இந்த அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாசார்யர் "இந்து மதம் எங்கே போகிறது" என்ற தலைப்பில் நக்கீரன் வார இதழில் பல வாரங்களாக ஒரு தொடர் கட்டுரை எழுதி வருகிறார். அதில் வேதகால நாகரிகம் பற்றியும், நமது சநாதன தர்மத்தின் பரிணமத்தைப் பற்றியும் மேற்கத்திய ஆய்வாளர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் பல பொருந்தாத விஷயங்களை எழுதி வருகிறார். அவருடைய கருத்துக்களில் உள்ள பொருந்தாமையை அவர் பின்பற்றும் வழியைக் கொண்டே இங்கு நாம் நிரூபிப்போம். விஷயத்தில் பிரவேசிப்பதற்கு முன்பு அது சம்பந்தமான சில பொதுவான விஷயங்களை நாம் மனதிற் கொள்ளவேண்டும். அதாவது—

சுமார் 200 வருடகாலம் வெள்ளையர்கள் நம் நாட்டை அடிமைப் படுத்தியது மட்டுமின்றி மதம், கலாசாரம் இவற்றிலும் பல மாற்றங்களை ஏற்படுத்திவிட்டுச் சென்றிருக்கின்றனர். வெளிநாட்டவரின் உள்நோக்கம் புரிந்துகொள்ளாமல் பல விஷயங்களில் "வெள்ளையன் சொன்னதே வேதாந்தம்" என்று தலையாட்டும் ஒரு கும்பல் இந்த நாட்டில் இருந்து வந்திருக்கிறது. வெள்ளையர்கள் நம் நாட்டை விட்டுச்சென்று ஐம்பது வருடத்திற்கு மேலாகியும், "ஆங்கிலேயன் சொன்னால் அதுதான் உண்மை" என்று நம்புகின்ற மோகம் இன்னும் நம்நாட்டில் பலரிடையே இருந்து வருகிறது. தங்களின் மதத்தைப் பரப்பவும், தங்களின் ஆட்சிக்குச் சாதகமான சூழ்நிலைகளை ஏற்படுத்திக்கொள்ளவும், நம்நாட்டு வரலாற்றிலும், சமூக மற்றும் சமயத் துறையிலும் பல தவறான கருத்துக்களைப் பரப்பி, நம்நாட்டு மக்களிடையே பிரிவினை உணர்வை ஏற்படுத்தி நம் நாட்டின் வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் குந்தகம் விளைவித்தனர் வெள்ளையர்கள். வெளிநாட்டு மதுவுக்கும் மங்கைக்கும் ஆசைப்பட்ட நம் நாட்டவரில் சிலர் ஆங்கிலேயர் என்ன சொன்னாலும் அதுவே வேதம் என்ற முறையில் தலையாட்டினர். ஆங்கிலேயனுடைய (எந்த விஷயத்திலும்) அணுகுமுறை வடையை குரங்கு பங்குவைத்த கதை என்பதை நம் நாட்டவரில் சிலர் புரிந்துகொள்ளவில்லை. ஒரு பொய்யைக் கூட ஆங்கிலத்தில் சொல்லிவிட்டால் அது உண்மை என்று நம்புகின்ற சிலர் இன்றும்கூட இருந்துதான் வருகிறார்கள். அந்த வகையில் ஆராய்ச்சியாளர்கள் என்ற பெயரில் மேக்ஸ் முல்லர் போன்ற அறிஞர்களை ஆங்கில அரசாங்கம் திட்டமிட்டு இந்தியாவுக்கு அனுப்பி நமது வேத இலக்கியங்களை ஆராய்ச்சி செய்யச் செய்தது. நடுநிலை மனப்பாங்கு இல்லாமல் உள்நோக்கத்துடன் ஆராய்ச்சியை மேற்கொண்ட அந்த அறிஞர்கள் நமது சநாதன மதம் பற்றியும் வேதத்தின் தொடக்கம் பற்றியும் பல தவறான தகவல்களை எழுதி வைத்தனர். ஆனால் தவறான நோக்கத்தோடு ஆராய்ச்சி செய்ய இந்த நாட்டிற்கு வந்தவர்களானாலும், நமது வேதத்தின் தொன்மையையும் அது உலகிற்கு வழங்கும் உயர்ந்த தத்துவங்களையும் பார்த்துப் பிரமித்துப்போய் முன்னர் தாம் கொண்டிருந்த கருத்துக்கள் தவறானவை என்று தங்கள் வாயாலேயே ஒத்துக்கொண்டுவிட்டனர். தாங்கள் சொன்ன கருத்து

தவறு என்று சம்பந்தப்பட்டவர்களே ஒத்துக்கொண்ட பின்னரும் அவர்கள் முன்னர் கூறிய தவறான கருத்துக்களையே பிடித்துக் கொண்டு அலையும் ஒரு கும்பல் இன்னும் நம் நாட்டில் உள்ளது என்பதுதான் கொடுமை. ஃபிரடரிக் மேக்ஸ் முல்லர் என்பவர் ஜெர்மானிய அறிஞர். சிறந்த மொழியியல் வல்லுநர். இவர் ஆங்கில அரசின் நெருக்கடிக்கு, தன் சுய அறிவையும் நடுநிலை உள்ளத்தையும் அடகுவைக்க நேர்ந்தது. அதனாலேயே ஆங்கில அரசால் வேதத்தை ஆராய்ச்சிசெய்ய இந்தியாவுக்கு அனுப்பப் பட்டார். ஆங்கில அரசின் ஆசையைத் திருப்தி செய்யும் வகை யிலேயே தனது ஆராய்ச்சியின் முடிவுகளை அறிவித்தார். அவர் காலத்திலேயே அவரது கருத்துக்களுக்கு வெளிநாட்டு ஆராய்ச்சி யாளர்களிலேயே பலர் கடும் எதிர்ப்பைத் தெரிவித்தனர். ஆனால் ஆங்கில ஏகாதிபத்ய வலிமை மேக்ஸ் முல்லரின் தவறான ஆராய்ச்சி செய்திகளுக்கு அரண்போல இருந்தது. இருந்தபோதும் பின்னாளில் தான் முன்பு சொன்ன கருத்துக்கள் தவறானவை என்பதைத் தன் மரணகாலம்வரைப் பிரசாரம் செய்தார் மேக்ஸ் முல்லர். அதற்கு ஒரு உதாரணம்! 'ஆரியர்' என்ற சொல் ஒரு இனத்தைக் குறிக்கும் என்று முதன்முதலில் அறிவித்தவரே மேக்ஸ் முல்லர்தான். ஆனால் அவரே பின்நாளில் கீழ்க்கண்ட வாறு சொன்னார்—

I have declared again and again that if I say Aryan. I mean neither blood nor bones, nor skull or hair. I mean simply those who speak the Aryan Language. Aryan in scientific Language is utterly inapplicable to race. It means Language and nothing but Language". To me an ethnologist who speaks of Aryan blood, Aryan race, Aryan eyes ond hair is as great a sinner as a Linguist who speaks of dolichocephalic or brachycephalic grammer".

**இதன்பொருள் :** "ஆர்யன் என்று நான் சொன்னால் அச் சொல் இரத்தத்தையோ. எலும்புகளையோ, மண்டையோட் டையோ, முடியையோ (உடல் அமைப்பு) குறிக்காது என்பதை நான் பலமுறை திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறேன். ஆரியன் எனும் சொல் ஒரு மொழியைக் குறிப்பதன்றி ஒரு இனத்தைக்

குறிக்காது. அது மொழியைத்தான் குறிக்கிறது. மொழியைத் தவிர வேறெதையும் குறிக்காது. என்னைப் பொறுத்தவரை ஆரியன் இரத்தம், ஆரிய இனம், ஆரியன் கண்கள், ஆரியன் முடி என்று பேசும் மனித இன ஆய்வாளன், நீள்மண்டை அகராதி உருண்டை மண்டை இலக்கண நூல் என்று பேசும் ஒருமொழியியலாளன் எவ்வளவு பாவியோ அவ்வளவு பெரிய பாவியாவான்''.

மாக்ஸ் முல்லர் திருந்திய பின்னரும் இன்னும் பலபேர் நம் நாட்டில் திருந்தாமலே உள்ளனர். அன்று மேக்ஸ்முல்லர் ஆங்கில அரசாங்கத்தைத் திருப்திசெய்ய, தனது சீரிய அறிவாற்றலையும் விலைக்கு விற்று, நடுநிலைப் பண்பையும் அடகு வைத்து, பாரபட்சமான தகவல்களை வெளியிட நேர்ந்தது. இன்று யாரைத் திருப்தி செய்ய, அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாத்தாசார்யர் உண்மைக்குப் புறம்பான தகவல்களை எழுதி வருகிறுரோ தெரியவில்லை. உண்மைக்கு இவர் பேசிய விலை என்ன என்பதும் தெரியவில்லை, வடகலைத் திருமண் காப்புத் தரிக்கும் இவர் இத்தொடரில் கூறி வரும் கருத்துக்கள் அனைத்தும் ஸ்வாமி தேசிகனுக்கு உடன்பாடு தான் என்பதையும் இவர்தான் தெளிவுபடுத்தவேண்டும். இனி விஷயத்திற்குள் நுழைந்து நம் விமர்சனத்தைத் தொடங்குவோம்.

15—12—2004 நக்கீரன் இதழில் இவரது தொடர் ஆரம்பம். அத்தொடரின் முதல் பகுதியில் முதல் இரண்டு பாராக்கள் கீழ்க் கண்டவாறு :—

''நான்காயிரம் வருடங்களுக்கு முன்பு ஓடிச்செல்லுங்கள். முடிகிறதா? உங்கள் மனக்குதிரையில் ஏறி உட்கார்ந்துகொண்டு கற்பனை, சிந்தனை இரண்டு சாட்டைகளாலும் விரட்டுங்கள்''.

வரலாறு துல்லியமாகக் கணிக்கமுடியாத காலத்தின் பாதாளப் பகுதி அது. மலைகள், காடுகள் என மனிதர்களையே பயமுறுத்தியது பூமி.

அ.ஹோ-வின் கருத்துப்படி நான்காயிரம் வருடங்களுக்கு முற்பட்ட காலம். வரலாறு துல்லியமாகக் கணிக்கமுடியாத காலம் என்று தோன்றுகிறது. வரலாறு துல்லியமாகக் கணிக்கமுடியாத

காலத்தை "Pre Historic Age" அதாவது—வரலாற்றுக்கு முந்திய காலம் என்று ஆய்வாளர்கள் அழைக்கின்றனர். அதாவது—"Pre Historic Age" என்பது வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துப்படி கி.மு. 35,000 முதல் கி.மு. 5000 ஆகும். இதற்குட்பட்ட பழைய கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம் இவற்றையே வரலாற்றுக்கு முந்திய காலமாகக் கணக்கிடுகின்றனர். அந்தவகையில் பார்த்தால் அ ஹோ. கூறும் "எதுவும் தெரியாத சாப்பிடத் தெரியாத" நிர்வாண மனிதர்கள் வாழ்ந்த காலம். மேற்கத்திய வரலாற்று ஆய்வாளர் கருத்துப்படி கி.மு. 35,000 முதல் கி.மு. 10000 வரை உள்ள காலமாகத்தான் இருக்கும். அதற்குப்பிறகு கி.மு. 10,000 முதல் கி.மு. 5000 வரை புதிய கற்காலமாகவும் அதற்குப்பிறகு உள்ள காலத்தையே உலோக காலமாகவும் ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். மேற்கத்திய ஆய்வாளர்களின் கருத்துப்படி பார்த்தால் இன்றிலிருந்து சுமார் கிமு 4500 முதல் 2500 ரிக் வேத கால நாகரீகம் தழைத்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. அதனால் அ.ஹோ. சொல்லும் உடை அணியத் தெரியாத மக்கள் வாழ்ந்த காலம் ஆய்வாளர்களின் கருத்துக்கே முரணானது. ஆய்வாளர்களின் கருத்துப்படி இன்றிலிருந்து சுமார் 6000 வருடங்களுக்கு முன்பே ரிக்வேதம் எழுத்து வடிவம் பெற்றுவிட்டது எனத் தெரிகிறது. ஒரு நூல் எழுத்து வடிவம் பெறுவதற்குமுன் அந்நூலில் உள்ள கருத்துக்கள் எத்தனை நூற்றாண்டுகளுக்குமுன் மனித சிந்தனையில் உதித்திருக்க வேண்டும் என்பதையும் நாம் நோக்கவேண்டும். அ.ஹோ. சொல்லும் "நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பு" என்பது நம் நாட்டில் சிறந்த நாகரீகம் தழைத்திருந்த காலக்கட்டம். நாகரிகம் மிகவும் உச்சநிலையில் உள்ள இந்தக் காலத்தில்கூட நம் நாட்டின் சிலபகுதி வனப்பகுதி, மலைப்பகுதிகளில் உடையணியாத ஆதிவாசிகள் வாழ்ந்து வருவதை இன்னும் கண்கூடாகக் காண்கிறோம். அதனால் இந்தக் காலத்தை உடையணியத் தெரியாத மக்கள் வாழ்ந்த காலம் என்று நாம் கூறிவிட முடியுமா? மனிதனின் நாகரிக வளர்ச்சி என்பது இடத்திற்கு இடம் மாறுபடுவது. ஆகவே மலைவாழ், காடுவாழ் மக்களான நாகரீகமற்ற மக்கள் மத்தியில்தான் வேதகால சிந்தனை தோன்றியது என்று அ ஹோ. கூறுவது முற்றிலும் பிரமாண மற்றது. நமது வைதிகக் கருத்துப்படி வேதம் ஒரு காலத்தில் தோன்றியது அன்று.

அது என்றும் இருப்பது. ஆகவே அதன் தோற்றத்தை ஒரு கால வரையறைக்குள் கொண்டுவர இயலாது. வைதிகக் கருத்துப்படிப் பார்த்தால் கலியுகம் பிறப்பதற்கு 36 ஆண்டுகளுக்கு முன் மஹாபாரத யுத்தம் நடந்ததாகத் தெரிகிறது. அதாவது—இன்றிலிருந்து சுமார் 5135 வருடங்களுக்கு முன்னால். ஆனால் வரலாற்று ஆய்வாளர்கள் கருத்துப்படி. சுமார் 5135 வருடங்களுக்குமுன் ரிக்வேத காலம் என்று சொல்கின்றனர். அ.ஹோ. இந்தக் காலத்தில் தான் ஆரியர்கள் நிர்வாண மனிதர்களாக இருந்தனர் என்கிறார். அதுவும் ஆப்கானிஸ்தானத்தில்தான் இருந்தார்களாம். வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தையே தன் கருத்துக்கு ஆதாரமாகக் கூறும் அ.ஹோ. வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துக்கள் முன்னுக்குப்பின் முரணானவை மற்றும் நிரந்தரமான கருத்துக்கள் இல்லை என்பதை மறந்துவிட்டு எழுதுகிறார். இன்று ஒரு வரலாற்று ஆய்வாளர் கூறும் கருத்தை நாளை வரும் ஒரு அறிஞர் மறுக்கிறார். அவரது கருத்தை அவருக்குப் பின்னால் வருபவர் மறுக்கிறார். இதற்குக் காரணம் என்னவெனில் நடுநிலை மனப்பாங்கு இல்லாத ஆராய்ச்சியே. கிறிஸ்துவ மதத்தை இந்து மதத்திற்கு முன்னதாகக் காட்டிவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் ஆராய்ச்சி செய்ய வந்தவர் மேக்ஸ்முல்லர். ஆனால் அவரே பின்னாளில் "Whether the Vedic Hymns were Composed in 1000 or 1500 or 2000 or 3000 Years B. C. no Power on earth will even determine" [இதன் பொருள்: வேத மந்திரங்கள் தொகுக்கப்பட்ட காலத்தை கி.மு 1000 என்றோ, 1500 என்றோ, 2000 என்றோ, 3000 என்றோ அறுதியிட்டுக் கூற பூமியில் உள்ள எந்த சக்தியாலும் எப்போதுமே முடியாது] என்று கூறிவிட்டார். அதனால் வேதகாலத்தைத் நிர்ணயம் செய்ய யாராலும் முடியாது என்பதே மேக்ஸ் முல்லரின் கருத்து எனத் தெரிகிறது. ஆகவே நான்காயிரம் வருடத்திற்கு முன்புதான் தெய்வமே கண்டுபிடிக்கப்பட்டது என்று எழுதும் அ.ஹோ. உண்மையிலேயே ஒரு வைதிகரா என்பதே சந்தேகமாக உள்ளது. வேத நாகரீகம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒரு குறிப்பிட்ட மக்களிடையே தோன்றியது என்று முடிவுகட்ட ஆதாரம் ஏதும் இல்லை. அவ்வாறு முடிவுகட்ட முனைந்த வரலாற்று அறிஞர்கள் மண்ணைக் கவ்வி விட்டார்கள். ஆரியர்கள் வெளிநாட்டிலிருந்து இந்தியாவுக்கு

வந்தவர்கள் என்ற மேற்கத்திய ஆய்வாளர்களின் கருத்தை ஏற்றுக் கொண்டே எழுதுகிறார் அ.ஹோ. ஆனால் ஆரியர்கள் என்று ஆய்வாளர்களால் வகைப்படுத்தப்பட்டவர்கள் வெளிநாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்தனர் என்பதற்கு வேதங்களிலேயே ஆதாரமில்லாதபோது அவர்களது கருத்தை 'வைதிக்'ரான அ.ஹோ. எந்த அடிப்படையில் ஏற்கிறார்? ஆப்கான் பகுதியில் ஓடும் சில ஆறுகளைப் பற்றிய குறிப்புகள் வேதத்தில் வருவதால் அங்கு தான் வேதகாலத்தவர் வாழ்ந்திருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்களின் முடிவு என்று கூறி அதை ஏற்றுக் கொண்டு எழுதுகிறார் அ.ஹோ. வேதத்தில் சப்தசிந்து என்று சொல்லக்கூடிய ஏழு நதிகள் (சிந்து, அஸிக்னி (சேனாப்), பருஷ்னி (ரவி), சரஸ்வதி, யமுனை, கங்கை, சரயூ) பற்றிய குறிப்புகள் இடம்பெறுகின்றன. ஆகவே இங்கே குறிப்பிட்ட ஏழு நதிகளின் கரைகளில் தான் வேதகாலம் தொடங்கியது என்று கொள்வதில் எந்தத் தவறும் இல்லையே! அதாவது—பிரளயம் முடிந்து சிருஷ்டி தொடங்கியபோது பிரளய ஜலத்திலிருந்து வெளிப்பட்ட பூமியின் பல்வேறு பாகங்களில் தங்களின் கர்ம வினைகளுக்கு ஏற்ப பல்வேறு பழக்கவழக்கமுள்ள மக்கள் உருவாகி வாழ்ந்து வந்திருக்கக் கூடும். ஆனால் கங்கை முதலிய புனித நதிகளால் வளப்படுத்தப்படுவதும் பகவானின் அவதாரங்கள் நிகழ்ந்த புண்ணிய பூமியுமான பாரதவர்ஷம் என்னும் இந்தப்பகுதியையே வேதகால ரிஷிகள் தேர்ந்தெடுத்து அங்கிருந்தபடி வேத மதத்தை உலகிற்கு அளித்தனர் என்பதே மறுக்க முடியாத உண்மை. மேலும் வேதகால மக்களிடம் சூத்ரஜாதி என்பது இல்லை. ப்ரஹ்ம, க்ஷத்ரிய, வைசிய என்ற மூன்று ஜாதிகளே இருந்தன என்று எழுதுகிறார் அ.ஹோ.

ப்ராஹ்மணோऽஸ்ய முக2மாஸீத்
பா3ஹூ ராஜந்ய: க்ருத:।
ஊரூ தத3ஸ்ய யத்3வைஶ்ய:
பத்3ப்4யா(க்3)ம் ஶூத்3ரோ அஜாயத॥

[அந்தப் பரமபுருஷனின் முகத்திலிருந்து பிராம்மணர்களும், தோளிலிருந்து அரசர்களும், தொடையிலிருந்து வைச்யர்களும்,

பாதத்திலிருந்து சூத்ரர்களும் தோன்றினர்.]--இம்மந்திரம் ரிக் வேதத்திலுள்ள புருஷ ஸூக்தத்தில் வரும் மந்திரம். நான்கு ஜாதிக்காரர்களும் பரபுமருஷனின் உடலிலிருந்து தோன்றியவர்கள் என்று வேதமே கூறும்போது சூத்ரஜாதி என்ற பிரிவு அப்போது இல்லை என்று எந்த அடிப்படையில் கூறுகிருர் அ.ஹோ.?

யதே$_2$மாம் வாசம் கல்யாணீமாவதா$_3$நி ஜநேப்$_4$ய: ।
ப்$_3$ரஹ்ம ராஜந்யாப்$_4$யாம் ஶூத்$_3$ராய சார்யாய ச
ஸ்வாய சாரணாய ॥
[யஜுர் வேதம் 20-2]

[''கடவுள் இப்படி ஆணையிட்டார்'' ''ஓ மனிதர்களே! பிராஹ்மணர்களுக்கும், க்ஷத்ரியர்களுக்கும் நான் வழங்கிய பயன்தரக்கூடிய வேதமொழி வைசியர்களுக்கும் சூத்ரர்களுக்கும் கூட உரியதே'']
இந்த யஜுர்வேத மந்திரம் சூத்ரர்களும் வேத அறிவு பெற உரிமையுள்ளவர்கள் என கோஷிக்கிறது. இந்த மந்திரங்களையெல்லாம் அ.ஹோ. படிக்கவில்லையோ என்னவோ! அல்லது படித்திருந்தும் அவற்றுக்கு வேறுவிதமாகப் பொருள் கொள்கிருரோ என்னவோ! மனச்சாட்சியற்றவர்கள் எம்மந்திரத்திற்கும் எவ்விதமாகவும் பொருள் கொள்ளலாம்.

காலவெள்ளத்தில், இந்தியாவுக்குள் ஆரியர்கள் நுழைந்தபோது இந்தியாவில் சுமார் 450 மதங்கள் வழக்கில் இருந்தனவாம். அ.ஹோ. சொல்கிருர். அந்த 450 மதங்களின் பெயர்கள் என்ன? அவற்றை யார் கடைப்பிடித்தார்கள்? அம்மதக் கொள்கைகள் என்ன? அம்மதக் கடவுளர் யாவர்? இக்கேள்விகளெல்லாம் நம்மைப் பார்த்து யாராவது கேட்டால் என்ன பதில் சொல்வது என்று கூடச் சிந்திக்காமல் மொட்டையாக 450 மதங்கள் இருந்தன என்று எழுதுகிருர் அ.ஹோ. இவருடைய கருத்துக்கள் அனைத்தும் ப்ரமாண ரஹிதமானவை என்பதற்கு இது ஒரு சிறிய எடுத்துக்காட்டு.

"ஆரியர்கள்" என்று வரலாற்று ஆசிரியர்கள் சிலரால் வகைப் படுத்தப்பட்ட இனத்தினர் வேறு நாட்டிலிருந்து இந்த நாட்டிற்கு வந்தவர்கள் என்ற கருத்துக்கே அடிப்படை எதுவும் இல்லாத பொழுது, அவர்கள் எவ்வழியாக வந்தவர்கள், யாரைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். யாரை விட்டுவிட்டு வந்தார்கள். எதைத் தங்களுடன் கொண்டு வந்தார்கள் என்பவை பற்றியெல்லாம் கூறும் அக்னிஹோத்ரியின் கருத்துக்களை நாம் விமர்சிக்கவேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் அவையெல்லாம் ஆதாரம், அடிப்படை எதுவும் அற்ற அபத்தக் கருத்துக்களே.

"சூத்திரர் என்ற ஜாதிப்பிரிவு வேதத்தில் இல்லை. அந்தப் பிரிவை மநு தர்மமே ஏற்படுத்தியது" என்ற அக்னி ஹோத்ரியின் கருத்தை மறுத்து 'சூத்திரஜாதி வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது' என்பதை நிரூபிக்க வேதத்திலிருந்து இரண்டு மேற்கோள்களை எடுத்துக் காட்டினோம். இதில் ஒரு விஷயத்தை நாம் புரிந்து கொள்ளவேண்டும். சூத்திரரும் வேத அறிவுபெற உரிமையுண்டு என்று வேதம் கூறியுள்ளபடியால் சூத்திரரும் வேத அத்யயனம் செய்யலாம் என்று வேதமே சொல்லிவிட்டது என்று நாம் எடுத்துக்கொள்ளமுடியாது. வேத அறிவைப் பெறத்தான் சூத்திரருக்கு உரிமையுண்டு என்று வேதம் கூறுகிறதேயொழிய வேதத்தை அத்யயனம் செய்ய உரிமை வழங்கவில்லை. பின் எப்படி சூத்திரர் வேத அறிவைப்பெற முடியும் எனில், வேத விளக்கங்களாக அமைந்துள்ள இதிஹாஸ புராணங்களைப் படித்து. கேட்டு உணர்ந்துதான் வேத அறிவைப் பெறமுடியும். இது விஷயமாக ஒரு ஶ்லோகம் பின்வருமாறு :—

ஸ்த்ரீசூத்ர த்₃விஜப₃ந்தூ₄நாம் த்ரயீ ந ஶ்ருதிகோ₃சரா |
இதி பா₄ரதம் ஆக்₂யாநம் க்ருபயா முநிநாக்ருதம் ||

[ஸ்த்ரீ பெண்கள் (நான்கு வர்ணத்தைச் சேர்ந்த பெண்கள்) சூத்திரர்கள் ஒழுக்கங்கெட்ட முதல் மூன்று வர்ணத்தவர்கள். இந்த மூவரும் வேதத்தை நேராக ஓதி அறியத் தகுதியற்றவர்கள். ஆகையால் அவர்கள்மீது கருணைகொண்ட வ்யாஸ பகவான் மஹா பாரதத்தை இயற்றினார்.]

"வந்தேறிய இடத்தில் அனைவரும் சூத்திரர்கள் என்றும், அவர்களைத் தம் கட்டுப்பாட்டுக்குள் வைக்கவேண்டும் என்றும் பிராம்மணர்கள் கருதினர் என்றும், அவர்களால் திட்டமிட்டு செய்யப்பட்ட மனுஸ்ம்ருதியின் அடிப்படையில் க்ஷத்ரியர், வைசி

யர், சூத்திரர் என்ற மற்ற மூன்று வர்ணத்தவரையும் தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்கள்'' என்று எழுதும் அ.ஹோ. மனுஸ்ம்ருதியின் ஆசிரியரான ஸ்வாயம்புவ மனுவே ஒரு க்ஷத்ரியர் என்பதை மறந்துவிட்டு எழுதுகிறார். ஒரு க்ஷத்ரியன் தான் அடிமைப்பட்டுக் கிடக்க வழிவகுக்கும் ஒரு நூலை எப்படி எழுதுவான்? ஏதோ சொல்ல நினைத்து எதையோ பிதற்றுகிறார் அக்னிஹோத்ரி. ''வேதத்தை எளிமையாக்குகிறோம் என்ற பெயரில் மனுஸ்ம்ருதியை உருவாக்கி ஒன்றும் தெரியாத அப்பாவி மக்களை ''அதைச்செய்! இதைச்செய்! அப்போதுதான் உனக்குப் புண்ணியம்'' என்று சொல்லி ஏமாற்றி ஒரு சாஸ்திர ஏகாதிபத்தியச் சூழலை உருவாக்கினர் பிராம்மணர்கள் என்று கூறி, ''யத்₃வை கிஞ்ச மனுரவத₃த் தத் பே₄ஷஜம்'' (மனு சொன்னதெல்லாம் மருந்து) என்று வேதத்தாலே புகழப்பட்ட மனுவைச்சாடுகிறார் 'வைதிக'ரான அ.ஹோ.

முதலில் ஜாதி முறையின் மூலம் (Origin) என்ன என்பதைப் பார்ப்போம். ப்ரக்ருதியில் (இயற்கையில்) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் எப்போதுமே உள்ளன. படைப்பின் தொடக்கத்தில் இந்த மூன்று குணங்களின் அடிப்படையிலேயே தேவர் மனிதர் முதல் புல்பூண்டு வரையுள்ள பசு, பக்ஷி, ஸ்தாவர ஜங்கமங்களெல்லாம் உருவாகின்றன. தூய ஞானம், சாந்த குணம், துணிவு, அன்பு, கருணை, அஹிம்ஸை, மென்மை, எளிமை, ஸத்யம், பொறுமை, பக்தி, பாசம், பரிசுத்தம், ஆத்ம ஞானம் இவையெல்லாம் ஸத்வ குணத்தைச் சேர்ந்தவை. ஆடம்பரம், விஷயப்பற்று, வீரம், சுயநலம், கோபம், ஹிம்ஸை, அகந்தை, அகங்காரம், தகாத காரியத்தைச் செய்துகூடத் தான் வீரன் என்பதை நிலைநாட்ட எண்ணுவது அடங்காமை - இவை எல்லாம் ரஜோகுணத்தைச் சேர்ந்தவை. ஸதா தூக்கம், சோம்பல் அதிகமாக உண்பது, பேராசை, அனாசாரம், தெய்வத்தை ஒப்புக்கொள்ளாமை, அஜாக்ரதை, ஆஹாரம், நித்திரை, மைதுனம் - இவற்றில் எப்போதும் அதிகப் பிரியம் வைப்பது. 'போட்டால் தின்பேன், வைத்தால் சுமப்பேன்' என்ற நிலையில் உள்ள மனோபாவம் இவையெல்லாம் தமோ குணத்தைச் சேர்ந்தவை. இந்த மூன்று குணத்தில் ஏதோ ஒன்றைச் சேராத வஸ்து ஒன்றைக்கூட நாம் இந்த உலகில் காணமுடியாது. படைப்பின் தொடக்க காலத்தில் மனிதர்கள் தங்களுக்குள் இந்த மூன்றுகுண அடிப்படையில் பிரிந்து அவரவர்களின் குணத்துக்குத் தக்க செயல்களில் ஈடுபட்டு வந்தனர். வேதங்களை சாட்சியாக்கித் தங்கள்

பணிகளைச் செய்தனர். ஸத்வ குணத்தை அதிகமாகக் கொண்ட வர்கள் பிராம்மணர்கள் ஆனார்கள். ரஜோ குணத்தை அதிகமாகக் கொண்டவர்கள் க்ஷத்ரியர்கள் ஆனார்கள். பாதி ரஜோகுணமும், பாதி தமோ குணமும் கொண்டவர்கள் வைச்யரானார்கள். தமோ குணத்தை அதிகமாகக் கொண்டவர்கள் சூத்ரர்கள் ஆனார்கள்.

ஸத்வகுணம் இருந்தால்தான், வேதத்தைப் பயிலவும், பயிற்று விக்கவும், வேதநெறியின்படி நடக்கவும், அதை மற்றோருக்கு உபதேசிக்கவும், நெருக்கடிகளைப் பொறுமையோடு சமாளித்து வேதநெறியைக் காக்கவும் முடியும் என்பதால் அக்குணத்தைப் பெற்றோர் பிராஹ்மணர்கள் என்று வகைப்படுத்தப்பட்டனர்.

ரஜோகுணம் இருந்தால்தான், துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம், துணிவு வீரம், ஜன ஸம்ரக்ஷணம் முதலிய காரியங்களைச் செய்யமுடியும் என்பதால் அக்குணம் பெற்றோர் க்ஷத்ரியர்கள் (அரசர்கள்) என்று வகைப்படுத்தப்பட்டனர். அவர்களிடம் நாட்டை ஆளும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

பாதி ரஜோகுணத்தையும், பாதி தமோகுணத்தையும் பெற்றவர்கள் அரசனினும் சேர்த்தியின்றி சூத்திரனினும் சேர்த்தியின்றி இரண்டுங்கெட்டான்களாக இருந்ததால் இவர்கள் வைசியர்கள் ஆனார்கள். இவர்களிடம் கால்நடை வளர்ப்பு, விவசாயம் வாணிபம், உணவு உற்பத்தி இத்துறைகள் ஒப்படைக்கப்பட்டன.

தமோ குணத்தைப் பெற்றவர்கள் உடல் உழைப்பு மற்றும் எடுபிடி வேலை இவை தவிர வேறு எதுவும் செய்யத் தகுதியில்லாதவர்கள் ஆகையால் அக்குணத்தைப் பெற்றோர் வெறும் உடல் உழைப்பை மட்டும் செய்யக்கூடிய சூத்திரர்கள் ஆனார்கள்.

இந்த நான்கு பிரிவானது மனிதர்களுக்குள் இயற்கையிலேயே அமைந்த பேதம். ப்ரக்ருதியின் குணங்களாலேயே இந்த பேதம் ஏற்பட்டது. பேதம் இல்லாத வஸ்து என்று எந்த ஒரு வஸ்துவையும் இவ்வுலகில் நாம் காட்டவும் முடியாது; பார்க்கவும் முடியாது. மனிதர்களுக்குத்தான் இந்த பேதம் என்பதல்ல. விலங்கு, பறவைகளுக்குள்ளும் உண்டு. விலங்குகளில் பசு ஸாத்விக குணத்தை அதிகமாகக் கொண்டது. புலி, சிங்கம் போன்றவை ரஜோகுணத்தை அதிகம் பெற்றவை. எருமை கழுதை போன்றவை தமோ குணத்தை அதிகமாக

உடையவை. அதேபோல், பறவைகளில் புரு, கிளி போன்றவை ஸாத்வீக குணமுடையவை. பருந்து, கழுகு போன்றவை ரஜோ குணத்தை உடையவை. காகம் ஆந்தை போன்றவை தமோ குணத்தை உடையவை. இப்படி பறவைகள், விலங்குகள் இவற்றுக்குள்ளேயே பேதம் காணப்படுகிறபொழுது, மனிதர்களுக்குள் உள்ள பேதம் மட்டும் செயற்கையானது என்று எப்படிக்கூற முடியும்? இப்படி நாம் கூறும்போது சிலர் கேட்கலாம். அதாவது "பறவை விலங்குகள் எல்லாம் அறிவு குறைந்தவைகள்; மனிதனே சிந்தனைத்திறன் உள்ள ஆறுவது அறிவு பெற்றவன். அதனால் மனிதனை விலங்குகளோடு ஒப்பிடுவது சரியா?" என்று. மனிதன் சிந்தனைசக்தி உள்ளவன்தான். அந்தச் சிந்தனை சக்தியில் உள்ள வேற்றுமைதான் மனிதர்க்களுக்குள்ளேயே பேதத்தை ஏற்படுத்துகிறது. எல்லா மனிதர்களுக்குள்ள சிந்தனை சக்தியும் ஒரு மாதிரி இருப்பதில்லையே! விமானத்தைக் கண்டு பிடித்தவனை விஞ்ஞானி என்கிறோம். விமானத்தை ஓட்டுபவனை விமானம் ஓட்டி (Pilot) என்கிறோம். விமானத்தைக் கண்டு பிடித்தவனையும் விமானம் ஓட்டியையும் விஞ்ஞானி என்ற ஒரே வார்த்தையால் நாம் அழைக்க முடியுமா? விமானத்தை ஓட்டத் தெரிந்தவனின் அறிவாற்றலைவிட அந்த விமானத்தையே கண்டு பிடித்தவனின் அறிவாற்றல் மேம்பட்டதல்லவா? இதுதான் மனிதர்களுக்குள் உள்ள பேதம். இந்த அடிப்படையில்தான் வர்ணாச்ரம தர்மம் உண்டானது.

ஆங்கில இலக்கியத் துறையில் உள்ளவர்களுக்கு டாக்டர் சாமுவேல் ஜான்சனைப் (Samuel Johnsion) பற்றித் தெரியாமல் இருக்காது. 18-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்த அறிஞர் மிகச்சிறந்த இலக்கியத் திறனாய்வாளர்; கட்டுரையாளர்; கவிஞர்; நாடகாசிரியர். 1755-ல் ஆங்கில அகராதி ஒன்றை இவர் தயாரித்தார். இவரது வாழ்க்கை வரலாற்றை இவரது நண்பர் பாஸ்வெல் என்பவர் "Life of Johnson" என்ற தலைப்பில் எழுதினார். அந்நூலில் "இந்தியாவில் நிலவிவரும் ஜாதிமுறை பற்றித் தங்கள் கருத்தென்ன?" என்ற கேள்வி ஜான்சனிடம் கேட்கப்பட்டபோது அதற்கு அவர் கூறிய பதில் பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளது—

"விலங்குகளுக்குள்ளும் மரம் செடி கொடிகளுக்குள்ளும் உயர்ந்த ஜாதிகளும், தாழ்ந்த ஜாதிகளும் இருப்பதைக் காண்கிறோம். மனிதர்களிலும் அப்படி ஜாதி இருப்பதாகக் கொள்வதில் தவறில்லை. நாய்களில் மாஸ்டிஃப் (Mastiff) என்னும் வகை மிக

உயர்ந்ததாக இருப்பதுபோல் மனிதர்களில் பிராமணன் மிக உயர்ந்த ஜாதியாக இருக்கிறான் (Brahmin is the Mastiff of Mankind)''.

விலங்கு என்றால் பசுவும் விலங்குதான்; எருமையும் விலங்குதான். பசு தன் இனப்பெருக்கத்தை எருமையுடன் சேர்ந்து செய்யுமா? பறவை என்றால் புறாவும் பறவைதான்; ஆந்தையும் பறவைதான். புறா தன் இனப்பெருக்கத்தை ஆந்தையுடன் சேர்ந்து செய்யுமா? இந்த விஷயத்தில் விலங்குகளும் பறவைகளும் இன்றுவரை சரியாகத்தான் இருக்கின்றன; என்றும் சரியாகத்தான் இருக்கும். இதைப் புரிந்துகொண்டால் மனிதர்களுக்குள் ஏற்பட்ட ஜாதிப்பிரிவையும் அதன் முக்யத்வத்தையும் புரிந்து கொள்ள முடியும்.

ஆதியில் முக்குண அடிப்படையில் பிரிந்து சமூகப் பணிகளை நடத்தி வந்த நான்கு பிரிவினரும் தங்கள் தங்கள் குணத்திற்குப் பொருத்தமான பெண்களை மணம் புரிந்து அவர்கள்மூலம் தங்கள் இனத்தைப் பெருக்கினர். காலம் செல்லச்செல்ல க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர இந்த மூன்று ஜாதிக்காரர்களிடம் ''பொறாமை'' என்ற குணம் தோன்ற ஆரம்பித்தது. இந்தப் ''பொறாமை'' என்ற குணம் ரஜஸ், தமோ குணங்களைப் பிறப்பிடமாகக் கொண்டது. அதனால்தான் அக்குணங்களைக் கொண்ட க்ஷத்ரிய, வைச்ய சூத்ர ஜாதிகளுக்கிடையே இக்குணம் தோன்றியது. தன்னைவிட உயர்ந்தவனை, சிறப்பானவனைப் பார்க்கும்போது ஏற்படும் தாழ்வு மனப்பான்மையே இந்தப் பொறாமைக்குணம் தோன்றக் காரணம். தனக்கு ஏற்பட்டுள்ள தாழ்வு இயற்கையானது, தவிர்க்க முடியாதது என்ற எண்ணம் மனத்தில் உள்ளவரை இந்தப் பொறாமைக்குணம் தலை தூக்காது. ''எல்லோரின் உடம்பிலும் ஒரே ரத்தம்தானே ஓடுகிறது. அவன் மட்டும் உயர்ந்தவனாக இருக்கிறான். நாம் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியிருக்கிறது இது எப்படி? ஒன்று அவனுக்கு சரியாக நாம் வரவேண்டும் அல்லது அவனே இல்லாமல் செய்துவிடவேண்டும்'' என்ற எண்ணம் மனத்தில் வரும்போது பொறாமைக்குணம் தன் சுயரூபத்தைக் காட்ட ஆரம்பித்து விடுகிறது. அதுவரை பிராம்மணன் சொல் கேட்டு ராஜ்ய பரிபாலனம் செய்துவந்த அரசன் சில விஷயங்களில் தன்னிச்சைப்படி நடக்க விரும்பியபோது, ராஜ தர்மத்தைக் காரணம் காட்டி, பிராம்மணர்கள் தடைவிதித்ததால் பிராமணர்கள்மீது அரசனுக்குப் பொறாமை ஏற்பட்டது. ''நம் ஆட்சியின் கீழ் இருந்துகொண்டு நாம் போடும் சோற்றைத் தின்று

வாழ்பவர்கள் சொல்படி நாம் கேட்டு நடப்பதா" என்ற பொருமை அரசர்கள் மனத்தில் ஏற்பட்ட பொழுது பிராம்மணப் பெண்கள் மீது அரசர்கள் கைவைக்கத் தொடங்கினர். இதனால் வர்ண ஸாங்கர்யம் (கலப்பு) ஏற்பட்டது. வர்ண ஸங்கர்யத்தால் குணபேதமுள்ள சந்ததிகள் பிராம்மண, க்ஷத்ரிய ஜாதிகளில் ஏற்பட ஆரம்பித்தன. இதற்கு உதாரணமாக, பரசுராமரையும் விச்வாமித்ரரையும் கூற முடியும். பரசுராமர் க்ஷத்ரிய குணம் கொண்ட பிராம்மணர், விச்வாமித்ரர் முயற்சியால் பிராம்மணனான க்ஷத்ரியர்.

இப்படி ஆரம்பத்தில் பிராம்மண, க்ஷத்ரிய ஜாதிகளுக்கிடையே உள்ள வர்ணஸாங்கர்யம் வைச்ய, சூத்ர ஜாதிவரை போய்விட்டால் அதனால் ஏற்படும் சந்ததியினரின் குணங்களின் இடம் மாறுபாட்டால் எவ்வகையிலும் சேராத, எல்லாக் குணங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் பெற்ற சீரழிந்த வாரிசுகளாக இந்த சமுதாயத்தில் உருவாகி விடுவார்களே என்று பயந்துதான் வர்ண ஸாங்கர்யத்தைக் கடுமையாகக் கண்டித்த மனு அப்படி வர்ண ஸாங்கர்யத்தால் ஏற்படும் வாரிசுகளுக்குத் தனித்தனி ஜாதிப் பெயரிட்டு அவர்களின் குணங்களுக்குத் தகுந்த தொழிலை நிர்ணயித்தார். பிராம்மணனுக்கு அடிமை செய்வதையே தொழிலாகக் கொண்ட சூத்திரன் தனக்கு ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மையால் உந்தப்பட்டும், பிராம்மணனின் உயர்வு கண்டு ஏற்பட்ட பொருமைக் குணத்தாலும் "பிராம்மண ஜாதிப் பெண்ணை மணந்துகொண்டால் நாமும் பிராம்மணனாகி விடலாம்; நமக்குப் பிறக்கும் பிள்ளையும் பிராம்மணனாகிவிடுவான்" என்ற கணக்கில் செயல்பட்டபோது தான் பிராம்மணப் பெண்ணுக்கும் சூத்ரனுக்கும் பிறந்தவனை "சண்டாளன்" என அழைத்து, அவனுடைய நிலையை சூத்ரனுடைய நிலைக்கும் கீழாக்கினார் மனு. இப்படியொரு கடுமையான சட்டத்தை விதித்தாலாவது வர்ண ஸாங்கர்யத்தில் நாட்டமுள்ளவர்கள் "ஆகா! நாம் ஜாதிவிட்டு ஜாதி திருமணம் செய்து கொண்டால் நமக்கு உண்டாகும் சந்ததியினர் நம் இரண்டு ஜாதியிலும் சேராத கீழ்ப்பட்ட ஜாதியாகி விடுவார்களே!" எனப் பயந்தாவது தவறு செய்யமாட்டார்கள் என்று நினைத்துத்தான் ஸங்கர ஜாதிகளின் உற்பத்தியை மனு உருவாக்கினார். வர்ண ஸாங்கர்யம் தரங்கெட்ட சந்ததியினரை உருவாக்கும் என்ற வேதம் மற்றும் மனுவின் கொள்கையை அறிவியலும் ஏற்றுக் கொள்கிறது. பெற்றோர் மற்றும் முன்னோர்களின் குணம், நிறம், உடலமைப்பு இவற்றையே பிறக்கின்ற குழந்தை பெறுகிறது என்றே

அறிவியல் கூறுகிறது. வியாதிகளில் கூட சில வியாதிகள் பரம்பரை (Genitic) வியாதியாக வருவது உண்டு என்று மருத்துவ அறிவியல் கூறுகிறது.

சாதாரணமாக, பயிர்த்தொழில் செய்யும் ஒரு விவசாயி தன் வயலில் கலப்பில்லாத நெல்லை விதைத்தால்தான் கிடைக்கும் மகசூலை நல்லவிலைக்கு விற்கலாம் என்று நினைக்கிருன். கலப்பில்லாத தூய நெல் தரமுள்ளதாக, விலையுள்ளதாகக் கருதப்படுகிறது. கலப்புள்ள நெல் விலைபோகவில்லை. தானிய விஷயத்திலேயே இது பின்பற்றப்படுகிறது என்ருல் சிந்தனையும் குணங்களும் ஒருவருக்கொருவர் மாறுபட்டுள்ள மனித வர்க்கத்தில் ஏன் இந்த நிலை பின்பற்றப்படக்கூடாது? தரமான விதையை வளமான நிலத்தில் விதைத்தால் கிடைக்கும் மகசூல் தரமானதாக இருக்கும். விதை தரமானதாக இருந்து நிலம் வளமற்றதாக இருந்தாலும் நிலம் வளமானதாக இருந்து விதை தரமற்றதாக இருந்தாலும் விளையும் தானியம் தரமற்றதாகவே இருக்கும்.

பிராம்மண ஸ்த்ரீயை திருமணம் செய்து கொண்டுவிட்டால் நாமும் பிராம்மணனுகிவிடலாம் என்பது சூத்திரனின் கணக்கு. ஆனுல் தமோகுணமுடையவன் ஸாத்விக குணமுடைய பெண்ணிடம் சந்ததியை உண்டு பண்ணிஞல் இரு குணங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் கொண்ட ஒரு மூடனுன பிள்ளையே பிறக்கும். அந்த சந்ததியால் சமுதாயத்திற்கு என்ன பயன்? அவனுடைய குணத்திற்குத் தக்கபடி "சண்டாளன்" என்ற பெயரை இட்டு அவனுக்கு உரிய பணியை விதித்தார் மனு.

இப்படி மூன்று குண அடிப்படையில் பிரிந்திருந்த நான்கு பிரிவினர்களுக்குள்ளும் வர்ண ஸாங்கர்யம் ஏற்பட்டால், அதனுல் ஏற்படும் சந்ததியினர் அந்த நால்வரைவிடத் தாழ்ந்தவர்களாகவும் அவ்வாறு ஏற்பட்ட அந்தத் தாழ்ந்த சந்ததியினரிடம் ஏற்பட்ட வர்ண ஸாங்கர்யத்தால் அவர்களைவிடத் தாழ்வானவர்களும் ஏற்பட்டார்கள். எந்த நிலையிலும் இந்தத் தாழ்வு என்பது குண அடிப்படையிலானது என்பதால் குணத்துக்குத்தக்க தொழில் அவர்களுக்கு விதிக்கப்பட்டது. ஆகவே குணமும் அதன் அடிப்படையிலான உயர்வு தாழ்வும் இயற்கையில் அமைந்தவையே. யாராலும் செயற்கையாக செய்யப்பட்டதல்ல.

பேரறிஞர் ஜார்ஜ் பெர்னுட்ஷாவின் வாழ்வில் ஒரு சம்பவம் நிகழ்ந்ததாகக் கூறுவர். அதாவது பெர்னுட்ஷா மிகப்பெரிய

அறிவாளி. ஆனால் உருவத்தோற்றத்தில் அவர் கொஞ்சம் விகாரமாக இருப்பார். ஒருநாள் அவரிடம் ஒரு பெண் சென்று "ஐயா! தாங்கள் மிகப்பெரிய அறிஞர். ஆனால் அழகற்றவராக உள்ளீர்கள். நானோ நிறைந்த உடல் அழகைப் பெற்றிருக்கிறேன். ஆனால் அறிவு சிறிதுமற்ற முட்டாள் நான். என்னைத் தாங்கள் திருமணம் செய்துகொண்டால் என் அழகும் உங்களின் அறிவும் சேர்ந்து அழகையும் அறிவையும் ஒருங்கேபெற்ற ஒரு குழந்தை நமக்குப் பிறக்குமல்லவா?" என்று கூறினளாம். அதைக்கேட்ட பெர்னாட்ஷா சிறிதும் யோசிக்காமல் சட்டென்று "பெண்ணே! நீ அழகானவள் என்பதும், நான் அறிவாளி என்பதும் உண்மைதான். ஆனால் நீ சொன்னபடி நாம் இருவரும் திருமணம் செய்துகொண்டால் உன் முட்டாள்தனமும் என் அசிங்கமும் சேர்ந்து அழகற்றவனாகவும் முட்டாளாகவும் உள்ள பிள்ளை பிறந்து விட்டால் என்ன செய்வது?" என்று திருப்பிக் கேட்டாராம். அப்பெண் பதில் பேசமுடியாமல் திரும்பிப் போய்விட்டாளாம்.

**குறிப்பு :** ஆழ்வார்களின் அமுதவாயில் ஊறிய அழகிய தமிழ்ப் பாசுரங்களில் தன் மனதைப் பறிகொடுத்து, அவர்களின் பக்தி நெறி என்னும் தேனைப் பருகி அவர்கள் காட்டிய வழியிலேயே தன் ஆன்மீகப் பயணத்தைத் தொடர்ந்தவர் ஸ்ரீமத் ராமானுஜர். அவரது சிஷ்ய பரம்பரை வழி வந்தவர்களில் ஒருவராகக் கருதப்படும் ஸ்ரீவேதாந்த தேசிகர், "ஆழ்வாரானாலும் ஜாதி போகாது" என்ற கருத்தை உடையவர். அதாவது, ஒருவன் எவ்வளவு ஞானபக்தி வைராக்ய நிஷ்டனாயிருந்தாலும் பிறப்பால் அவன் தாழ்ந்த சாதிக்காரனானால் அவன் தாழ்ந்தவனே; பிறப்பினால் ஆன ஜாதித்தாழ்வு, ஞானபக்தி வைராக்யத்தோடுகூடிய ஸ்ரீவைஷ்ணவத்தால் போய்விடாது என்ற கருத்தில் தேசிகன் உறுதியாக இருந்ததாகக் கூறப்படுகிறது. அந்த தேசிகனைத் தங்கள் ஆசார்யனாகக் கூறிக்கொள்ளும் வடகலை வைஷ்ணவர்களில் ஒருவரான இந்த அக்னிஹோத்ரம் ராமானுஜதாத்தாசார்யர் வேதம் மற்றும் மநுஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட வர்ணாஸ்ரம தர்மத்தை நிந்திப்பது ஊரை ஏமாற்றவா? சாத்தான் வேதம் ஓதிய கதை என்பது இதுதானோ?

அ.ஹோ.வின் கட்டுரையைப் பிரசுரிக்கும் "அறிவு ஜீவிகளான" நக்கீரன் பொறுப்பாசிரியர்களுக்கு இதெல்லாம் தெரிய வேண்டாமோ!

"சூத்திரனுக்கு அறிவு கொடுக்காதே, தர்மோபதேசம் பண்ணாதே; சண்டை வந்தால் சூத்திரன் எந்தப்பக்கம் இருக்கிறனே அந்தப் பக்கத்துக்கே தண்டனை கொடு. அவனை உதை. இந்தப் பாலை இவன் குடிக்கக் கூடாது. இவன் எச்சில்படாமல் குடிக்க வேண்டும்" என்றெல்லாம் வேதத்தைத் திரித்து மனு தர்மம் சூத்திரர்களுக்கு பாதகமாக செய்யப்பட்டது என்று எழுதுகிறர் அ. ஹோ.

> த$_3$ண்ட$_3$ா இவேத்$_3$கே$_3$ா அஜநாஸ ஆஸந்
> பரிச்சி$_2$ந்நா ப$_4$ரதா அர்ப$_4$காஸ: |
> அப$_4$வச்ச புர ஏதா வஸிஷ்ட$_2$
> ஆதி$_3$த் த்ருத்ஸூநாம் விஶோ அப்ரத$_2$ந்த ||
>
> [ரிக்வேதம் 5-3-23-6]

[''ஓ! அறிஞர்களே! நாகரிகமில்லாமல் பேசுபவர்களாயும், கருத்தை முறையாகத் தெரிவிக்க இயலாதவர்களாயும், உடல் வளர்ச்சிக்கே முக்யத்வம் கொடுப்பவர்களாயும், குறுகிய மட்டரகமான எண்ணமுள்ளவர்களாயும், மற்றவர்களை அவமதிக்கும் தன்மையுடையவர்களாயும் உள்ளவர்களுக்குக் கல்வி போதிக்காதீர்கள். அவர்கள் கல்வி கற்கத் தகாதவர்கள். மாருக, ஆசிரியரை மதிக்கத் தெரிந்தவர்களும், உயர்ந்த எண்ணமுள்ளவர்களுமே கல்வி கற்கத் தகுந்தவர்கள்''.]

கல்வி கற்கத் தகுந்தவர்களையும், தகாதவர்களையும் இப்படி அடையாளம் காட்டுகிறது வேதம். இந்த மந்திரத்தில் கல்வி கற்கத் தகாதவர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் யாரோ அவர்கள்தான் மனுவால் சொல்லப்பட்ட சூத்திரர்கள். சூத்திரனுக்கு தர்மோபதேசம் செய்யாதே என்று சொன்னதற்கான காரணம் என்னவெனில்—அவனுடைய இயல்பான குணம் அந்த தர்மோபதேசத்தை முறையாக கிரஹிக்காது என்பதால்தான். சண்டை வந்தால் சூத்திரன் பக்கம் தண்டனை கொடு என்று மனு சொன்னதற்கும் வலுவான காரணம் உண்டு. மேலார் கீழோரைத் துன்

புறத்தினால் அதற்குப் பல காரணங்கள் இருக்கமுடியும். ஆனால் கீழோர் மேலோருக்குத் துன்பம் கொடுத்தால் அதற்குக் காரணம் பொறாமை ஒன்றாகத்தான் இருக்கமுடியும். சூத்திரன் தனக்கு மேற்பட்டவர்களான மற்ற மூன்று வர்ணத்தவரை (பிரம்ம, க்ஷத்ரிய, வைசியர்) சண்டைக்கு இழுக்க, பொறாமையைத் தவிர வேறு என்ன காரணம் இருக்கமுடியும். நான் முன்பே கூறியதுபோல், தனது தாழ்வு மனப்பான்மையால் உந்தப்பட்டு, பொறாமை உணர்வோடு "அவர்கள் மட்டும் உட்கார்ந்து சாப்பிடுகிறார்களே! நாம் மட்டும் உழைக்கிறோமே" என்று ஒரு சூத்திரன் எண்ணத் தொடங்கும்போது அவன் தனக்கு மேற்பட்டோரைப் பகையாளியாகப் பார்க்கிறான். அங்குதான் பிரச்சனை வருகிறது. 'நான் மட்டும் உழைக்கிறேனே' என்றால் என்ன செய்வது? உனக்கு உழைக்க மட்டும்தானே தெரியும். உன் குணத்திற்குத் தக்க உனக்குத் தெரிந்த தொழில் உனக்கு வழங்கப்பட்டுள்ளது. உன்னால் வேதம் ஓதமுடியுமா? ராஜ்ய பரிபாலனம் செய்யமுடியுமா? செய்ய முடியாததற்கு ஆசைப்பட்டு என்ன பயன்? இயற்கையிலேயே இனிமையான குரல்வளம் கொண்ட ஒரு பாடகன் இருக்கிறான். அவனுக்கு அவனுடைய குரல் வளத்திற்காகவும், கலை அறிவுக்காகவும் பெருமையும் புகழும் மரியாதையும் வந்து சேருகிறது. குரல்வளமே இல்லாத ஒருவன், அந்தப்பாடகன் அடையும் புகழையும் மதிப்பையும் பெறவேண்டும் என்று ஆசைப்பட்டால் அது நடக்குமா? அதனால், அந்தக் குரல் வளம் இல்லாதவனுக்கும் அந்தப் பாடகனுக்கும் இடையில் பிரச்சனை வருவதற்கு என்ன காரணம் இருக்கமுடியும்? ஒன்று பயிற்சியின் மூலம் தன் குரல் வளத்தை அந்தப் பாடகனுடைய குரல் வளத்திற்குச் சமமாக உயர்த்திக்கொள்ள முயற்சி செய்யவேண்டும். அப்படி முயற்சி செய்தாலும் அது இயலவில்லை என்று தெரிந்தவுடன், பேசாமல் அந்தப் பாடகனுடைய புகழையும் பெருமையையும் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். அதை ஏற்றுக்கொள்ள மனமில்லை எனில் அங்கே பொறாமை தலைதூக்குகிறது என்று பொருள். அந்தப் பொறாமை வளரவளர அது அந்தப் பாடகனை எதிரியாகவே பார்க்கத் தூண்டும். முடிவில் எதிரியைத் தீர்த்துக் கட்டிவிடவேண்டும் என்ற எண்ணம் வரைக்கும் கொண்டுபோய்

விட்டுவிடும். இது தமோகுணத்தின் சாரமான தன்மை. முதல் மூன்று வர்ணத்தார்க்குப் பணிவிடை செய்வதுதான் சூத்திரனின் கடமையாக விதிக்கப்பட்டது. அந்தப் பணிவிடையில் திருப்தி காணுத சூத்திரன் அவர்களுக்கு உள்ள பெருமையையும் புகழை யும் கண்டு ஒரு நிலையில் பொருமைப்படுகிருன். அப்போது தான் பிராம்மணனுக்கும் சூத்திரனுக்கும் பிரச்சனை துளிர்விடு கிறது. இந்நிலையில் பொருமையால் பிரச்சனையை வளர்ப்பவன் பக்கத்தில்தானே தண்டனை கொடுப்பது நியாயமாகும்? இந்த முறை யில்தான் மனு இப்பிரச்சனையை அணுகினர். ஒரேவிதமான குற் றத்தை இருவர் செய்யும்பொழுது, குற்றத்தின் தன்மை ஒன்ருக இருந்தாலும், குற்றம் செய்யத் தூண்டிய சூழ்நிலையை வைத்து அவ்விருவருக்கும் தண்டனை வழங்கப்படவேண்டும். அப்படிப் பார்க்கும்போது அவ்விருவரில் ஒருவருக்கு ஒருவிதமாகவும், மற்ற வருக்கு வேறுவிதமாகவும் தண்டனை அமையக்கூடும். இதுதான் மனுவின் கொள்கை. இதில் என்ன தவறு உள்ளது?

மனுவைக் கண்டனம் செய்துவரும் இன்றைய 'சம(அ)தர்ம' சமு தாயத்தில் கூட சாதாரண மனிதனைக்கொல்ல முயற்சி செய்தவனுக் கும், பிரதம மந்திரியைக் கொல்ல முயன்றவனுக்கும் தண்டனை ஒன் ருக இருப்பதில்லையே! இரண்டுமே கொலை முயற்சிதான் என்ரு லும் முதலில் சொன்னது வெறும் கொலை முயற்சி. இரண்டாவ தாகச் சொன்னது ராஜத்ரோகமுயற்சி. இரண்டுக்கும் தண்டனை எப்படி ஒரே மாதிரியாக இருக்கமுடியும்? இதே அணுகுமுறை யைத்தான் தண்டனை விஷயங்களிலும் கையாண்டார் மனு.

எச்சில், துப்பல் போன்ற ஆசார விஷயங்களெல்லாம் முற்றி லும் சுகாதார விஷயத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஒருவர் எச்சிலை ஒருவர் சாப்பிட்டால் தொற்றுநோய் பரவ வாய்ப்புள்ளது என்று இன்றைய விஞ்ஞானம் கூறுவதை ஏற்பவர் கள் வேதம் சொல்லும் சதாசார விஷயத்தை ஏற்க மறுப்பது விநோதமாக உள்ளது. ஒருவர் சாப்பிட்ட எச்சிலை மற்ருெருவர் சாப்பிட்டால்தான் அந்த மற்ருெருவர் மனிதநேயம் உள்ளவர்

என்று ஆகுமா? ஒருவரை ஒருவர் எப்பொழுதும் கட்டிப்புரண்டு கொண்டால்தான் மனிதனை மனிதன் மதிக்கிறான் என்று அர்த்தமா? 'பரம வைதிகரான' அ.ஹோ.விற்கு இதெல்லாம் புரியாதோ?

குணம், தொழில் இவற்றின் அடிப்படையில் ஜாதி பிரிந்திருந்தாலும் இவற்றுள் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பேதம் ஏன் என்று சிலர் கேட்கின்றனர். இந்தக் கேள்விக்கு முன்பே நான் மேற்கோளாக எடுத்துக்காட்டிய டாக்டர் சாமுவேல் ஜான்ஸனின் பதிலே மிகப் பொருத்தமானதாக இருக்கும். இன்றைய நவநாகரீக 'சம(அ)தர்ம' சமுதாயத்தில் இந்த பேதம் இல்லையா? கலெக்டர் உட்காரும் ஆசனத்தில் கலெக்டர் ப்யூன் உட்காரமுடியுமா? இருவரும் மனிதர்கள்தானே! கலெக்டருக்கும் ஒரே சம்பளம் கலெக்டரின் ப்யூனுக்கும் ஒரே சம்பளம் என்று எங்காவது பார்க்கமுடியுமா? இருவரும் மனிதர்கள்தானே! இருவருக்கும் ஒரே சம்பளம் கொடுத்தால் என்ன? இந்த பேதம் நியாயமானதாக இருந்தால் அன்று நான்கு வர்ணத்தவரிடையே இருந்த பேதம் நியாயமானதே. இன்று சில அரசு நிறுவனங்களில் பணிபுரியும் கடைநிலை ஊழியர்கள் உயர் அதிகாரிகளால் நடத்தப்படும் விதத்தைப் பார்க்கின்றபொழுது மனு சொல்லும் சூத்திரனின் நிலை எவ்வளவோ மேல்.

சரி, கீழ்சாதிக்காரர்கள் வீட்டில் சாப்பிடக்கூடாது, அவர்களைத் தொடக்கூடாது என்று சொல்வது ஏன் என்று சிலர் கேட்கின்றனர். ஏனெனில், கீழ்மட்டத்தில் உள்ளவர் மேல் மட்டத்தில் உள்ளவர்கள்மேல் பொறாமைப்படுவது இயல்பு என்று முன்னமே கூறியுள்ளேன். மேல் மட்டத்தில் உள்ளவர்களுக்குத் தொண்டு செய்தே களைத்தவர்களில் சிலருக்கு பொறாமை உணர்வு ஏற்பட்டிருக்கக்கூடும். நேரிடையாகவோ, பிறப்பாலோ மேன்மையை அடையமுடியாத அந்த கீழ்சாதியினர் பொறாமை குணத்தின் உந்துதலால் குறுக்குவழியில் மேல் மட்டத்தில் உள்ளவர்களை ஒழித்துக்கட்ட நினைக்கலாம். அந்த வகையில் நெருக்கத்தின் மூலமாகவும் உணவின் மூலமாகவும் மேல் மட்டத்தோரை

மாய்க்க, கீழ்சாதிக்காரர்கள் எண்ண வாய்ப்பு உள்ளது. அந்த முன் எச்சரிக்கை உணர்வினால்தான் மேல் மட்டத்தவர் கீழோரிடம் நெருக்கம் வைப்பது இல்லை. (குணம், செயல், தொழில் இவற்றுக்குத் தக்கபடி உணவுப் பழக்கவழக்கங்களிலும் மாறுதல்கள் இருப்பதும் கூட மேல்மட்டத்தவர் கீழோர் வீட்டில் சாப்பிடாமல் தவிர்த்ததற்குக் காரணமாகக் கூறலாம்) இது நாள் செல்லச் செல்ல சதாசாரமாக மாறிவிட்டது. அந்தக் காலத்திலும், நீதிநெறி வழுவா அரசனாயிருந்தாலும், அவனுக்குரிய உணவு பரிசோதித்தபின்பே கொடுக்கப்பட்டது. சமுதாயத்தில் எல்லாத் தரப்பு மக்களிடமும் அந்த அரசன் ஒன்றாகக் கலந்து பழக முடியாது. காரணம் பாதுகாப்பு உணர்வுதான். அரசனுக்கே இந்நிலை எனில் - அவனுக்கும் மேல் மட்டத்திலிருந்து தர்மோபதேசம் செய்யும் பிராம்மணர்கள் தற்பாதுகாப்புக்காக எச்சரிக்கையாக இருப்பது அவசியம் அல்லவா? தங்களது மேன்மையை (Supremacy) பொறுக்காத கீழ்மட்டத்தில் உள்ளவர்கள் தமக்கு பாதகம் செய்யக்கூடும் என்று கருதியே கீழ்மட்டத்தில் உள்ளவர்களோடு நெருக்கத்தைக் குறைத்துக் கொண்டனர் பிராம்மணர்கள். அது நாளடைவில் பிராம்மண ஆசாரமாக மாறிவிட்டது. அதனால் வேதம் மற்றும் அதைத் தழுவிய மனுஸ்ம்ருதி இவை சொல்லும் ஆசாரம் அனைத்திற்கும் பின்னால் பல வலிமையான காரணங்கள் இருக்கின்றன.

"ஜாதி பேதமற்ற சமுதாயத்தை நாங்கள் உருவாக்கி விட்டோம்" என்று சிலர் கூறுகிறார்களே! இன்று அப்படி ஒரு சமுதாயத்தை உருவாக்கிவிட்டார்களா? பழைய ஜாதிகளின் பெயர்களை அழித்துவிட்டாலும் வேறொரு பெயருடன் இன்னும் அது உருவாகத்தான் செய்யும். இன்று நீதித்துறையில் உள்ளவர்களுக்குக் கொடுக்கப்படும் இடம் அன்று பிராம்மணனுக்குக் கொடுக்கப்பட்டது. இன்று அரசியல்வாதிகளுக்குக் கொடுக்கப்படும் இடம் அன்று க்ஷத்ரியர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இன்று பெரும் தொழில் அதிபர்களுக்குக் கொடுக்கப்படுகிற இடம் அன்று வைச்யர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இன்று அரசு ஊழியர்களுக்குக் கொடுக்கப்படும் இடம் அன்று சூத்திரர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இவை தவிர இன்று டாக்டர்கள், இஞ்ஜினியர்கள், கலைஞர்கள், மோட்டார்

தொழிலாளர்கள், ஆசிரியர்கள், வியாபாரிகள், கூலித்தொழிலாளர்கள் முதலிய சமூகத்தின் பலதரப்பட்ட வகுப்பினரும் அன்று ஒவ்வொரு ஜாதியின் பெயரால் குறிப்பிட்டு அழைக்கப்பட்டனர்.

ஜாதிகளின் தோற்றம் பற்றித்தான் வேதங்களிலும் மனுஸ்மிருதியிலும் குறிப்புகள் உள்ளனவே ஒழிய ஜாதிக்கொடுமைகள் பற்றி எந்தக் குறிப்பும் அவற்றில் இல்லை. ''கீழ்ச்சாதியானைக் கொடுமைப்படுத்துங்கள், அவனுக்கு ஹிம்ஸை கொடுங்கள், அவனுடைய மனித உரிமையைப் பறியுங்கள்'' என்று வேதமோ, மனுதர்மமோ சொல்லவில்லை. பிற்காலத்தில் வர்ண ஸாங்கர்யத்தால் (கலப்பால்)குலப்பெருமை இழந்த க்ஷத்ரியர்கள் தங்களுக்குக் கீழ்ப்பட்டவர்களை மனிதாபிமானமற்ற ரீதியில் கொடுமைப்படுத்தினர். அவர்களை மட்டுமின்றி உயர் குலத்தோரான பிராம்மணர்களையும் அவமதித்து அவர்களுக்குப் பெரும் தீங்கிழைத்தார்கள். பிராம்மணர்களுக்குத் தீங்கிழைத்ததாலும் அவர்களை அவமதித்ததாலும் அந்த க்ஷத்ரியர்கள் குலப்பெருமை இழந்து சூத்திரத்தன்மையை அடைந்தார்கள்.

காலப்போக்கில் அகம்பாவத்தால் பிராம்மணர்களை மதிக்காததாலும், உபநயனம் முதலிய கர்மங்களைக் கைவிட்டதாலும் சில க்ஷத்ரியர்கள் சூத்ரத்தன்மை அடைந்ததையும் அப்படி சூத்ரத்தன்மையடைந்த அரசர்கள் ஆண்ட பகுதிகளையும் மனு விவரிக்கிறார். அந்த சூத்ரத்தன்மையடைந்த க்ஷத்ரியர்களுக்கு ஸங்கர ஜாதிகளோடு ஏற்பட்ட கலப்பால் ஏற்பட்ட ஒரு வகுப்பினரே பின்னாளில் ''நாங்கள் அரச வகுப்பினர்'' என்று சீரழிந்த தங்கள் பழம் பெருமையைப் பீற்றிக்கொண்டு தங்களைவிட எண்ணிக்கையில் குறைந்த மற்ற ஜாதிக்காரர்களை, தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொண்டு கொடுமைப்படுத்தி வந்தனர். அது இன்றும் தொடர்ந்து கொண்டுதான் வருகிறது. இவர்கள் பிராம்மணர்களையும் துன்புறுத்தி வந்தனர். இவர்களைத்தான் தஸ்யூக்கள் (திருடர்கள்) என்று அழைக்கிறார் மனு.

காலப்போக்கில் அந்த தஸ்யூக்களின் வம்சாவழியினரே 'ஜாதி இந்துக்கள்' என்று தங்களை அழைத்துக்கொண்டு ஜாதிக்

கொடுமைக்கு வித்திட்டவர்கள். இவர்களிடம் ஆள்பலம் அதிக மிருப்பதால், தங்களது சுயநல சுரண்டல் கொள்கைகளுக்கு மட்டும் பிராம்மணர்களைப் பயன்படுத்திக்கொண்டு, மற்றபடி மனப்பூர்வமாக பிராம்மணத்வேஷிகளால் வேதநெறிக்குப் புறம்பானவர்களாகவே இவர்கள் இருக்கிறார்கள். இன்றுவரை நாட்டின் பல்வேறு பாகங்களில் நடைபெறும் ஜாதிக்கொடுமைகள் இவர்களால்தான் என்பது நடைமுறை உண்மை.

மனு பரதார கமனத்தைக் கடுமையாகக் கண்டித்தார். ஆண்பெண் இருவருமே புலனடக்கத்தோடு நடந்துகொண்டு, தம்தம் ஜாதி ஒழுக்கமுடையவர்களாக இருந்துகொண்டு, பெண் பரபுருஷனைச் சேராமலும், ஆண் பரஸ்த்ரீயைச் சேராமலும் இருந்து தங்கள் தங்கள் குலம் விளங்கச் செய்வதோடு இந்த சமுதாயத்திற்கும் நல்ல வாரிசுகளைப் பெற்றுத் தரவேண்டும் என்பதே மனுவின் கட்டளை. இதனடிப்படையில் பார்த்தால் மேல் ஜாதிக்காரர்கள் கீழ்ச்சாதிப்பெண்ணை விருப்பத்தாலோ அல்லது அடக்குமுறையாலோ கவர்வதை மனு கடுமையாகச் சாடியிருக்கிறார் என்பது தெரிகிறது. ஆனால் மனுவைக் கண்டனம் செய்யும் இந்தநாளில் "சாதி இந்துக்கள்" என்று கூறிக்கொள்ளும் சிலர் தங்கள் ஜனவலிமையாலும், பணவலிமையாலும், அரசியல் ஆதரவாலும் கீழ்ச்சாதிப் பெண்களைத் தங்கள் உடல் இச்சைக்கு மட்டும் பயன் படுத்திக்கொண்டு அவர்களைத் தங்கள் மனைவிகளாக ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர். கீழ்சாதிப்பெண்கள்மீது ஆசை வைக்கும் "ஜாதி இந்துக்கள்"தான் அந்தக் கீழ்ச்சாதியினரைப் பொதுக்குளத்தில் தண்ணீர் எடுக்கக் கூடாது என்றும், அவர்கள் செருப்புப் போடக்கூடாது என்றும், அவர்கள் தொட்டால் தீட்டு என்றும் சொல்லி வருகிறார்கள். இக்கொடுமைகளுக்கெல்லாம் காரணம் வேதமும், அதைத்தழுவிய மனுவும், பிராம்மணர்களும்தான் என்று கூறுவது எவ்விதத்தில் நியாயமாகும்?

ஆதலால் "வந்தேறிய இடத்தில் இருந்த அனைவரையும் சூத்திரர்களாக்கி அவர்களை ஜாதிக்கொடுமைகளுக்கு உள்ளாக்கியவர்கள் பிராம்மணர்களே" என்று கூறும் அ. ஹோ. ஒரு சோரம்போன பிராம்மணராக இருப்பாரோ என்றுகருதத் தோன்றுகிறது. அன்றும் சரி, இன்றும் சரி, பிராம்மணர்கள் எண்ணிக்கையில் மற்றவர்களைவிடக் குறைந்தவர்கள்தான் (Minorities). எண்ணிக்கையில் அதிகமான (Majarities) மற்றவர்களை அவர்கள் ஜாதி அடிப்படையில் கொடுமைப்படுத்தினர் என்பது எந்த விதத்திலாவது பொருத்தமான செய்தியா?

நம் நாட்டின் மதிப்பிற்குரிய தலைவர்களில் ஒருவராகப் போற்றப்பட்டுவரும் ஒருவர் இவ்விஷயம் குறித்துச் சொன்ன தகவலைக் கீழே தருகிறேன்.

"The Brahmins may have been guilty of many things, and I dare say they were, but the imposing of the caste system on the Non-Brahmin population was beyond their mettle"[5]

[இதன் பொருள் :— "பிராம்மணர்கள் பல தவறுகள் புரிந்தவர்களாக இருக்கலாம். அவ்வாறு செய்தார்கள் என்றும் நான் துணிந்து கூறுவேன். ஆனால், ஜாதிமுறையை மற்றவர்கள்மீது அவர்கள் சுமத்தினார்கள் என்று கூறுவது அவர்களின் இயல்புக்குப் புறம்பானதொன்றாகும்"]

இவ்வாறு கூறியவர் ஒரு பிராம்மணராகத்தான் இருப்பார் என்று நினைக்கவேண்டாம். இப்படிக் கூறியவர் ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். அவர்தான் டாக்டர் அம்பேத்கார்.

ஒரு நடுநிலை உள்ளம் கொண்ட தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒருவருக்கு பிராம்மணனின் இயல்பு என்ன என்பது புரிகிறது. ஆனால் வைதிகரும் பிராம்மணருமான அ. ஹோ. விற்கு இது புரியவில்லை. இவரை வேதத்ரோகி என்பதா? பிராம்மணத்வேஷி என்பதா?

---

இக்காலத்தில் மனுவின் சட்டம் செயல்படாததால், இக்கட்டுரையைக் கண்டு எவரும் கலங்க வேண்டா. — ஆசிரியர்.

சூத்திரத்தன்மை அடைந்த அரசர்களால் பிராம்மணர்களே கொடுமைப்படுத்தப்பட்டனர் என்று கூறும் மனுவின் கருத்தை அப்படியே வழிமொழிவதுபோல் டாக்டர் அம்பேத்கார் கீழ்க் கண்டவாறு கூறுகிறார்.

There was a continuos Feud between the shudra kings and the Brahmins in which the Brahmins were subjected to many tyrannies and indignities.

As a result of the hetred towards the shudra generated by their tyrannies and oppressions, the Brahmins refused to perform the Upanayana of the Shudras.

Owing to the denial of Upanayana, the Shudras who were kshatriyas became Socially degraded and fell below the rank of the Vaisshyas.

பொருள் : "சூத்திர ராஜாக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் எப்போதும் தொடர்ச்சியாக ஒரு சச்சரவு இருந்துகொண்டே இருந்தது. பிராம்மணர்கள் அவர்களால் பலவித அடக்குமுறை களுக்கும் அவமதிப்புக்கும் உட்படுத்தப்பட்டனர். இதன் விளை வாக, இப்படி சூத்ரர்களால் ஏற்பட்ட அடக்குமுறைகள் அவ மதிப்புகள் இவற்றின் விளைவாக பிராம்மணர்கள் சூத்திரர்களுக்கு உபநயனம் செய்ய மறுத்துவிட்டனர். உபநயனம் மறுக்கப்பட்ட தால் க்ஷத்ரியர்களாக இருந்த சூத்திரர்கள் சமூகத்தில் கீழான நிலைக்குத் தள்ளப்பட்டு, வைச்யர்களுக்கும் கீழானவர்களாக ஆக்கப்பட்டனர்".

இதில் ஒரு விஷயம் கவனிக்கத்தக்கது. அதாவது—உபநய னம் மறுக்கப்பட்டபின் தான் க்ஷத்ரியர்கள் சூத்ரர்கள் ஆனார்கள் என்று சொல்லப்படுவதற்கு முன்பே பிராம்மணர்களுக்குத் தொல்லை கொடுத்த அரசர்களை சூத்திர அரசர்கள் என்றே அம்பேத்கார் குறிப்பிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

17

அதனால் எண்ணிக்கையில் குறைவான பிராம்மண சமூகத்தி னர் காலம் காலமாக எண்ணிக்கையில் அதிகம் உள்ள மற்ற வர் ணத்தவர்களால் கொடுமைப்படுத்தப்பட்டும் அவமதிக்கப்பட்டும் வந்துள்ளார்கள் என்பதுதான் வரலாறு காட்டும் உண்மை. மைனாரிட்டிகளாக இருந்த பிராம்மணர்கள் மற்ற சமூகத்தினரைத் தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து சாஸ்திர ஏகாதிபத்தியச் சூழலை ஏற்படுத்தினர் என்பது உண்மைக்குப் புறம்பான செய்தி.

ஜெர்மானிய வகுப்புப் பாகுபாட்டைப் பற்றிக் கூறும் கோஸன் ராட் எல்ஸ்ட் என்ற அறிஞர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

"The Three classes ere. the warrior nobility (Jarl, where-as in England eard), the free arms bearing peasants (karl), and the Servants (thraell), these correspond to the Indians kshatriya, Vaishya and Shudra, so that the division between Vaishya and Shudra is attested. The missing class here is not the shudras but the Brahmin class. Summing up the distinction betwaen a Shudra and a Vaishya class seems to be attested in the Indian, Greek, Irish, Germanic and per-haps even Iranian branches, it is not a Vedic Curiosum. So that Correspondence between Social rank and religions rank is not an invention of the Brahmins in India, but the application of a world-wide Convention".

**பொருள் :** "மூன்று பிரிவுகள் எவை என்றால் போர் செய் யும் உயர்குடிப்பிறப்பினர், ஆயுதம் ஏந்திய உழவர்கள்; வேலை ஆட்கள் இவை இந்தியப் பிரிவுகளான க்ஷத்ரிய, வைச்ய சூத்ரப் பிரிவுகளை ஒத்திருக்கிறது. இதிலிருந்து வைச்யருக்கும் சூத்ரருக் கும் இடையே உள்ள வேற்றுமை ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பது தெரிகிறது. இதில் காணப்படாத ஒரு பிரிவு சூத்ரர்கள் அல்ல; அது பிராம்மணர் ஆகும். சுருங்கச் சொன்னால் சூத்திரருக்கும் வைச்யருக்கும் உள்ள வேற்றுமை, இந்திய, கிரேக்க, ஐரிஷ், ஜெர்மானிய மற்றும் ஈரானியப் பிரிவுகளிலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பது தெரிய வருகிறது. இது வேதத்தின் விந்தையல்ல.

எனவே சமூகமத படி நிலைகளுக்கு ஊடே உள்ள ஒப்புமை இந்தியாவில் பிராம்மணர்களால் கண்டு பிடிக்கப்பட்ட ஒன்று அல்ல. அது உலகம் முழுவதும் சார்ந்த மரபின் வெளிப்பாடே''.

மேற்கத்திய வரலாற்று ஆய்வாளர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நமது மத வரலாற்றை எழுதிவரும் அ.ஹோவுக்கு, ஜாதிமுறை பற்றி மேற்கண்ட கருத்தைக் கூறிய கோஸன்ராட் எல்ஸ்ட் என்பவரும் ஒரு மேற்கத்திய அறிஞரே என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

''உலகில் ஜாதிமுறை ஏற்பட இயற்கையின் குணங்களே காரணம். வேறு யாரும் அதற்குப் பொறுப்பல்ல என்ற நமது கருத்தை மேற்கண்ட கோஸன்ராட் எல்ஸ்ட்டின் கருத்து உறுதிப் படுத்துகிறது. அன்று பிராம்மணர்களுக்குக் கொடுக்கப்பட்ட மரியாதை அவர்களுடையகல்வி, ஞானம், ஒழுக்கம் இவற்றுக்காக, அவர்களிடம் இருந்த பலத்திற்காக அல்ல. ஏனெனில் ஆள் பலத்தைப் பொறுத்தவரையில் அன்றும் இன்றும் மற்றவர்களைவிட பிராம்மணர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்களே. (உயர்ந்த வஸ்து உலகில் குறைவாகத்தான் இருக்கும் என்பது நடைமுறை உண்மை) இந்நிலையில் பிராம்மணர்கள் எப்படி மற்றவர்களைத் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க முடியும்? பிராம்மணர்களின் ஞானத்திற்குக் கிடைத்த மரியாதையைப் பொறுக்காத சிலர் அவர்களை அவமதித்தனர். காலப்போக்கில் ஞானம் கீழே தள்ளப்பட்டு பலம் கௌரவிக்கப்பட்டது. பலமுள்ளவர்களே உயர்ந்தோர் என்றும், பலமற்றவர்கள் தாழ்ந்தோர் என்றும் கருதப்பட்டனர். இன்று நாட்டில் உள்ள ஜாதி இரண்டே ஜாதி தான். பலமுள்ளவன் ஒரு ஜாதி. பலமற்றவன் ஒரு ஜாதி. கல்வி அறிவு, ஞானம், ஒழுக்கம் இவற்றுக்கெல்லாம் இன்று சமூகத்தில் மரியாதை இல்லை. மழைக்குக்கூடப் பள்ளிக்கூட நிழலில் ஒண்டாத ஒரு முழு மூடன் அடியாட்கள் பத்துப்பேரை வைத்துக் கொண்டு, கத்தி, அரிவாள் இவற்றைக்கொண்டு மிரட்டினால் அவனை ''தலைவா'' என்று சலாம் போட்டு வணங்குகின்றனர் மக்கள். காரணம் அந்த ரௌடிமீது மக்களுக்கு உள்ள பயம்.

ஜாதிக் கொடுமைக்கு பிராம்மணர்கள் காரணமல்ல என்று தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த அம்பேத்காரே கூறியிருக்கும் பொழுது 'வெளிநாட்டிலிருந்து வந்து இந்நாட்டில் குடியேறிய பிராம்மணர்கள் இந்நாட்டின் பூர்வீக குடிகளாக இருந்தவர்களை சூத்திரர்கள் என்று அழைத்து, தங்களிடமிருந்து பேதப்படுத்தினர்' என்று அ.ஹோ. எழுதுவது விந்தையாக உள்ளது.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்த ஸ்ரீமத் ராமாநுஜர் ஒரு அந்தணர். அவர் மரபில் வந்த நாம், ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தை முழுமையாகக் கடைப்பிடிக்கும் ஒரு தாழ்ந்தப்பட்டவனை நம்முடன் சேர்த்துக் கொள்ளத் தயாராக இருக்கிறோம். அந்தத் தாழ்த்தப்பட்டவன் வீட்டில் உண்ணவும், அவனைத் தொடவும் நாம் தயாராக இருக்கிறோம். இன்றுள்ள மற்றவர்கள் இப்படிச்செய்ய முன் வருவார்களா? என்பதே நமது கேள்வி.

மனு பெண்களைத் தாழ்வாகக் கூறுகிறார் என்று எழுதுகிறார் ''வைதிக''ரான அஹோ.

மனுஸ்ம்ருதியில் பெண்கள் விஷயமாகப் பல ஶ்லோகங்கள் உள்ளன. அவை எல்லாவற்றையும் படித்து அவற்றின் பொருளைச் சரியாகப் புரிந்து கொண்டபின்தான் மனு பெண்கள் விஷயத்தில் எப்படிப்பட்ட கருத்தை உடையவர் என்பதை முடிவாகக் கூறமுடியும். அதைவிட்டு ஏதோ ஒரு ஶ்லோகத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அந்த ஶ்லோகம் தரும் பொருளை மட்டுமே அடிப்படையாக வைத்து 'பெண்கள் பற்றிய மனுவின் கொள்கை இதுதான்' என்று கூறுவது படித்தவர்களுக்கோ பண்டிதர்களுக்கோ அழகல்ல.

எந்த ஒரு விஷயத்திலும் மனுவின் அணுகுமுறை முற்றிலும் யதார்த்தமானது. ஒரு வஸ்துவின் இயல்பான தன்மையைக் கூறி, அந்த இயல்பான தன்மை நமக்கு சாதகமாக இருந்தாலும் பாதகமாக இருந்தாலும் அந்த வஸ்து நம்முடன் சம்பந்தப்படும்பொழுது எப்பொழுதும் சாதகமாக இருக்கும்படி நம் முயற்சியால் ஆக்கிக்கொள்ளவேண்டும். இதுதான் யதார்த்த வாதம் என்பது. இந்த அணுகுமுறையைத்தான் மனு ஒவ்வொரு

விஷயத்திலும் கையாள்கிறார். பெண்கள் விஷயத்திலும் இந்த அனுகுமுறைதான் மனுவால் கையாளப்படுகிறது அதனால்தான் மனுஸ்ம்ருதி மற்ற நூல்களைவிட சமூதாயப் பார்வையாளர்களால் அதிகப்படியான கண்டனத்துக்குள்ளானது. ஏனெனில் "யதா₂ர்த்த₂வாதீ₃ ப₃ஹு (வெகு) ஜன விரோதீ₄" என்பது பழமொழி அல்லவா?

முதலில் பெண்ணின் இயல்பான குணங்களைக் கூறுகிறார் மனு. அந்த இயல்பான குணங்களில் சமூகத்திற்கு பாதகமான சில அம்ஸங்கள் இருந்தாலும், அந்தப் பாதகமான அம்ஸங்கள் தீய விளைவுகளை ஏற்படுத்தாவண்ணம் ஜாக்ரதையாகப் பார்த்துக் கொண்டு, அந்தப் பெண்ணினத்தின்பால் உள்ள சாதகமான அம்ஸங்கள் முழுவதையும் இந்த சமூகம்பெற என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறார்.

ஒரு ஆணுக்கு ஒரு பெண்ணுடனான தொடர்பு அவன் பிறக்கும்போதே ஆரம்பித்து விடுகிறது. ஒரு பெண் வயிற்றிலிருந்து தான் ஒரு ஆண் பிறக்கிறான். தான் பெற்ற குழந்தையை மிகுந்த வாத்ஸல்யத்தோடும் அன்போடும் வளர்த்து, தன் மென்மையான பாசம் கலந்த அறிவுரைகளால் அவனை ஒரு நல்ல ஒழுக்கமுள்ள மனிதனாக உருவாக்குகிறாள். உலகத்தில் பிறரிடம் கிடைக்காத ஒன்று உண்டு என்றால் அது தாய்ப்பாசம்தான். தாய்ப்பாசத்திற்கு ஈடு இணை எதுவுமே இல்லை. ஆனால் அந்தத் தாய்ப்பாசமானது ஒருவனுக்கு அவனது தாய் இறந்தவுடன் அஸ்தமனமாகி விடுகிறது. அவனது தாயின் இடத்தை நிரப்பவே அவனுடன் ஒரு பெண்ணை இணைத்து வைக்கிறார்கள். அப்பெண் அவனுக்கு வாழ்க்கைத் துணைவி மட்டுமல்லாமல், பாசத்தாலும், அன்பாலும், மென்மையான அணுகுமுறையுடன் ஆலோசனை கூறுவதாலும் அவனுக்குத் தாய் இல்லாத குறையை நீக்குகிறாள். அதனால்தான் 'தாய்க்குப்பின் தாரம்' என்றார்கள். முழுமையாக முடியாவிட்டாலும் 99 விழுக்காடு தாயின் ஸ்தானத்தை மனைவியால் நிரப்பிவிட முடியும். அப்படி ஒரு நல்ல மனைவி அமைகிற பொழுது அந்த ஆண் எந்தக் குறையுமின்றி தனது வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் நல்ல முன்னேற்றத்துடன் பீடு நடை போடுகிறான். அப்படிப்பட்ட அன்பும், பாசமும், இணை

பிரியா நட்பும் உடைய அந்த தம்பதியருக்குப் பிறக்கும் குழந்தைகள் அறிவாற்றலாலும், ஒழுக்கத்தாலும் சிறந்தவர்களாகி, தம் பெற்றோருக்குப் பெருமை தேடித் தருவதுடன் இந்த சமுதாயத்தையும் சிறப்படையச் செய்கின்றனர். இங்கு நான் விவரித்த பெண்தான் 'பதிவிரதை'என்றும், இப்படிப்பட்ட பெண்தான் இந்த சமுதாயத்திற்குத் தேவை என்றும் கூறுகிறார் மனு. மனுவின் 'பதிவிரதை' தன் கணவனிடம் பலகுறைகள் இருந்தாலும் அவன் மீது வைக்கும் குறையாத, மாறாத தூய அன்பைத்தான் மஹாகவிகள் முதல் இக்காலக் கவிஞர்கள் வரை "காதல்" என்ற ஒரு புதிய உணர்வாகக் காட்டியிருக்கிறார்கள். மனு சொன்னால் அது பெண்ணடிமைத் தனம் என்கிறார்கள் அதையே கவிஞர்களும் சினிமாக்காரர்களும் சொன்னால் மனம் திறந்து ஏற்றுக்கொள்கிறார்கள்.

குடும்ப நிர்வாகத்துக்குப் போதுமான கல்வி ஒரு பெண்ணுக்கு இருந்தால் அது போதுமானது என்பது மனுவின் கருத்து. அதற்குமேலும் கல்வி அறிவுபெற்று ஆணுக்கு நிகராகப் பெண்ணும் பொதுவாழ்வில் ஈடுபட்டுவிட்டால் குடும்பத்தை யார் நிர்வகிப்பது? குழந்தைகளை யார் வளர்ப்பது? பெற்றதாயைப்போல் ஒரு குழந்தையை மற்றவர்கள் வளர்த்துவிட முடியுமா? (சில இடங்களில் பெற்றதாயால் வளர்க்கப்பட்ட குழந்தை அசடாகவும், மற்றவர்களால் வளர்க்கப்பட்ட குழந்தை நல்லவனாகவும் அமைந்துவிடுகிறது. இது விதிவிலக்கு) வீரனாக இருந்தாலும் அறிவாளியாக இருந்தாலும், பெற்றதாயால் வளர்க்கப்படாத கர்ணன் சேரக்கூடாத இடத்தில் சேர்ந்து, ஸஹவாசதோஷத்தால் அதர்மத்தின் பக்கம் நின்று அழிந்த வரலாறு நமக்குத்தெரியும்.

இன்றைய நவநாகரிக உலகில் கணவனும் வேலைக்குப் போகிறான் மனைவியும் வேலைக்குப் போகிறாள். அவர்களது குழந்தை செவிலித் தாயிடமோ குழந்தைகள் காப்பகத்திலோ வளர்கிறது. மாதம் ஒருமுறையோ, வாரம் ஒருமுறையோ அக்குழந்தையின் பெற்றோர் விருந்தினரைப்போல் அக்குழந்தையைச் சென்று சந்திக்கின்றனர். இந்தக் குழந்தையின் வளர்ச்சி எப்படி இருக்கும்? பெற்றோர் எதிர்பார்க்கும் பண்பு இக்குழந்தையிடம் இருக்குமா? அக்குழந்தைக்கு அப்பெற்றோர்மீது முழுப்பாசம் வருமா? பெரிய

வனுடன் அக்குழந்தை பெற்றோர்களின் நல்லறிவுரைகளைக் கேட்குமா? பெற்றோர் அரவணைப்பில்லாமல் வளர்ந்த குழந்தையின் எதிர்கால வாழ்க்கை சீரழிவுதான். அக்குழந்தையின் சீரழிவுக்குக் காரணம் பெற்றோர்தானே! இதனால்தான் "கணவன் பொது வாழ்க்கையில் ஈடுபடட்டும். வெளியில் சென்று பணம் சம்பாதிக்கட்டும். நீங்கள் குடும்பத்திலிருந்து உங்கள் குழந்தைகளை நல்லபடியாக வளர்த்து அவர்களை இந்த சமுதாயத்தில் சான்றோர்களாக உருவாக்குங்கள்" என்று பெண்களை அறிவுறுத்தினார் மனு.

பெண்களுக்கு மனு சுதந்திரம் கொடுக்கவில்லை என்று எழுதுகிறார் அ.ஹோ. எண்ணம், பேச்சு, உடற்கூறு இவற்றால் ஆண்களின் மனத்தைப் பலவீனப்படுத்திவிடுவது பெண்ணின் இயல்பாதலால், பெண்களுக்கு என்னஎன்ன தேவையோ, அவற்றைத் தேவையான காலங்களில் நிறைவாகக் கொடுத்து அவர்கள் மனம் குளிரும்படி செய்து "நாங்கள் அடிமைகள்" என்ற எண்ணம் அவர்களின் மனத்தில் ஏற்படாவண்ணம் எல்லா சந்தோஷத்தையும் கொடுத்து உங்கள் பாதுகாப்பிலேயே வைத்துக்கொள்ளுங்கள், அவர்கள் எதிர்பார்ப்பது குடும்பத்தில் கிடைக்கவில்லை என்றால்தானே அவர்கள் அதை சுதந்திரமாக வெளியில் தேட முயற்சிப்பார்கள். ஆகவே அந்நிலைக்கு அவர்களைத் தள்ளாமல் உங்கள் வசத்திலேயே வைத்துக்கொள்ளுங்கள். அப்படி இருந்தால்தான் சமுதாயத்தில் ஒழுக்கநிலை உச்சநிலையில் இருக்கும். இல்லையேல் சமுதாயம் ஒழுக்கக் கேட்டால் சீரழிந்துவிடும். இதைத்தான் மனு சொல்கிறார்.

"ஆண்களே! உங்கள் மனைவிகளுக்கு முறையான காலங்களில் தேவையான சந்தோஷத்தைக் கொடுத்து அவர்களைத் தவறு செய்வதிலிருந்து காப்பாற்றுங்கள். அவர்கள் தவறு செய்தால்

அதன்மூலம் உருவாகும் சந்ததியினரால் சமூகம் சீரழிந்துவிடும்'' என்று ஆண்களுக்கு எச்சரிக்கை செய்யும் மனு, ''பெண்களே! உங்கள் கணவன்மார்களிடம் அன்பாக நடந்துகொண்டு அவர்களுக்கு வேண்டிய சந்தோஷத்தை முறையான காலங்களில் கொடுத்து அவர்களைத் தவறு செய்வதிலிருந்து காப்பாற்றுங்கள். அவர்கள் தவறு செய்தால் சமூகம் சீரழியும்'' என்று பெண்களுக்கும் எச்சரிக்கை விடுக்கிறார்.

இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால், ஆண், பெண் இருவருமே தவறு செய்யாமல் ஒழுக்கமுடையவர்களாக இருக்கவேண்டும் என்றும், அப்படி இருந்தால்தான் சமுதாயம் சிறப்பாக இருக்கும் என்றும் மனு கருதியதாகத்தெரிகிறது. மனுவின் இக்கருத்தில் என்ன தவறு?

''பருவமடைந்த பெண் சாகும்வரை கன்னியாக இருந்தாலும் இருக்கலாமேயொழிய, ஒழுக்கம் கெட்ட வரனுக்கு அவளை அவளது தகப்பன் திருமணம் செய்து கொடுக்கக்கூடாது'' (''சாகும்வரை கன்னியாக இருந்தாலும்'' என்று இங்கு குறிப்பிடுவது வரன் பார்க்கும் விஷயத்தில் தந்தை கவனத்துடன் இருக்கவேண்டும் என்பதை வலியுறுத்தவே) என்று கூறும் மனு,

''ஒரு பெண் பருவமடைந்து மூன்று வருட காலத்திற்குள் அவளுடைய தந்தை அவளுக்குத் தகுந்த வரனைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் செய்யாவிட்டால் அப்பெண் தானாகவே தனக்குத் தகுந்த கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அதனால் அவளுக்கு எந்தப் பாபமும் ஸம்பவிக்காது'' என்றும் கூறுகிறார் மனு. பெண்களுக்குக் கொடுத்துள்ள இந்த சுதந்திரம், ''புதுமைப் பெண்கள்'' வாழ்ந்துவரும் இந்தக் காலத்தில்கூட இல்லை என்பதுதான் நடைமுறை உண்மை.

**ப்ருதி₂வி சாந்திரந்தரிக்ஷம் சாந்திர் த்₃யௌ: சாந்திராப: சாந்திரோஷத₄ய: சாந்திர் வனஸ்-பத்ய: சாந்திர் விச்வே மே தேவா: சாந்தி: ஸர்வே மே தே₃வா: சாந்தி: சாந்தி: சாந்தி: சாந்திபி₄: | தாபி₄: சாந்திபி₄: ஸர்வ சாந்திபி₄: ஶமயாமோஹம் யதி₄ஹ கே₄ரம் யதிஹ-க்ரூரம் யதி₃ஹ பாபம் தச்ச₂ாந்தம் தச்சி₂வம் ஸர்வமேவ ஶமஸ்து ந: ||** [அதர்வண வேதம் 19-9]

[இதன் பொருள் :— ''பூமியில் அமைதி நிலவட்டும்; வான வெளியில் அமைதி நிலவட்டும்; வானத்தில் அமைதி நிலவட்டும்; தண்ணீரில் அமைதி நிலவட்டும்; மூலிகைகளில் அமைதி நிலவட்டும்; செடிகொடிகளில் அமைதி நிலவட்டும்; விச்வ தேவர்கள் எனக்கு அமைதி தரட்டும்; எல்லாத் தேவர்களும் எனக்கு அமைதி தரட்டும்; அமைதியால் எல்லா உயிர்களும் அமைதி பெறட்டும்; இந்த எல்லாவிதமான அமைதிமூலம் நான் மங்கலம் பெறுவேனாக. இங்கே எவையெல்லாம் பயங்கரமாகவும் கொடூரமாகவும் பாபமாகவும் உள்ளனவோ அவையெல்லாம் அமைதி பெறட்டும், அவை மங்களமுடையவையாக ஆகட்டும். எல்லாமே நமக்கு மங்களத்தை தரட்டும்.]

இப்படிப்பட்ட மந்திரங்கள் வேதத்தில் ஏராளமாக உள்ளன. உதாரணத்திற்கு ஒன்றை இங்கு எழுதினேன். குறுகிய எண்ணம் கொண்ட, மனசாட்சியற்ற, தாழ்ப்புணர்ச்சிக்கொண்ட சாவித்திரி கண்ணன் போன்ற எழுத்தாளர்கள்தான் வேதங்கள் வெறும் பில்லி சூனியம் என்று எழுதுவார்களே தவிர, மற்றவர்கள் அப்படி எழுதமாட்டார்கள்.

[இராமபாணம் இரண்டாம் பாகம் நிறைவுபெற்றது]

